ஸ்ரீ:

நம்மாழ்வாரருளிச் செய்த

# திருவாய்மொழி - ஒன்பதாம்பத்து

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர் இயற்றிய

திவ்யார்த்த தீபிகையுரையுடன் கூடியது

மூன்றாம் பதிப்பு.

தேவகோட்டை ராஜாஜீ பிரஸ் (பிரைவேட்) லிமிடெட், அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது.

கிடைக்குமிடம் :—

க்ரந்தமாலா ஆபீஸ் — காஞ்சீபுரம்

விலை 2–8–0

| | | |
|---|---|---|
| திருவாய்மொழியாயிரத்துக்கும் தீபிகையுரை | ரூபாய் | 25 |
| முதலாயிரத்திற்கு தீபிகையுரை | ,, | 12 |
| பெரிய திருமொழியாயிரத்திற்குத் திருத்தாண்டகங்களுட்பட தீபிகையுரை | ,, | 15 |
| இயற்பா ஆயிரத்திற்கு | ,, | 12 |

1957

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி—ஒன்பதாம்பத்து.

(ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யர் இயற்றிய

*திவ்யார்த்த தீபிகையுரையுடன் கூடியது.*)

## முதல்திருவாய்மொழி—கொண்ட பெண்டிர்.

உரையவதாரிகை:— கீழே *நெடுமாற்கடிமை யென்கிற திருவாய்மொழியிலே எம்பெருமானடியார்களையே உபாயோபேயங்களான எல்லாமுமாகப் பற்றியிருக்கையாகிற தம்முடைய சிறந்த அத்யவஸாயத்தை வெளியிட்ட ஆழ்வார் அவ்வடியார்களின் திருவுள்ள முகக்கும்படியான அர்த்தத்தையே இத் திருவாய்மொழியில் அருளிச் செய்கிறார். பாகவதர் களை எல்லா வுறவுமென்றது—கீழ்த் திருவாய்மொழி; பகவானை எல்லாவுறவு மென்கிறது இத் திருவாய்மொழி; இவை ஒன்றோடொன்று முரண்பட்டவையென்று நினைக்கவேண்டா: பகவத் பக்தியின் எல்லை நிலமாக பாகவத பக்தியும், பாகவத பக்தியின் எல்லைநிலமாக பகவத் பக்தியும் கொள்ளத்தக்கது. உலகில் ஒரு வ்யக்தியினிடத்திலே நாம் வைக்கும் அன்பு அந்த ஒரு வ்யக்தியளவிலே முடிந்து நிற்காமல் தத்ஸம்பந்தி ஸம்பந்திகளிடத்தும் பெருகிச் செல்வது போல, பகவான் பக்கலிலே வைக்குமன்பு அவனளவிலே நில்லாது அவனுடைய ஸம்பந்த ஸம்பந்தம் பெற்ற பாகவதர்களிடத்தும் வளர்ந்து செல்லுமாயிற்று. அப்படியே பாகவதர் களிடத்தே வைக்குமன்பும் அவர்களோடு ஸம்பந்தம் பெற்றவனென்கிற காரணத்தினாலேயே பகவானிடத்திலும் பெருகும்.

பட்டர் ஸ்ரீகுணரத்ந கோசத்திலே *ஜாமாதா தயிதஸ் தவேதி பவதீஸம்பந்த த்ருஷ்ட்யா ஹரிம் பச்யேம* என்றருளிச் செய்தது இங்கே அநுஸந்தேயம். பெரியபிராட்டி யாருடைய மணவாளன் என்கிற காரணத்தையிட்டே எம்பெருமானையுகப்பதாக இங்குச் சொல்லி நின்றது. *அஸ்யேசாநா ஜகதோ விஷ்ணுபத்நீ* என்று ஓதினபடியே தேவதேவ திவ்யமஹிஷி யென்கிற காரணத்தையிட்டுப் பெரியபிராட்டியாரை யுகப்பதாகச் சொல்லுவது மு ாடே. இவை பரஸ்பரம் முரண்பட்ட பொருள்களல்ல; இரண்டும் பரமார்த்தமே. இது போலவே, பகவத் ஸம்பந்தத்தையிட்டுப் பாகவதர்களை யுகப்பதும், பாகவத ஸம்பந்தத்தை யிட்டுப் பகவானை யுகப்பதும் பொருந்தியதேயாதலால் கீழ்த் திருவாய்மொழியிற் சொன்ன அர்த்தத்திற்கு அவிருத்தமாகவே இத்திருவாய்மொழி செல்லுகின்றதென்று கொள்க.

உலகில் ப்ராக்ருதர்களான ஆபால பந்துக்களையே நம்பியிருப்பாருடைய ப்ரமம் நீங்குமாறு உபபத்திகளுடன் அருளிச்செய்வது இத்திருவாய்மொழி. எந்த நிலைமையிலும் எம்பெருமானொருவனே நிருபாதிக ரக்ஷகனென்றும், நாம் பந்துக்களென்று நினைக்கும்படி யுள்ளவர்கள் (அ) பக்ஷகர்களே யொழிய ரக்ஷகர்களல்லரென்றும் விரிவாக அருளிச்செய்கிறார். கீழ் ஐந்தாம்பத்தில் *சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன்மக்களும் மேலாத் தாய் தந்தையும் அவரேயினியாவாரே* என்கிற பாசுரத்திற்சொன்ன பொருளை விவரிக்கவந்த தாயிற்று இத்திருவாய்மொழி. "ஈச்வரனையொழிந்தவர்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம்" என்று முமுக்ஷுப்படியில் அருளிச்செய்தபடியே ப்ரபந்ந பரித்ராணமென்னும் ரஹஸ்யத்திலே விரிவாகக் காண்கிற விஷயங்களுக்கு இத்திருவாய் மொழியே மூலமாகும்.

இத்திருவாய்மொழியில் பல பாசுரங்களில் "வடமதுரைப் பிறந்த" என்று வருவதால் வடதிசைமதுரையை மங்களாசாஸனம் செய்கிற பதிகமிது—என்றும் கொள்ளலாம். பரோபதேச ரூபமாகச் செல்லுகிறது இது. ... *

கொண்டபெண்டிர்மக்களுற்றார் சுற்றத்தவர்பிறரும் *
கண்டதோடுபட்டதல்லால் காதல்மற்றியாதுமில்லை *
எண்டிசையுங்கீழும்மேலும் முற்றவுமுண்டபிரான் *
தொண்டரோமாயுய்யலல்லால் இல்லைகண்டீர்துணையே. (1)

கொண்ட பெண்டிர் — கொள்ளப்பட்ட மனைவியரென்ன
மக்கள் — வயிற்றிற் பிறந்த பிள்ளைகளென்ன
உற்றார் — ஸஜாதிகளென்ன
சுற்றத்தவர் — பந்துக்களென்ன ஆகிய இவர்களும்
பிறரும் — மற்றுமுள்ள நண்பர் முதலானாரும்
கண்டதோடு பட்டது அல்லால் — கையிலே காசு கண்டபோது நேசித்திருப்பதொழிய
மற்று யாதும் காதல் இல்லை — வேறுவிதமாயச் சிறிதும் நேசித்திருப்பதில்லை: (ஆனபின்பு)
எண் திசையும் கீழும் மேலும் — பத்துத் திசைகளிலுமுண்டான ஸகல சேதனரையும்
முற்றவும் — மற்று மெல்லாவற்றையும்
உண்ட — பிரளயம் கொள்ளாதபடி அமுது செய்து நோக்கின
பிரானை — உபகாரசீலனான ஸர்வேச்வரனுக்கு
தொண்டரோம் ஆய — அடியோமாகி
உய்யல் அல்லால் — உஜ்ஜீவிப்பதொழிய
இல்லை துணை — வேறு [illegible] இல்லை.

***—ஔபாதிக பந்துக்களான களத்ர புத்திராதிகளால் ஒருபயனுமில்லை; அவர்கள் ஆபத்துக்கு உதவார்கள்; நிருபாதிகபந்துவான ஸர்வேச்வரனே ஆபத்பந்து; அவனையேபற்றி யுஜ்ஜீவிக்கப் பாருங்கோளென்கிறார். கொண்ட பெண்டிர்—கொள்ளப்பட்ட பெண்டிர் என்றபடி. உயர்ந்தவுறவாகக் கொள்ளப்பட்ட மனைவி; (அல்லது) பொருள் முதலிய உபாதிகளாலே பரிக்ரஹிக்கப்பட்ட மனைவி. (அல்லது) ஆசார்யனும் பரதேவதையும் செல்வமும் மற்றுமெல்லாம் இவளேயாகக் கொள்ளப்பட்ட மனைவி—என்று பலவகையாகப் பொருள் கூறுவர். கொண்ட என்பதைப் பெண்டிர்க்கு மாத்திரம் விசேஷணமாகக் கொள்ளுகையன்றியே, மக்கள் உற்றார் சுற்றத்தவர்க்கும் அடைமொழியாக்கிப் பொருள் கொள்ளவும் அமையும். பந்துக்களாகத் தான் கொண்டிருக்கும் [நினைத்திருக்கும்] மனைவிமுதலானாரென்றபடி. உற்றார், சுற்றத்தவர் என்ற வகுப்பு விபாகம் — ஸம்பந்திகளாக ஆக்கிக் கொள்ளப்படுகிறவர்களையும் தாயாதிகளையும் பற்ற. ஜன்மஸித்தமான வுறவுடையார் தாயாதிகள்; வந்தேறியான வுறவுடையார் ஸம்பந்திகள் என்று வாசிகாண்க. பிறரும் என்றதனால் நண்பர்கள் அடியார்கள் முதலானாரைக் கொள்வது. ஆக இவர்களெல்லாரும் கையிலே காசுகண்டபோது அதற்காக அன்புகாட்டுகின்றவர்களேயன்றி நிருபாதிகமாக ப்ரீதிவைப்பவர்களல்லர். "கண்டதோடுபட்டதல்லால்" என்றதற்கு இரண்டு வகையாகப் பொருள் கூறுவர்; கையில் காசுகண்டபோது என்பது ஒன்று; நேரில் கண்டபோது என்பது மற்றொன்று. ப்ரத்யக்ஷத்திற்போலவே பரோக்ஷத்திலும் அன்புகாட்டுவாரல்லர் என்றபடி. ஆகவே ஔபாதிகபந்துக்களான இவர்களை யெல்லாம் விட்டொழிந்து நிருபாதிகபந்துவான ஸர்வேச்வரனையே சேஷியாகக் கொண்டு உஜ்ஜீவிக்கப்பார்ப்பதே உற்றதென்கிறார் பின்னடிகளில். ஸர்வேச்வரனே நிருபாதிகபந்து வென்பதற்கு நிரூபகமாக ஓர் இதிஹாஸமருளிச் செய்கிறார் மூன்றாமடியில். மஹாப்ரளயகாலத்தில் உலகங்களையெல்லாம் பிரளயங்கொள்ளாதபடி திருவயிற்றிலே வைத்தருளி நோக்கினனுக நூற்கொள்கை. ஒருவருடைய அபேக்ஷையினுமில்லாமல் தானறிந்த ஸம்பந்தமே ஹேதுவாக ரக்ஷித்தருளுகையாலே அவனே நிருபாதிகபந்துவாவன்; அப்படிப்பட்டவனுக்கு நம்மதாயிருப்பதொன்று கொடுக்கவேண்டுவதில்லை: 'அவனுக்கு அடியோம்' என்று சொல்லிக்கொண்டு உஜ்ஜீவிக்குமத்தனை யென்றதாயிற்று. ... ... (1)

துணையுஞ்சார்வுமாகுவார்போல் சுற்றத்தவர்பிறரும் *
அணையவந்தவாக்கமுண்டேல் அட்டைகள்போல்சுவைப்பர் *
கணையொன்றாலேயேழ்மரமுமெய்த எங்கார்முகிலை *
புணையென்றுய்யப்போகிலல்லால் இல்லைகண்டீர்பொருளே. (2)

சுற்றத்தவர் பிறரும் —தாயாதிகளும் மற்றுமுள்ளாரும்
துணையும் சார்வும் ஆகுவார் போல் — (மெய்யாகவில்லை) துணையாயும் சார்வாயுமிருப்பவர்கள் போல நடித்து
அணைய வந்த ஆக்கம் உண்டேல் — கைக்கு எட்டின ஸம்பத்து உண்டாகில்
அட்டைகள் போல் சுவைப்பர் — அட்டைகள் போலே பசையறச் சுவைத்து விடுவர் (ஆனபின்பு)
கணை ஒன்றாலே —ஓர் அம்பினால்
ஏழ் மரமும் எய்த — மராமரங்களேழையும் துளைபடுத்தின
எம் கார் முகிலை — காளமேக நிறத்தனான எம்பெருமானை
புணை என்று —தஞ்சமென்று கொண்டு
உய்யப் போகில் அல்லால்—உஜ்ஜீவித்துப் போமதொழிய
பொருள் இல்லை — (புறம்பே பிறரைப் பற்றினால்) ஒரு பிரயோஜனமுமில்லை.

*** ஆபாஸபந்துக்கள் உபகாரம் செய்வாரைப்போலேயிருந்து தங்களுக்கு வேண்டிய ப்ரயோஜனங்களைத் தலைக்கட்டிக் கொள்வர்கள்; அவர்கள் நம்பத்தகுந்தவர்களல்லர்; நம்பாதவர்களுக்கும் நம்பிக்கையையுண்டாக்கி ஆபத்ஸகனாகும் ஸர்வேச்வரனைப் பற்றுமதே ப்ரயோஜனமென்கிறது இப்பாட்டு.

சுற்றத்தவர் பிறரும் துணையுஞ்சார்வுமாகுவார் போலிருந்து அணையவந்த ஆக்கமுண்டேல் அட்டைகள்போல் சுவைப்பர்—துணையாவதென்? சார்வாவதென்? என்னில்; ஸுகதுக்கங்களை ஸமமாகக் கொள்ளுகை ஆப்தலக்ஷணமாகையாலே அப்படி ஸுகதுக்கங்களை ஒக்கவநுபவிக்கை துணையாகுகை; வேறு போக்கடியில்லாத நிலைமையில் தாங்களே புகலாகை—சார்வாகுகை. இங்ஙனே துணையுஞ்சார்வுமாகக் கூடிய சுற்றத்தவர் உண்மையில் ஒருவர்கூட இல்லை; அப்படியிருப்பதாக அபிநயிப்பார்களேயுள்ளார்களென்பது "ஆகுவார் போல்" என்பதனால் அறிவிக்கப்படுகிறது. உண்மையில் துணையுஞ்சார்வுமாவான் எம்பெருமானொருவனேயென்பது குறிப்பு. துணையுஞ் சார்வுமாக மாட்டாதவர்கள் அணுகாமல் கடக்க நிற்கலாமே; அப்படி நிற்காமல் 'இவர்கள் ரக்ஷகர்கள்' என்று பிரமிக்கும்படி நெருங்கி வர்த்திப்பர்கள்; அப்படி வர்த்திப்பதற்குப் பயன் யாதெனில்; அணையவந்த ஆக்கமுண்டேல் அட்டைகள்போல் சுவைப்பர்—அணையவந்தவென்றது அணைந்துவந்தவென்றபடி. கைக்கு எட்டும்படியான ஸம்பத்து உண்டாகில், பசையற ரக்தத்தைக் கவர்ந்து குடிக்கும் அட்டைகள்போலே கவர்ந்து கொள்வர்களத்தனை. இதனால், ஆபாஸபந்துக்களின் நட்பு-நம்மிடத்திலுள்ளவற்றை ஏதேனுமொருவழியாலே கொள்ளை கொள்வதற்காகவேயன்றி மற்றொன்றுக்கு அன்று என்றதாயிற்று. ஆகவே, அவிச்வஸநீயர்களான இவர்களை விட்டு விச்வஸநீயர்களில் தலைவனான எம்பெருமானையே துணையாகக் கொள்ளவடுக்குமென்கிறார் பின்னடிகளில்.

ஸுக்ரீவன் இராமனால் அபயப்ரதானம் செய்யப்பெற்ற பின்பும் மனந்தெளியாமல் வாலியின் போராற்றலைப்பற்றிப் பலவாறு சொல்லி, வாலி மராமரங்களைத் துளைத்ததையும் துந்துபியின் உடலெலும்பை ஒருயோஜனை தூரம் தூக்கியெறிந்ததையுங் குறித்துப் பாராட்டிக் கூறி, இவ்வாறு போராற்றலமைந்தவனை வெல்வது கூடுமோ? என்று சொல்ல, அதுகேட்ட லக்ஷ்மணன் உனக்கு நம்பிக்கையில்லையாயின் இப்போது என்ன செய்யவேண்டுவது? என்ன, ஸுக்ரீவன், 'இராமபிரான் நீறுபூத்த நெருப்புப்போலத் தோன்றினும் வாலியின் வலிமையை நினைக்கும்போது சங்கையுண்டாகின்றது; ஏழு மராமரங்களைத் துளைத்து இந்த துந்துபியின எலும்பையும் இருநூறு விற்கடைதூரம் தூக்கியெறிந்தால் எனக்கு நம்புதலுண்டாகும்' என்று சொல்ல; ஸுக்ரீவனுக்கு நம்புதலுண்டாகுமாறு அவனது வார்த்தைக்கு இசைந்து

இராமபிரான் துந்துபியின் உடலெலும்புக் குவியலைத் தனது கால் கட்டைவிரலினால் இலேசாய்த் தூக்கிப் பத்துயோஜனை தூரத்துக்கு அப்பால் எறிய, அதனைக்கண்ட சுக்ரீவன் 'முன்பு உலராதிருக்கையில் வாலி இதனைத் தூக்கி யெறிந்தான்; இப்போது உலர்ந்துபோன இதனைத் தூக்கியெறிதல் ஒரு சிறப்பன்று' என்று கூற, பின்பு இராமபிரான் ஒரு பாணத்தை ஏழு மரங்களின்மேல் ஏவ, அது அம்மரங்களைத் துளைத்ததோடு ஏழுலகங்களையுந் துளைத்துச் சென்று மீண்டு அம்பறாத் தூணியையடைந்ததென்பது, கணையொன்றாலே யேழ்மராமரமெய்த வரலாறு. 'நம்மை ரக்ஷிப்பனோ மாட்டானோ' என்று அடியாருக்குச் சங்கைபிறந்தால், அந்த சங்கையைப் போக்கி அரியன செய்தும் அடியாரைக் காத்தருள்பவன் என்ற மஹாகுணம் இந்தச் சரிதையினால் விளங்கும். இப்படி அரியன செய்து நம்பிக்கையையுண்டாக்கி அடியாரைக் காத்தருளவல்ல பெருமான் நிற்க, இவனையே துணையாகவும் சார்வாகவும் பற்றவேண்டியிருக்க, அணையவந்தவாக்கமுண்டேல் அட்டைகள்போல் சுவைக்கின்ற பொய்யுறவினரைப் பற்றியொழிவதே! என்ற நிர்வேதம் வெளிப்படுமாறு அருளிச் செய்தாராயிற்று.

எம்பெருமானுடைய மஹத்தான ஔதார்யத்தையும், கைம்மாறு கருதாது அருள புரியுந் தன்மையையுங் கணிசித்து எங்கார் முகிலே என்றார். 'புணையென்று' என்றதனால் "என் காரியம் உனக்கே கடமை" என்று ஒரு வாய்ச்சொல் சொன்னமாத்திரத்தில் உஜ்ஜீவிக்க ப்ராப்தமாகும் என்பது தொனிக்கும். மனமொழி மெய்களாகிற முக்காரணங்களில் மொழியாகிற ஒரு காரணமே அமையுமென்றதாயிற்று. ... ... ... (2)

பொருள்கையுண்டாய்ச்செல்லக்காணில் போற்றியென்றேற்றெழுவர் *
இருள்கொள்துன்பத்தின்மைகாணில் என்னேயென்பாருமில்லை *
மருள்கொள்செய்கையசுரர்மங்க வடமதுரைப்பிறந்தாற்கு *
அருள்கொளாளாயுய்யலல்லால் இல்லைகண்டீரரணே. (3)

| | |
|---|---|
| கை பொருள் உண்டாய் செல்லகாணில் | கையிலே பொருள் நடையாடக் கண்டால் |
| போற்றி என்று ஏற்று | மங்களா சாஸனஞ் செய்து ஏதேனும் ஒன்று பெற்றுக்கொண்டு |
| எழுவர் | —அகன்று போவர்கள்; |
| இருள் கொள் துன்பத்து இன்மை காணில் | அஜ்ஞானத்தையும் துன்பத்தையும் விளைக்கக் கடவதான தரித்ரந் தன்மையைக் கண்டார்களாகில் |
| என்னே என்பாரும் இல்லை | ஐயோ வென்பாருமில்லை; |
| | (ஆனபின்பு) |
| மருள்கொள் செய்கை அசுரர் மங்க | பிராணிகளை கலங்கும்படியான ப்ரவ்ருத்திகளை யுடைய அசுரர் தொலையும்படியாக |
| வடமதுரை பிறந்தாற்கு | வடமதுரையிலே வந்து பிறந்த கண்ணனுக்கு |
| அருள்கொள் ஆள் ஆய | க்ருபா பாத்ர பூதர்களான தாஸர்களாய்க் கொண்டு |
| உய்யல் அல்லால் அரண் இல்லை | உஜ்ஜீவித்தலே யன்றி வேறு புகல் இல்லை. |

***—ஸம்ஸாரிகள் ஸ்வப்ரயோஜனமே கண்ணாயிருப்பவர்களாதலால் அந்த ஸ்வப்ரயோஜனத்திற்காக நேசத்தை அபிநயிப்பவர்களே யல்லது அதற்கு வழியில்லை யென்றால் அணுகவும்மாட்டார்கள்; ஆகவே அன்னவர்களிடத்துப் பற்று விடத்தக்க தென்கிறாரிப் பாட்டில். "பைத்தியக்காரனைச் சுற்றிப் பத்துப்பேர்; பணக்காரனைச் சுற்றிப் பதினாயிரம்பேர்" என்றொரு பழமொழியுண்டே; ஒருவன் கையில் பொருளுள்ளதாகத் தெரியவந்தால் அதைப் பறிக்கவேண்டி வந்து சேர்வாருளர்; வரும்போதே போற்றி பல்லாண்டு ஜிதம் தே என்று கள்வப் பணிமொழிகளைக் கூறி அபரிமிதமான ஆதரவை அபிநயிப்பர்கள்; உனக்கு இன்னமும் கீழ்ச்சீரை பெருகவேணுமப்பா! என்பர்கள்; தங்களுக்கொரு ப்ரயோஜனத்தில் கருத்தில்லைபோலவும், அவனுக்கு மேன்

மேலும் ஸம்ருத்திகள் பெருகுவதே தங்களுக்குப் பரமானந்தமபோலவும் காட்டிப் பேசுவர்கள்; அவனும் இவற்றைக் கேட்டு மயங்கி "இப்படி நம்முடைய பெருநதியை தனக்கு ப்ரயோஜனமாயிருப்பானொருவனுண்டாவதே!" என்று மனம் பொங்கிக் குளிர நோக்குவன்; 'நம வலையில் அகப்பட்டுவிட்டானிவன்' என்று நிச்சயித்து அல்பமுதலாகவே பொருளைப் பறிக்கத் தொடங்குவர்கள். "ஜீவாக்ரஹணே நம்ரா: க்ருஹீத்வா புநருந்நதா:, கிம் சநிஷ்டா: கிமு ந்யேஷ்டா: சமயந்த்ரஸ்ய துர்ஜநா:" என்றான் ஒரு மஹாகவி; ஏற்றசாலும் துர்ஜநரும் ஒரே வகுப்பாம்; ஏற்றசாலானது தனக்கு ஜீவனம் [தண்ணீர்] வேண்டும்போது தாழ்ந்து நின்று ஜீவனம் கைப்பட்டவாறே தலையெடுப்பதொன்று: அப்படியே துர்ஜநரும் தமக்கு ஜீவனம் வேண்டும்போது தலை தாழ்ந்திருந்து அது பெற்றவாறே தலையெடுப்பது இயல்பு. அதுவேதானறோ இங்கு ஆழ்வார் "போற்றியென்றேற்று எழுவர்" என்றருளிச்செய்வதாகும். பொருள் கைப்பட்டுவிட்டால் பிறகு ஒருநொடிப்பொழுதும் அங்குத் தங்கியிருக்கமாட்டாது, உடனே கழன்று செல்வரிவர் என்க.

துன்மைகாணில் என்னேயென்பாருமில்லை—மையிலுள்ளதெல்லாம் போய் வறுமை யுண்டானவாறே 'ஐயோ பாவமே' என்கிற இரக்கச்சொல் கூட வாயில்வரமாட்டாது. இவ்விடத்தில் பிள்ளை திருநறையூரரையர் பணிப்பாராம்;- ப்பாளர்களுக்கு தேட்டகாத்ர ஞான் ஒரு தனிசல்; அவனுடைய ஸர்வஸ்வத்தையுங்கொண்டு செல்வம் பெற்றவர்களுண்டே; அவர்கள் இந்த தரித்ரனுடைய 'ஏனப்பா! ஸௌக்கியமா?' என்று வினவினால் அப்படி வினவின மாத்திரத்திலே அவனை ஒருமதிப்புடன் ஜீவிக்கும்படியாயிருக்குமென்று வைத்துக் கொள்வோம்; அதையும் பொறுத்தே அப்படிப்பட்ட குசலப்ரச்னமும் செய்யார்கள்—என்று, "என்னேயென்பாருமில்லை" என்பதற்கு இது சுவைமிக்கபொருள்.

இனி பின்னடிகளால் எம்பெருமானே ஆபத்பந்து என்னுமிடம் வெளியிடப் படுகிறது. தனிசான நிலைமையிலே வந்து போற்றுவதும், தரித்ரரான நிலைமையிலே கைவிடுவதுமாயிருப்பாரான ஸம்ஸாரிகளைப் போலன்றியே ஆகிஞ்சந்யமே பற்றாசாக ரக்ஷிக்குமவனன்றோ எம்பெருமான். "பொருள் கையுண்டாய்ச் செல்லக்காணில் என்றும் ஆச்ரிதருடைய ஆபத்தைப் போக்குகைக்காக அகர்மவச்யனான தான் வந்தவதரித்து உதவுவானொருவனுண்டன்கிறது மேலே" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. மருள்கொள் செய்கையசுரர் மங்க—தேவப்ரக்ருதிகளாயிருப்பாருடைய நெஞ்சிலே இருள் குடிபுகும்படியான செய்கைகளைச் செய்பவர்களாம் ஆஸுரப்ரக்ருதிகள்; அன்னவர்கள் மடியும்படியாக, ஒருவர் அபேக்ஷியாதிருக்கத் தானேவந்து அவதரித்து ரக்ஷிக்குமவனாயிற்று எம்பெருமான். அப்பெருமானுக்கு நாம் செய்யவேண்டுவதென்னென்னில்; [அருள்கொளாளாய்] 'அருளாய்' என்று அவனை நோக்கிப் பிரார்த்திக்கவேண்டா; எம்பெருமான் தானே அருள்செய்ய, அதை விலக்கிக்கொள்ளாதிருந்தால் போதும். அப்படிப்பட்டவர்களுக்கு 'அருள்கொளாளர்' என்று பெயர். அப்பெயரை வஹிக்குமடியவர்களாகி உஜ்ஜீவித்துப் போவது நன்று; வேறுவிதமாக உய்ய விரகில்லையென்றாராயிற்று. * அருள்கொளாளாயென்றவிடத்து ஈட்டு ஸ்ரீஸூக்திகள் சாஸ்த்ரார்த்த ஸாரமே வடிவெடுத்தவை; அந்த ஸ்ரீஸூக்திகளாவன:—"அவனுக்கு நாம் செய்யவேண்டுவதென்னென்னில்; (அருள்கொளித்யாதி.) க்ருபாபாத்ரமான சேஷபூதராய்க் கொண்டு உஜ்ஜீவிக்கிலல்லது. அவன் பண்ணுமருளை விலக்காதொழியுமத்தனையே வேண்டுவது. தன்னருள்கொள்வாரை * உதாரா:* என்னுமவனிறேயவன். இவன்பக்கல் இதுக்கு மேற்படக்கொள்ளலாவதில்லை; அவனுக்கும் இதுக்குமேல் செய்யவேண்டுவதில்லை, பூர்ணனாகையாலே. ஸம்பந்தமோ ஸ்வாபாவிகமாயிருந்தது; இவன் புகுராநின்ற அம்சமுண்டாகில் தன்பேறாக நினைத்திருக்குமவனாயிருந்தான். இனி விலக்காமையிறே வேண்டுவது."

இல்லைகண்டீர் அரணே—ரக்ஷகமாகக் கூடியது கீழ்ச்சொன்னதொன்றே; மற்றதெல்லாம் அனர்த்தத்தோடே தலைக்கட்டுமித்தனையென்க. ... (3)

அரணமாவரற்றகாலைக்கு என்றென்றமைக்கப்பட்டார் *
இரணங்கொண்ட தெப்பராவர் இன்றியிட்டாலுமஃதே *
வருணித்தென்னே வடமதுரைப்பிறந்தவன்வண்புகழே *
சரணென்றுய்யப்போகிலல்லால் இல்லைகண்டீர்சதிரே. (4)

| | | | |
|---|---|---|---|
| அற்ற காலைக்கு அரணம் ஆவர் என்று என்று | கைம்முதலற்ற காலத்திற்குப் புகலாகக் கூடுமென்று பல காலும் சிந்தித்து | வருணித்து என்னே | (இப்படி) நன்றி கெட்டவர்களைப்பற்றிச் சொல்வி என்ன பயன்? |
| அமைக்கப்பட்டார் | வசப்படுத்திக் கொள்ளப்பட்டவர்கள் | வடமதுரை பிறந் | வடமதுரையிலே வந்து பிறந்த கண்ணபிரானுடைய |
| இரணம் கொண்ட தெப்பர் ஆவர் | கடனை இறுத்துக் கொண்டவர்கள் போல் ஆச்சரா யொழிவர்கள்; | வண் புகழே சரண் என்று உய்யப் போகில் அல்லால் | சீலம்முதலிய குணங்களையே தஞ்சமென்றுகொண்டு உஜ்ஜீவிக்கப்போமதொழிய |
| இன்றி இட்டாலும் | பச்சை யிடாவிட்டாலும் | | |
| அஃதே | அவர்களின் உதவாமை உள்ளதே | சதிர் இல்லை | —வேறு கதி பாடு இல்லை. |

*** சிலரை ஆபத்துக்கு உதவுமவர்களாகக் கொண்டு நெடுநாள் ஆராதித்தால் அவர்கள் அவ்வாராதனைகளையெல்லாம் பெற்றிருந்து ஆபத்துவந்தவாறே கண்ணற்று உபேக்ஷிப்பர்கள்; அப்படியன்றிக்கே நிர்ஹேதுகமாகவந்து அவதரித்து ஆபத்ஸகனானவனே ஆச்ரயிக்கத் தக்கவனென்கிறாரிப்பாட்டில்.

அற்றகாலைக்கு அரணமாவர் என்றென்று அமைக்கப்பட்டார் = 'அற்றகாலைக்கு' என்றது கைம்முதலற்ற காலத்திற்கு என்றபடி. 'இப்போது நாம் செல்வம் மிக்கவர்களாக இருந்தாலும் *வாழ்ந்தார்கள் வாழ்ந்தே நிற்பதில்லையாதலால் ஒருகால் நமக்கு வறுமை நேருமாயின் அப்போது உதவுவர்கள்' என்றெண்ணிச் சிலரிடத்தே பொருளைச் சேமிக்க இட்டு வைப்பாருண்டே; அது சொல்லுகிறது இங்கு. தைத்திரீயஸம்ஹிதையில் முதற் காண்டம் ஐந்தாவது ப்ரச்நத்தின் தொடக்கத்தில், *தேவாஸுராஸ் ஸம்யத்தா ஆஸந், தே தேவா விஜய முபயந்த: அக்நௌ வாமம் வஸு ஸம்ந்யததத, இதமுநோ பவிஷ்யதி யதி நோ ஜேஷ்யந்தீதி * என்று ஓர் உபாக்கியானம் ஓதப்பட்டுள்ளது; தேவர்களும் அசுரர்களும் போர்புரிந்து கொண்டிருந்த காலத்துத் தேவர்களுக்கு வெற்றியுண்டாயிற்றாம்: அப்போது அத்தேவர்கள் 'மற்றொருகால் நமக்குத் தோல்வியுண்டானால் அப்போது உபஜீவிக்க இருக்கட்டும்' என்று நினைத்துத் தங்களுடைய சிறந்த செல்வத்தை அக்நிதேவதையிடத்து இட்டுவைத்தார்களாம். அந்த தேவதை அதனைக் கொள்ளைகொண்டு அகன்றதாம். அக்கதையை இங்கு நினைப்பது.

இப்படி, அற்றகாலைக்கு அரணமாவரென்று கருதி ஆராதிக்கப் பெற்றவர்கள் அக் கருத்தின்படி ஆபத்துக்கு உதவுகிறார்களோவென்னில்; இரணங்கொண்ட தெப்பராவர்— தங்களுக்கு ஏதோ கடன் செலுத்தவேண்டியிருந்து அதனைச் செலுத்தினதாக நினைத்துக் கிடப்பர்களே யல்லது சிறிதளவும் உதவிபுரியார்கள்.' சக்தியற்ற நாளிலுங்கூட 'இவன் நம்மை இப்போது ஆராதிக்கவில்லையே' என்று வெறுத்துமிருப்பர்கள். இரணம் — 'ருணம்' என்னும் வடசொல்லின் விகாரம். தெப்பர்—தப்ரர் என்பது வடசொல்; புல்லியர் என்றபடி.

இன்றியிட்டாலும் அஃதே = ஏற்கெனவே பச்சையிட்டு ஆராதியாமற் போனாலும் ஆபத்து வந்தால் கைவிடுவார்தாம் உளர் என்றபடி. இங்கே ஈடு:—"அன்றிக்கே, இப்படியே இப் பச்சையிட்டவன் நமக்கு ரக்ஷகனென்று ஆராதியா நிற்கச் செய்தே நடுவே இவன் முடிவது, அப்போதும் கீழ்ச்சொன்னதுவே பலிதமாயிற்றனே."

வருணித்து என்னே! = நன்றிகெட்டார்களான உலகத்தாரின்படியை வருணிப்பதற்கோ நாம் வாய் படைத்தது! என்று அதைவிட்டு ஸர்வரக்ஷகன்படியைப் பேசவொருப்படுகிறார். இவ்விடத்தில் *ந தேம்பா மத்யமா தாத! கர்ஹிதவ்யா கதஞ்சந, தாமேவ இக்ஷ்வாகு நாதஸ்ய பரதஸ்ய கதாம் குரு* என்று இளைய பெருமாளை நோக்கிப் பெருமாளருளிச்செய்த ச்லோகம் ஈட்டில் இன்சுவை மிக வியாக்கியானிக்கபபட்டுள்ளது ஸேவிக்கத்தக்கது.

[ வடமதுரைப் பிறந்தவன் இத்யாதி. ] நிர்ஹேதுகமாக உபகாரம் செய்தருள்பவனுடைய ஸௌசீல்யம் முதலிய கல்யாண குணங்களை நமக்கு ரக்ஷகமென்று எண்ணி உஜ்ஜீவித்துப் போமதொழிய வேறொன்றும் நம்க்குத் தஞ்சமன்று என்றாராயிற்று. "இல்லை கண்டீர் சதிரே" என்றவிடத்து; ஈட்டில்—"நெற்றி பெருத்துப் பலமொன்றுமின்றிக்கேயிருக்குமென்னுமது இளிம்பிறே; நெற்றி அல்பமாய் பலம் கனக்கப்பெறுமதிறே சதிராவது; *நமவென்னவிறே நெற்றி; *சமண்கொள்வீடிறேபலம்" என்கிற ஸ்ரீஸூக்திகளுள்ளன. இங்கு நெற்றியாவது ப்ரயாஸம். நேர்த்தி என்கிற சொல்லை பூருவர்களால் எழுதப்பட்டிருந்ததென்றும், பின்புள்ளவர்களால் அச்சொல் நெற்றியென்று திரித்து எழுதப்பட்டதென்றும் சிலர் சொல்லுவர்; நெற்றி, நேர்த்தி, நேர்ச்சி என்று மூவகைச் சொற்களும் ப்ரயாஸமென்னும் பொருளில் வருவன வென்பர் பலர். ... ... ... (4)

சதிரமென்றுதம்மைத்தாமே சம்மதித்தின்மொழியார் *
மதுரபோகம்துற்றவரே வைகிமற்றொன்றுறுவர் *
அதிர்கோள்செய்கையசுரர்மங்க வடமதுரைப்பிறந்தாற்கு *
எதிர்கோளாளாயுய்யலல்லால் இல்லைகண்டீரின்பமே. (5)

| | |
|---|---|
| சதிரம் என்று | சதிரையுடையோமென்று |
| தம்மை தாமே சம்மதித்து | தம்மைத் தாங்களே பஹுமானித்துக் கொண்டு |
| இன்மொழியார் | வெறும் பேச்சினிமையையுடையரான மாதர்களினுடைய |
| மதுரபோகம் | —இனியபோகங்களை |
| துற்றவரே | —அநுபவித்தவர்களே |
| வைகி | —மற்றொரு காலத்திலே |
| மற்று ஒன்று உறுவர் | வாய்கொண்டு சொல்லவொண்ணாத அவமானங்களை அடைவர்கள்; |

| | |
|---|---|
| | (ஆனபின்பு) |
| அதிர் கொள் செய்கை அசுரர் மங்க | அஞ்சவேண்டுஞ் செய்கைகளையுடைய அசுரர்கள் தொலையும்படி |
| வடமதுரை பிறந்தாற்கு | வடமதுரையிலே வந்து பிறந்த கண்ணபிரானுக்கு |
| எதிர்கொள் ஆள் ஆய் | ஆபிமுக்யம் பண்ணுமடியவர்களாகி |
| உய்யல் அல்லால் | —உஜ்ஜீவித்துப் போமதொழிய |
| இன்பம் இல்லை | —(வேறுவழியில்) சுகமில்லை. |

***—மாதர்களால்படும் அவமானங்களை யெடுத்துரைத்து எம்பெருமானுக்கு ஆட்பட்டு உய்வதே உய்வு என்கிறாரிப்பாட்டில். [ தம்மைத்தாமே சதிரமென்று சம்மதித்து ] 'சம்மதித்து' என்கிறவினையெச்சம் 'மதுரபோகம் துற்றவரே' என்றதில் அந்வயிப்பதாதலால், தம்மைத்தாமே சதிரமென்று சம்மதிப்பவர் ஆண்களேயாவர்கள்; "சம்மதித்தின்மொழியார்" என்றவிடத்துத் தொகுத்தலாகக்கொண்டு 'சம்மதித்த இன்மொழியார்' என்று பிரித்து, சம்மதித்தவென்று பெயரெச்சமாக்கி இன்மொழியார்க்கு அடைமொழியாக அந்வயித்து, தம்மைத்தாமே சதிரமென்று சம்மதிப்பவர் இன்மொழியாரான பெண்கள் என்று சிலர் கூறுவர். அதிற்சுவையொன்று மறிகின்றிலோம். ஆடவர் வாழ்ந்தகாலத்தில் சதிர்கேடாக வாழ்ந்தாலுங்கூட 'நாம் சதிராக வாழாநின்றோம்' என்று தங்கள் வாழ்ச்சியைத் தாங்களே உகந்துகொண்டிருந்து பெண்களோடே போகங்களை அநுபவித்துக்கொண்டிருக்

தவர்கள் தாமே, வைகி மற்றொன்று உறுவர்—வயதும் தொலைந்து பொருளும் தொலைந்தவாறே வாய்கொண்டு சொல்லவொண்ணாத அவமானங்களையடைவர்கள் என்றபடி. [இன்மொழியார்] *மதுதிஷ்டதி வாசி யோஷிதாம் ஹ்ருதி ஹாலாஹலமேவகேவலம் * என்றான் ஒரு மஹாகவி. இங்கு நம்பிள்ளையீடு :—"அகவாய் மயிர்க்கத்தியாயிருக்கச் செய்தேயும் ப்ரணய ஸரஸமான பேச்சாலே வசிகரிக்கவல்லவர்கள." என்று.

வைகி மற்றொன்று உறுவர் என்றவிடத்து நம்பிள்ளையீட்டின் சுவை வாசாமகோசரம்; சாஸ்த்ரார்த்தங்களைமாத்திரம் அற்புதமாக அருளிச்செய்பவரல்லர்; லௌகிக விஷயங்களையும் அப்படியே கிமர். அந்த ஸ்ரீஸூக்திகளைக் காண்மின் :—"[வைகி மற்றொன்றுறுவர்]" போகத்துக்குப் பாங்கான யௌவனமும் அதுக்குக் கைம்முதலான த்ரவ்யமும் போமே; பின்னையும் ஆசைமாறாதே; வருவார்க்கும் விரோதியாய் அவ்விடங்களிலே போயிருக்கும்; முற்பட (*) மணிச்சிலே நாலிரண்டு பண்ணை 'போகலாகாதோ' என்பர்களே; போகிறோம போகிறோமென்றிருக்குமே போகாதே; பின்னை வெள்ளாட்டியையிட்டுப் பரிபவிப்பர்கள்; அதுக்கும் போகானே; பின்னை ஆணையிட்டெழுப்பிப் பார்ப்பர்கள்; அதுக்கு மெழுந்திரான்; பின்னை காலைப்பற்றியிழுப்பர்கள்; இவன தூணைக்கட்டிக்கொள்ளும்; இப்படியால் அவர்களாலே பரிபூதராவர்கள். விபாகத்தில் பிறக்கும் பரிபவத்தை யநுஸந்தித்து அது தம் வாயாலருளிச் செய்யமாட்டாமையாலே மற்றொன்று என்கிறார்" என்று.

வெறும் சாஸ்த்ரார்த்தங்களையா யிருந்தால் காலக்ஷேபபரர்கள் தூங்கிவிழுவர்களென்று ஆசார்யர்கள் இப்படிப்பட்ட ரஸோக்திகளையும் இட்டுவைக்கிறார்கள். இவ்வளவு ரஸோக்திகளுக்கும் மூலம் இடந்தந்திருக்குமழகு காண்மின்.

"ப்ராக்ருதர்கள் நமக்கு ரக்ஷகரல்லர்; எம்பெருமானொருவனே ரக்ஷகன்" என்னுமிடத்தையருளிச் செய்துவரும் இப்பதிகத்தில் இப்பாசுரத்திற்கு என்ன ப்ரஸக்தியென்று சங்கிப்பர் சிலர்; ஆசார்ய ஹ்ருதயத்தில் நாலாம் ப்ரகரணத்தில் ஒன்பதாம்பத்தின் தாத்பர்ய ஸாரத்தைச் சுருக்கியருளிச் செய்கிற சூர்ணையிலே "இம்மடவுலகர் கண்டதோடொட்ட அபாந்தவ அரக்ஷக அபோக்ய அஸுக அநுபாய ப்ரதிஸம்பந்தியைக் காட்டி" என்றருளிச் செய்திருப்பது கண்டு தெளியவேணும். 'பிறர் ரக்ஷகரல்லர், எம்பெருமானே ரக்ஷகன்' என்கிற விஷயம் மாத்திரமன்று இப்பதிகத்திற் சொல்லப்படுவது; கேண்மின்; கண்ணெதிரே நேசிப்பதொழிய, காணாதபோது நேசமொன்றுமின்றிக்கேயிருக்கிற களத்ர புத்ராதிகள் பந்துக்களன்று; ப்ரளயாபத்ஸகனானவனே பரமபந்து என்பதை முதற்பாட்டில் நிரூபித்தார்; ஸம்ஸாரிகள் தாங்கள் உபகாரகரைப்போலே ப்ரயோஜனமுள்ளபோது பந்துக்களாய்க் கொண்டாடி ஆபத்து வந்தவாறே கண்ணற்று உபேக்ஷிப்பர்களாகையாலே அவர்கள் ரக்ஷகரல்லர்; தன்னுடைய ரக்ஷணத்திலே அதிசங்கை பண்ணினாரையும் விச்வஸிப்பித்து ரக்ஷிக்குமவனாய் அவதார முகத்தாலே ஸுலபனாய் ரக்ஷணத்திற்கேற்ற குணங்களையுமுடையவனான எம்பெருமானே ரக்ஷகனென்பதை இரண்டு மூன்று நான்காம் பாட்டுக்களிலே நிரூபித்தார்; தங்களுக்கு போக்யைகளாக ஸம்பாதித்த ஸ்த்ரீகள் பிராயம் கழிந்தவாறே உபேக்ஷிப்பர்கள்; எப்போதும் ஒருபடிப்பட ஸ்நேஹித்திருப்பான் எம்பெருமானொருவனே; ஆகவே அவர்கள் போக்யரல்லர்; இவனே பரமபோக்யன் என்னுமிடம்

(*) மணிச்சிலே யென்றது—ஸாமான்யமாய் கௌரவமாக என்றபடி. நாலிரண்டு பண்ணையென்றது நாலிரண்டுதடவை யென்றபடி. முதலிலேயே அவமதித்துப் பேசாமல், போகலாமோ போகலாமே யென்று சிலதடவை ஸாமான்யமாகச் சொல்லிப் பார்ப்பர்களென்கை.

இப்பாட்டில் நிரூபிக்கப் படுமதாகையாலே, எடுத்துக்காட்டின சங்கைக்கு இடமில்லையென்க. எம்பெருமானைப்பற்றுவதே ஸ்வரூபமென்பதும், இதுவே உபாயமென்பதும் மேற்பாட்டுக்களில் நிரூபிக்கப்படும்.

இனி, பின்னடிகளால் எம்பெருமானைப் பற்றுவதே பரமபோக்யமென்கிறது. அதிர்கோள்செய்கையசுரர்—பிராணிகளின் நெஞ்சுகள் அதிரும்படியான செய்கைகளையுடைய அசுரவர்க்கம்; அது முடியும்படியாக வடமதுரையிலே வந்து திருவவதரித்தவனுக்கு. எதிர்கோளாளாய்—அவன்தானே மேல்விழுந்துவாராநின்றால் வைமுக்யம் பண்ணியொழியாமே வருகவருகவென்று சொல்லி ஆபிமுக்யம் காட்டுவதே எதிர்கொளாளாதல். இங்கே நம்பிள்ளையீடு; "அவனுக்கு நாம் செய்யவேண்டுவது இது; அவன்தானே மேல்விழாநின்றால் விமுகராகா தொழியுமத்தனையே வேண்டுவது" என்று.

த்ருதராஷ்ட்ரன் ஸஞ்ஜயனோடு சொன்னனும் "பாண்டவபக்ஷபாதியான க்ருஷ்ணன் வருகிறான், அவனுக்குச் சில பொருள்களைத்தந்து அவனை நமக்கு வசப்படுத்திக்கொள்ளுவோம்" என்று. இதைக்கேட்ட ஸஞ்ஜயன் 'அப்பா! வருகிறவனை அப்படிப்பட்டவனாகவா நினைத்துவிட்டாய்? அவனுக்கு வேண்டுவது இன்னதென்று அறியாயோ; [அந்யத் பூர்ணாத் அபாம் கும்பாத் அந்யத் பாதாவநேஜநாத், அந்யத் குசலஸம்ப்ரச்நாத் ந சேச்சதி ஜநார்தந:.] அவரவர்கள் தாம் குடிக்குந்தண்ணீரைக் குளிரவைப்பதுண்டே; அதுதன்னை அவன் வருகிறவழியிலே வைப்பது, அதிதிகள் வந்துபுகுந்தால் கால்கழுவுவதாக ஸாமாந்யசாஸ்த்ரம் விதித்தவளவு அவன் விஷயத்தில் செய்வது; அதாவது குடத்தில் நீரையிட்டு அவன் திருவடிகளை விளக்குவது; பல்லாண்டு பாடுவது ஆக இதற்கு மேற்பட அவன் திறத்துச் செய்யலாவதில்லை; அவனும் இவ்வளவுக்கு மேற்பட வேறொன்றும் விரும்புவானல்லன்—என்றான். இவைசெய்து தலைக்கட்டவேணுமென்பதுமில்லை; செய்யவேணுமென்று நெஞ்சினால் கோலினாலும் போதும். "ஆபிமுக்யஸூசகமாத்ரத்திலே ஸந்தோஷம் விளையும்" என்பது ஸ்ரீவசநபூஷணம். அப்படிப்பட்ட அதிகாரிகளை நோக்கியே இங்கு எதிர்கோளாளாய் என்றது.

இல்லைகண்டீரின்பமே = இங்கே ஈடு; "துக்கங்களிலே சிலவற்றை ஸுகமென்று ப்ரமிக்கிறவித்தனைபோக்கி இதொழிய ஸுகரூபமாயிருப்பதொன்றில்லை. உயிர்க்கழுவிலேயிருக்கிறவனுக்கு பிபாஸையும் வர்த்தித்து தண்ணீருங்குடித்து தாஹமும் சமித்தால் பிறக்கும் ஸுகம் போலேயிருப்பதொன்றிறே ஸம்ஸாரிகளுக்கு போகத்தால் பிறக்கும் ஸுகமாகிறது. ஆடுகிற பாம்பின் நிழலிலேயொதுங்கி, அது அள்ளிக்கொள்ளுமென்றறியாதே வெய்யிலைத்தப்பப்பெற்றோமென்று ஹ்ருஷ்டராயிருப்பாரைப்போலேயிறே விஷயாநுபவத்தாலே களித்திருக்கிறவிருப்பு இவனுக்கு." ... ... (5)

இல்லைகண்டீரின்பமந்தோ உள்ளதுநினையாதே*
தொல்லையார்களெத்தனைவர் தோன்றிக்கழிந்தொழிந்தார்*
மல்லைமூதூர் வடமதுரைப்பிறந்தவன் வண்புகழே*
சொல்லியுய்யப்போகிலல்லால் மற்றொன்றில்லை சுருக்கே. (6)

| | | | |
|---|---|---|---|
| இன்பம் இல்லை! கண்டீர் | (இவ்வுலகில்) சுகமே யிருப்பதொன்று இல்லைகிடீர்; | தொல்லையார்கள் | பழைய காலத்திலிருந்தவர்கள் |
| அந்தோ | ஐயோ! இதை நாமெடுத்துச் சொல்ல வேணுமோ? | எத்தனைவர் | எத்தனை பேர் |
| உள்ளது நினையாதே | சாச்வதமான புருஷார்த்தத்தை நினையாதே | தோன்றிகழிந்து ஒழிந்தார் | ஜன்மமரணங்களை யாத்திரையாய்ப் போனார்கள்!; (அன்னவர்கள் கணக்கற்றவர்கள்;) (ஆனபின்பு) |

| | | | |
|---|---|---|---|
| மல்லை மூதூர் வடமதுரை | செல்வம் மிகுந்த புராதனமான வடமதுரையிலே | உய்ய போகில் அல்லால் | உஜ்ஜீவித்துப் போமதொழிய |
| பிறந்தவன் | வந்து பிறந்த கண்ணபிரானுடைய | சுருக்கு | சுருங்கச்சொல்லும் வழி |
| வண் புகழே சொல்லி | உதாரமான திருக்குணங்களையே கீர்த்தனம் பண்ணி | மற்று ஒன்று இல்லை | வேறொன்றுமில்லை. |

எம்பெருமானே பரமபுருஷார்த்தம் என்பதுணராதே முன்னே கழிந்த பலர் பாழாய்ப் போயினர்; நீங்களும் அங்ஙனே நசித்துப் போகாமே வடமதுரைப்பிறந்த பெருமானுடைய திருக்குணங்களைச் சொல்லி உய்யப்பாருங்கள்; இது தவிர வேறு ஹிதமில்லை ஆத்மாவுக்கு என்கிறாரிப்பாட்டில். பாட்டுத்தொடங்கும்போதே இல்லை கண்டீரின்பமந்தோ! என்கிறார். கெடுவிகாள்! துக்கமயமான ஸம்ஸாரநிலத்தில் ஸுகாபாஸமுள்ளதேயல்லது உண்மையான ஸுகம் லவலேசமுமில்லை கிடீர் என்கிறார். இதை நீங்கள் அறியாதவர்களல்லீரே; அறிந்தவுங்களுக்கு நான் எடுத்துக்காட்டவேணுமோ; என்பது அந்தோ வென்பதன் கருத்து. "ப்ரத்யக்ஷமும் அகிஞ்சித்கரமாயிருக்க உபதேசிக்கிறீரே" என்பர் நம்பிள்ளை. இதனால் ஆழ்வாருடைய அருளின் கனம் தெரிவிக்கப்பட்டதாம்.

உள்ளது நினையாதே யென்பதற்கு இரண்டுவகையாகப் பொருள் பணிப்பர்; 'ஸம்ஸாரத்தில் இன்பமில்லை' என்கிற வுண்மையை நினையாமல் என்பது ஒரு பொருள். 'ஸுகரூபமுமாய் நித்யமுமாயிருப்பது பகவத்விஷயம்' என்கிறவுண்மையை நினையாமல் என்பது மற்றொரு பொருள்.

தொல்லையார்களெத்தனைவர் தோன்றிக்கழிந்தொழிந்தார்=தோன்றினவிடந்தன்னிலே நின்று தேய்ந்துபோம் சிலபூண்டுகளுண்டே; அப்படி உத்பத்தியும் விநாசமுமேயாய்க்கழிந்து போனவர்கள்—உள்ளது நினையாதே தொலைந்து போனவர்கள் எண்ணிக்கையிலகப்படுவர்களோ? ஸம்ஸாரமோ அநாதி; விவேகமோ துர்லபம்; அவிவேகிகளாயே மாண்டுபோனவர்கள் அஸங்க்யேயர் என்க.

'நாங்கள் அப்படி அவிவேகிகளாய்த் தொலைந்துபோகக்கில்லோம்; எங்களுக்கு உய்யும் விரகு சொல்லலாகாதோ?' என்று சிலர் கேட்க, பின்னடிகளால் ஹிதமுரைக்கிறார். மல்லை மூதூர் வடமதுரை=செல்வச்சிறப்புடைமைபற்றி மல்லை யென்கிறது. பகவத்ஸம்பந்தம் அநாதியாயுள்ளது பற்றி மூதூர் என்கிறது. "ஸித்தாச்ரமமாய் ஸ்ரீவாமனனெழுந்தருளியிருந்தும், ஸ்ரீசத்ருக்நாழ்வான் படை வீடுசெய்தும் க்ருஷ்ணன் வந்தவதரித்தும் இப்படி பகவத்ஸம்பந்தம் மாறாதே போருகிற தேசமாயிற்று" என்பது ஈடு. திருப்பாவையில் "மன்னு வடமதுரைமைந்தனை" என்றவிடத்து வியாக்கியானமுங்காண்க. இப்படிப்பட்ட வடமதுரையிலே வந்து அவதரித்தவனுடைய உதாரமான புகழையே வாயாரச்சொல்லி உய்வதன்றி வேறில்லை. சுருக்கே—'கிம்பஹுநா?' என்னுமாபோலே... ... ... (6)

மற்றொன்றில்லை சுருங்கச்சொன்னோம் மாநிலத்தெவ்வுயிர்க்கும்*
சிற்றவேண்டா சிந்திப்பேயமையும் கண்டீர்களந்தோ*
குற்றமன்றெங்கள் பெற்றத்தாயன் வடமதுரைப்பிறந்தான்*
குற்றமில்சீர்கற்றுவைகல் வாழ்தல்கண்டீர் குணமே. (7)

| | | | |
|---|---|---|---|
| மற்றொன்று இல்லை | உபாயாந்தரமில்லை; | சுருங்க சொன்னோம் | இது சுருக்கமாகச் சொல்லுகிறோம்; |
| மாநிலத்து, எவ்வுயிர்க்கும் | பரந்த நிலவுலகிலுள்ள யாவர்க்கும் | சிற்ற வேண்டா | ஆயாஸகரமான ப்ரவ்ருத்திகளிலேநின்று உழலவேண்டா; |

| | | | |
|---|---|---|---|
| சிந்திப்பே அமையும் | மாநஸிகமான அத்யவஸாயமே போதும்; | குற்றம் இல் சீர் | குற்றமற்ற திருக்குணங்களை |
| | கண்டீர்கள் அந்தோ—; | வைகல் கற்று வாழ்தல் இது | எப்போதும் கற்று வாழ்தலாகிற இது |
| வட மதுரை பிறந்தான் | வடமதுரையிலே அவதரித்தவனை | | |
| எங்கள் பெற்றத்து ஆயன் | எங்கள் கோபாலகிருஷ்ணனுடைய | குணம் | குணமாகுமே தவிர |
| | | குற்றம் அன்று | குற்றமாகாது. |

கீழ்ப்பாட்டில் சுருக்கே யென்றதைச் சுருங்கவருளிச் செய்கிறார்; எம்பெருமானைப் பற்றுவதினுடைய எளிமையையும் இனிமையையும் எடுத்துரைக்கின்றார். மற்றொன்று இல்லை=இத்தோடொக்க வேறொன்று எண்ணலாவதில்லை; அன்றியே; எத்தனை தடவை சொன்னாலும் இதுதவிர வேறொருவார்த்தை சொல்லலாவதில்லை என்னவுமாம். சுருங்கச் சொன்னோம்=உங்கள் நெஞ்சில் தேக்கிக்கொள்ள வொண்ணாதபடி காடு பாய்ந்து சொல்லுகை யன்றிக்கே ஸாரஸங்க்ஷேபமாகச் சொல்லுகிறோமென்கை. சொன்னோமென்றது—சொல்லுகிறோமென்றபடி. மாநிலத்து எவ்வுயிர்க்கும்=கடல் சூழ்ந்த மண்ணுலகிலுள்ளாரெல்லாரும் இதுகேட்க அதிகாரிகள். "இவ்வர்த்தத்துக்கு அணியார் பரமபதத்திலுள்ளாராகிலும் உபதேசத்துக்கதிகாரிகள் ஸம்ஸாரத்திலுள்ளாரென்கை" என்பது ஈடு.

ஸித்தோபாயஸ்வீகாரஞ் சொல்லுகிற இப்பாட்டில் சிற்றவேண்டா என்பதே உயிரானது; சிற்றுதல், சிதறுதலாய், பரக்கவொரு வியாபாரம் பண்ணவேண்டா வென்கை. இவ்வுபாயத்திலிழியுமவனுக்குப் பரக்கவொரு வியாபாரம் பண்ணவேண்டா வென்னுமிடம் சரமச்லோகஸித்தம். ஸகலப்ரவ்ருத்தியினுடையவும் நிவ்ருத்தியே இவனுக்கு வேண்டுமென்பது ஸர்வதர்மாந் பரித்யஜ்ய என்பதனால் சொல்லிற்றன்றோ. சிந்திப்பே அமையும்=ரக்ஷித்தருள வேணுமென்று வாயாலே சொல்லி ப்ரார்த்திக்கவும் வேண்டா; *அஞ்சலி: பரமா முத்ரா க்ஷிப்ரம் தேவப்ரஸாதநீ* என்கிறபடியே பகவத்ப்ரஸாத ஹேதுபூதமான அஞ்ஜலியைப்ரயோகிப்பதோ, குஹன் காகம் முதலானாரைப்போலே ரக்ஷகவஸ்து இருந்தவிடத்தே வருவதோ இவையும் செய்யவேண்டா; *ஜ்ஞாநாந் மோக்ஷ:* என்று ஞானத்தாலே மோக்ஷமென்று சொல்லியிருக்கையாலே மாநஸிகமான பற்றுதலே போதும் என்றவாறு. த்ருடாத்யவஸாய ரூபமாயிருப்பதொரு ஜ்ஞாநவிசேஷத்தைத் திருவுள்ளம்பற்றிச் 'சிந்திப்பேயமையும்' என்கிறார். முமுக்ஷுப்படி த்வயப்ரகரணத்தில் "வாசிகமாகவும் காயிகமாகவும் பற்றினாலும் பேற்றுக்கு அழிவில்லை; ஜ்ஞாநாந் மோக்ஷமாகையாலே மாநஸமாகக் கடவது" என்றுள்ள சூர்ணிகை இங்கு அநுஸந்தேயம்.

"சிற்றவேண்டா சிந்திப்பேயமையும்" என்கிற இவ்வளவையே நோக்கி "மற்றொன்றில்லை சுருங்கச் சொன்னோம்" என்றருளிச் செய்தாரென்க.

சிந்திப்பே அமையுமென்றால், இனி வாய்திறந்து ஒன்றும் சொல்லவேண்டாவே; வாயைமூடிக்கொண்டு மௌனியாயிருக்கவேண்டியதுதானே? கீழே *வடமதுரைப் பிறந்தவன் வண்புகழே சொல்லியுய்ய* என்று வாயாலே சில சொல்லும்படி நியமித்தீரே, அதுவும் இப்போது தள்ளுண்டதோ? என்று சிலர் கேட்க; அவர்கட்குப் பின்னடிகளால் விடையளிக்கிறார். வடமதுரைப் பிறந்த எங்கள் கோபாலக்ருஷ்ணனுடைய திருக்குணங்களை வாயாரச் சொன்னால் என்ன குற்றமுண்டாம்? உபாய புத்தியினால் செய்யவேண்டியதொன்றுமில்லை யென்று சொன்னதேயொழிய ஸ்வயம் ப்ரயோஜந புத்த்யா செய்யத்தகாததுண்டோ? அது குற்றமோ? என்கிறார். "குற்றமன்றெங்கள்" என்பதே பாடம்; "குற்றமென் எங்கள்" என்றும் பாடமுண்டென்பர் சிலர். குற்றம் என்?—என்ன குற்றமுண்டு?

குற்றமில் சீர்கற்று, வைகல்வாழ்தல் குணங்கண்டீர்=அகிலஹேயப்ரத்யநீக கல்யாண குணங்களைக் கற்பது ஒருகால்; அதன் பலனான வாழ்ச்சி நித்யமாயிருக்கும்; இதுவே ப்ராப்தம், இது தவிர்ந்ததெல்லாம் அப்ராப்தம். ... ... (7)

| | | | |
|---|---|---|---|
| மல்லை மூதூர் வடமதுரை | செல்வம் மிகுந்த புராதனமான வடமதுரையிலே | உய்ய போகில் அல்லால் | உஜ்ஜீவித்துப் போமதொழிய |
| பிறந்தவன் | வந்து பிறந்த கண்ணபிரானுடைய | சுருக்கு | சுருங்கச்சொல்லும் வழி |
| வண் புகழே சொல்லி | உதாரமான திருக்குணங்களையே கீர்த்தனம் பண்ணி | மற்று ஒன்று இல்லை | வேறொன்றுமில்லை. |

எம்பெருமானே பரமபுருஷார்த்தம் என்பதுணராதே முன்னே கழிந்த பலர் பாழாய்ப் போயினர்; நீங்களும் அங்ஙனே நசித்துப் போகாமே வடமதுரைப்பிறந்த பெருமானுடைய திருக்குணங்களைச் சொல்லி உய்யப்பாருங்கள்; இது தவிர வேறு ஹிதமில்லை ஆத்மாவுக்கு என்கிறாரிப்பாட்டில். பாட்டுத்தொடங்கும்போதே இல்லை கண்டீரின்பமந்தோ! என்கிறார். கெடுவிகாள்! துக்கமயமான ஸம்ஸாரநிலத்தில் ஸுகாபாஸமுள்ளதேயல்லது உண்மையான ஸுகம் லவலேசமுமில்லை கிடீர் என்கிறார். இதை நீங்கள் அறியாதவர்களல்லீரே; அறிந்தவுங்களுக்கு நான் எடுத்துக்காட்டவேணுமோ; என்பது அந்தோ வென்பதன் கருத்து. "ப்ரத்யக்ஷமும் அகிஞ்சித்கரமாயிருக்க உபதேசிக்கிறாரிறே" என்பர் நம்பிள்ளை. இதனால் ஆழ்வாருடைய அருளின் கனம் தெரிவிக்கப்பட்டதாம்.

'உள்ளது நினையாதே யென்பதற்கு இரண்டுவகையாகப் பொருள் பணிப்பர்; 'ஸம்ஸாரத்தில் இன்பமில்லை' என்கிற வுண்மையை நினையாமல் என்பது ஒரு பொருள். 'ஸுகரூபமுமாய் நித்யமுமாயிருப்பது பகவத்விஷயம்' என்கிறவுண்மையை நினையாமல் என்பது மற்றொரு பொருள்.

தொல்லையார்களெத்தனைவர் தோன்றிக்கழிந்தொழிந்தார்=தோன்றினவிடந்தன்னிலே நின்று தீய்ந்துபோம் சிலபூண்டுகளுண்டே; அப்படி உத்பத்தியும் விநாசமுமேயாய்க்கழிந்து போனவர்கள்—உள்ளது நினையாதே தொலைந்து போனவர்கள் எண்ணிக்கையிலகப்படுவர்களோ? ஸம்ஸாரமோ அநாதி; விவேகமோ துர்லபம்; அவிவேகிகளாயே மாண்டுபோனவர்கள் அஸங்க்யேயர் என்க.

'நாங்கள் அப்படி அவிவேகிகளாய்த் தொலைந்துபோகவில்லோம்; எங்களுக்கு உய்யும் விரகு சொல்லலாகாதோ?' என்று சிலர் கேட்க, பின்னடிகளால் ஹிதமுரைக்கிறார். மல்லை மூதூர் வடமதுரை=செல்வச்சிறப்புடைமைபற்றி மல்லை யென்கிறது. பகவத்ஸம்பந்தம் அநாதியாயுள்ளது பற்றி மூதூர் என்கிறது. "ஸித்தாச்ரமமாய் ஸ்ரீவாமனனெழுந்தருளியிருந்தும், ஸ்ரீசத்ருக்நாழ்வான் படை வீடுசெய்தும் க்ருஷ்ணன் வந்தவதரித்தும் இப்படி பகவத்ஸம்பந்தம் மாறாதே போருகிற தேசமாயிற்று" என்பது ஈடு. திருப்பாவையில் "மன்னு வடமதுரைமைந்தனை" என்றவிடத்து வியாக்கியானமுங்காண்க. இப்படிப்பட்ட வடமதுரையிலே வந்து அவதரித்தவனுடைய உதாரமான புகழையே வாயாரச்சொல்லி உய்வதன்றி வேறில்லை. சுருக்கே—'கிம்பஹுநா?' என்னுமாபோலே... ... ... (6)

மற்றொன்றில்லை சுருங்கச்சொன்னோம் மாநிலத்தெவ்வுயிர்க்கும்*
சிற்றவேண்டா சிந்திப்பேயமையும் கண்டீர்களந்தோ*
குற்றமன்றெங்கள் பெற்றத்தாயன் வடமதுரைப்பிறந்தான்*
குற்றமில்சீர்கற்றுவைகல் வாழ்தல்கண்டீர்குணமே. (7)

| | | | |
|---|---|---|---|
| மற்றொன்று இல்லை | உபாயாந்தரமில்லை; | சுருங்க சொன்னோம் | இது சுருக்கமாகச் சொல்லுகிறோம்; |
| மாநிலத்து, எவ்வுயிர்க்கும் | பரந்த நிலவுலகிலுள்ள யாவர்க்கும் | சிற்ற வேண்டா | ஆயாஸகரமான ப்ரவ்ருத்திகளிலேநின்று உழலவேண்டா; |

சிந்திப்பே அமையும் } மானஸிகமான அத்யவஸாயமே போதும்; குற்றம் இல் சீர் குற்றமற்ற குணம்
கண்டீர்கள் அந்தோ—;
வட மதுரை பிறந்தான் } வடமதுரையிலே அவதரித்தவனான
வைகல் கற்று வாழ்தல் இது } எப்போதும் கற்று வாழ்தலாம்
எங்கள் பெற்றத்து ஆயன் } எங்கள் கோபாலகிருஷ்ணனுடைய
குணமாகுமே தவிர அன்று குற்றமாகாது.

கீழ்ப்பாட்டில் சுருக்கே யென்றதைச் சுருங்கவருளிச் செய்கிறார்; எம்பெருமானைப் பற்றுவதினுடைய எளிமையையும் இனிமையையும் எடுத்துரைக்கின்றார். மற்றொன்று இல்லை=இத்தோடொக்க வேறொன்று எண்ணலாவதில்லை; அன்றியே; எத்தனை தடவை சொன்னாலும் இதுதவிர வேறொருவார்த்தை சொல்லலாவதில்லை என்னவுமாம். சுருங்கச் சொன்னோம்=உங்கள் நெஞ்சில் தேக்கிக்கொள்ள வொண்ணாதபடி காடு பாய்ந்து சொல்லுகை யன்றிக்கே ஸாரஸம்க்ஷேபமாகச் சொல்லுகிறோமென்கை. சொன்னோமென்றது—சொல்லுகிறோமென்றபடி. மாநிலத்து எவ்வுயிர்க்கும்=கடல் சூழ்ந்த மண்ணுலகிலுள்ளாரெல்லாரும் இதுகேட்க அதிகாரிகள். "இவ்வர்த்தத்துக்கு அணியார் பரமபதத்திலுள்ளாராகிலும் உபதேசத்துக்கதிகாரிகள் ஸம்ஸாரத்திலுள்ளாரென்கை" என்பது ஈடு.

ஸித்தோபாயஸ்வீகாரஞ் சொல்லுகிற இப்பாட்டில் சிற்றவேண்டா என்பதே உயிரானது; சிற்றுதல், சிதறுதலாய், பரக்கவொரு வியாபாரம் பண்ணவேண்டா வென்கை. இவ்வுபாயத்திலிழியுமவனுக்குப் பரக்கவொரு வியாபாரம் பண்ணவேண்டா வென்னுமிடம் சரமச்லோகஸித்தம். ஸகலப்ரவ்ருத்தியினுடையவும் நிவ்ருத்தியே இவனுக்கு வேண்டுமென்பது ஸர்வதர்மாந் பரித்யஜ்ய என்பதனால் சொல்லிற்றன்றோ. சிந்திப்பே அமையும்=ரக்ஷித்தருள வேணுமென்று வாயாலே சொல்லி ப்ரார்த்திக்கவும் வேண்டா; *அஞ்சலி: பரமா முத்ரா க்ஷிப்ரம் தேவப்ரஸாதநீ* என்கிறபடியே பகவத்ப்ரஸாதஹேதுபூதமான அஞ்ஜலியைப்ரயோகிப்பதோ, குஹன் காகம் முதலானாரைப்போலே ரக்ஷகவஸ்து இருந்தவிடத்தே வருவதோ இவையும் செய்யவேண்டா; *ஜ்ஞாநாந் மோக்ஷ:* என்று ஞானத்தாலே மோக்ஷமென்று சொல்லியிருக்கையாலே மானஸிகமான பற்றுதலே போதும் என்றவாறு. த்ருடாத்யவஸாய ரூபமாயிருப்பதொரு ஜ்ஞாநவிசேஷத்தைத் திருவுள்ளம்பற்றிச் 'சிந்திப்பேயமையும்' என்கிறார். முமுக்ஷுப்படி த்வயப்ரகரணத்தில் "வாசிகமாகவும் காயிகமாகவும் பற்றினாலும் பேற்றுக்கு அழிவில்லை; ஜ்ஞாநாந் மோக்ஷமாகையாலே மாநஸமாகக் கடவது" என்றுள்ள சூர்ணிகை இங்கு அநுஸந்தேயம்.

"சிற்றவேண்டா சிந்திப்பேயமையும்" என்கிற இவ்வளவையே நோக்கி "மற்றொன்றில்லை சுருங்கச் சொன்னோம்" என்றருளிச் செய்தாரென்க.

சிந்திப்பே அமையுமென்றால், இனி வாய்திறந்து ஒன்றும் சொல்லவேண்டாவே; வாயைமூடிக்கொண்டு மௌனியாயிருக்கவேண்டியதுதானோ? கீழே *வடமதுரைப் பிறந்தவன் வண்புகழே சொல்லியுய்ய* என்று வாயாலே சில சொல்லும்படி நியமித்தீரே, அதுவும் இப்போது தள்ளுண்டதோ? என்று சிலர் கேட்க; அவர்கட்குப் பின்னடிகளால் விடையளிக்கிறார். வடமதுரைப் பிறந்த எங்கள் கோபாலக்ருஷ்ணனுடைய திருக்குணங்களை வாயாரச் சொன்னால் என்ன குற்றமுண்டாம்? உபாய புத்தியினால் செய்யவேண்டியதொன்றுமில்லை யென்று சொன்னதேயொழிய ஸ்வயம் ப்ரயோஜந புத்த்யா செய்யத்தகாததுண்டோ? அது குற்றமோ? என்கிறார். "குற்றமன்றெங்கள்" என்பதே பாடம்; "குற்றமென் எங்கள்" என்றும் பாடமுண்டென்பர் சிலர். குற்றம் என்?—என்ன குற்றமுண்டு?

குற்றமில் சீர்கற்று, வைகல்வாழ்தல் குணங்கண்டீர்=அகிலஹேயப்ரத்யநீக கல்யாண குணங்களைக் கற்பது ஒருகால்; அதன் பலனான வாழ்ச்சி நித்யமாயிருக்கும்; இதுவே ப்ராப்தம், இது தவிர்ந்ததெல்லாம் அப்ராப்தம். ... ... (7)

வாழ்தல்கண்டீர் குணமிதந்தோ மாயவனடிபரவி*
போழ்துபோகவுள்ளகிற்கும் புன்மையிலாதவர்க்கு*
வாழ்துணையா வடமதுரைப்பிறந்தவன் வண்புகழே*
வீழ்துணையாப்போமிதனில் யாதுமில்லைமிக்கதே. (8)

| | | | |
|---|---|---|---|
| வாழ்தல் இது குணம் டீர் | வாழுகிறவிதுவன்றோ எல்லாக்கும் குணமாவது ; | வாழ் துணை ஆக | வாழ்ச்சிக்குத் துணையாவதற்காக |
| | | வடமதுரை பிறந்தவன் | வடமதுரையிலே வந்து பிறந்த கண்ணனுடைய |
| அந்தோ | வாழும்வகையறியாதபடி என் ; | | |
| மாயவனடி பரவி | ஸர்வேச்வரனுடைய திருவடிகளைத் துதித்து [பகவத்குணாநுபவம் பண்ணி] | வண் புகழே | திருக்குணங்களையே |
| போழ்துபோக | காலக்ஷேபம்பண்ணவேணுமென்று | போம் னில் | ஆசைப்படுந் துணையாகக் கொண்டு நடப்பதிற்காட்டிலும் |
| உள்ளகிற்கும் | நினைக்கவல்லவர்களான | | |
| புன்மை இலாதவர்க்கு | உத்தமாதிகாரிகளுக்கு | மிக்கது யாதும் | மேற்பட்டவாழ்வு யாதொன்றும் |

***—கண்ணபிரான் திருவவதாரம் செய்தது எதற்காக? என்றொரு கேள்வி பிறப்பதுண்டு; பகவத்கீதையில் *பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே* என்று அவன்தானே பணித்திருப்பதைக் கொண்டு அக்கேள்விக்கு விடை கூறுவதுண்டு. சிஷ்டரக்ஷணமோ துஷ்டசிக்ஷணமோ தர்மஸ்தாபனமோ இவை ஸங்கல்பமாத்ரத்தாலே ஸாத்யமாகாதோ? இவற்றுக்காக நேரில் வந்து பிறக்க வேணுமோவென்று கேட்பதுண்டு; துஷ்ட நிரஸனம் ஒருகால் ஸங்கல்ப ஸாத்யமானாலும் ஸாதுபரித்ராணம் ஸங்கல்பத்தினால் ஸாத்யமாகாதென்றும், நேரே வந்து அவதரித்தே அது செய்யத்தக்கது என்றும் அந்தராதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் ஸ்வாமி யருளிச் செய்துள்ளார். அதற்கு மூலமாக அருளிச் செயல்கள் பலவுண்டு; அவற்றுள் இந்தப் பாசுரமுமொன்று. இதில் மூன்றாமடியில் "வடமதுரைப் பிறந்தவன்" என்று ப்ரஸ்தாவிக்கப்படுகிற அவதாரத்திற்கு ப்ரயோஜனம் கூறுவது முற்பகுதி. "மாயவனடிபரவிப் போழ்துபோகவுள்ளகிற்கும் புன்மையிலாதவர்க்கு வாழ்துணையா" என்பது அவதார ஹேது சொல்லுகிறபடி. இவ்வாழ்வார் தாமே பெரிய திருவந்தாதியில் *கார்கலந்த மேனியான் கைகலந்த வாழியான் பார்கலந்த வல்வயிற்றான் பாம்பணையான் சீர்கலந்த சொல் நினைந்து போக்காரேல் சூழ்வினையினாழ் துயரை, என்னினைந்து போக்குவரிப்போது" என்றார். பகவத் குணங்கள் மலிந்திருக்கப்பெற்ற ஸ்ரீராமாயண ஸ்ரீபாகவதாதிகளைக் கொண்டு போது போக்க முடியுமே தவிர மற்ற எதனாலும் போதுபோக்க முடியாதென்றார் ஆழ்வார் தம்மியல்வுகொண்டு. அவ்விதமாகப் போதுபோக்க விரும்புமவர்களே "பரித்ராணாய ஸாதூநாம்" என்கிற ச்லோகத்தில் சொல்லப்பட்ட ஸாதுக்கள்: அவர்களைப் பரித்ராணம் செய்வதென்றால் அவர்களுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்வதேயாம். எம்பெருமான் திருவவதாரஞ் செய்து தனது திருக்குணங்களைக் காட்டியருளாதொழியில் சீர்கலந்த சொற்கள் தோன்றமாட்டா; அவை தோன்றவில்லையாகில் அவற்றைக்கொண்டே காலக்ஷேபம் பண்ணவிருக்கும் ஸாதுக்களின் பரித்ராணம் ஸித்திக்கமாட்டாது. ஆகவே, மாயவனடி பரவிப்போழ்து போகவுள்ளகிற்கும் புன்மையிலாதவர்க்குவாழ்துணையாவதற்கு வடமதுரைப் பிறந்தானாயிற்று. அப்படிப்பட்டவனுடைய திருக்கல்யாண குணங்களையே விரும்பத்தக்க துணையாகப் பற்றுமதொழிய வேறொரு நலமுமில்லை யென்றாராயிற்று.

முதலடியில் "வாழ்தல் கண்டீர் குணமிது" என்றவுடனே அந்தோ! என்றதன் கருத்தை நம்பிள்ளை விவரிக்கிறார் காண்மின்;—"[அந்தோ] கரும்புதின்னக் கூலி

கொடுப்பாரைப் போலே இவர்களை யபேக்ஷிக்க வேண்டுவதே யெனக்கு. வாழ்ச்சி உங்களதாயிருக்க இரந்து திரிவேன் நானுவதே!"

மாயவனடிபரவிப் போழ்துபோகவுள்ளகிற்பாரான ஸ்ரீவைஷ்ணவர்கள் உத்தமாதிகாரிகள்; அவர்களை 'உத்தமர்கள்' என்றோ 'சீரியர்கள்' என்றோ நிர்தேசிக்க வேண்டியிருக்க' 'புன்மையிலாதவர்க்கு' என்று நிர்தேசிப்பதேன்? புன்மையை ப்ரஸங்கித்து அஃதில்லாமையைச் சொல்லுவானேன்? என்று சங்கை தோன்றும்; அதற்குப் பரிஹாரமாக பட்டர் அருளிச் செய்வராம்—இந்த மாயவனடி பரவுகையை சூதுசதுரங்கம் போலே காலக்ஷேபமாக்குகிற புன்மையில்லாதவர்கள்—என்று. *தெரிதலெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது* என்ற திருமழிசையாழ்வாரைப் போலே உலகில் எல்லாரும் போதுபோக்குவாரல்லரே; சூதாடியும் சதுரங்கமாடியும் போதைப்போக்குவார் பலருளரே. அச்செய்கைகளினால், ஒருவாறு போதுபோகிறதென்னுமளவேயல்லது அவை ஆஹ்லாதரூபமாயிருக்க ப்ரஸக்தியில்லையே. பகவத் குணாநுபவத்தையும் அங்ஙனே போதுபோவதற்காகவே கொள்ளுமது புன்மையேயாம்; *யந்முஹூர்த்தம் க்ஷணம் வாபி வாஸுதேவோ ந சிந்த்யதே, ஸா ஹாநிஸ் தந்மஹச்சித்ரம் ஸா ப்ராந்திஸ் ஸாச விக்ரியா* என்றும் ' *ஏகஸ்மிந்நபி அதிக்ராந்தே முஹூர்த்தே த்யாநவர்ஜிதே, தஸ்யுபிர் முஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும் ந்ருணாம்* என்றுஞ் சொல்லுகிற நிலைமை யுண்டாகி ப்ரஹ்மாநந்த ரூபமாக குணாநுபவம் நடக்குமதுவே புன்மையிலாமை. இதைத் தெரிவிக்கைக்காகவே இங்கு ஆழ்வார் "புன்மையிலாதவர்க்கு" என்றருளிச் செய்தாரென்ப. வாழ்துணையா என்றது—வாழ்ச்சித்துணையாக என்றபடி. வீழ்துணை—ஸ்ப்ருஹணீயமான ஸஹாயம். ... ... ... (8)

யாதுமில்லைமிக்கதனில் என்றேன்றதுகருதி*
காதுசெய்வான்கூதைசெய்து கடைமுறைவாழ்க்கையும்போம்*
மாதுகிலின்கொடிக்கொள்மாட வடமதுரைப்பிறந்த*
தாதுசேர்தோள்கண்ணனல்லால் இல்லைகண்டீர்சரணே. (9)

| (பகவத்விஷயம் தவிர வேறொன்றைப் பற்றி நின்று) | | | (ஆன பின்பு) |
|---|---|---|---|
| அதனில் மிக்கு யாதும் இல்லை என்று என்ற அது கருதி | அதிற்காட்டிலும் மேம்பட்ட தொன்றுமில்லை யென்று பலகாலும் அதையே சிந்தனை செய்யுமளவில் | மாதுகிலின் கொடி கொள் மாடம் | பெரிய த்வஜபடங்களைக் கொண்ட மாடங்களை யுடைத்தான |
| காது செய்வான் கூதைசெய்து | கனங்குழையிடக் காதுபெருக்கப் புகுந்து பண்டுள்ளதையும் போகக் கூதைசெய்யுமா போல | வட மதுரை பிறந்த | வடமதுரையிலே வந்தவதரித்த |
| கடை முறை வாழ்க்கையும் போம் | கடைசெட்ட ஸம்ஸாரவாழ்க்கைக்கும் ஹானிவந்ததாமித்தனை; | தாது சேர் தோள் கண்ணன் அல்லால் | மாலையணிந்த தோள்களையுடைய கண்ணனைத் தவிர்த்து |
| | | சரண் இல்லை கண்டீர் | வேறொரு புகலில்லை கிடீர். |

***—எம்பெருமானைத்தவிர்த்து வேறொன்றை ரக்ஷகமாகப் பற்றினவர்கள் பண்டு நின்ற நிலையுங்கெட்டு அனர்த்தப்பட்டுப் போவர்கள்; ஆனபின்பு அவனல்லது புகலில்லை யென்கிறார். *ந ஸம்பதாம் ஸமாஹாரே விபதாம் விநிவர்த்தநே, ஸமர்த்தோ த்ருச்யதே கச்சித் தம் விநா புருஷோத்தமம்* என்றும், *ந ஹி பாலநஸாமர்த்யம்ருதே ஸர்வேச்வரம் ஹரிம்* என்றுமுள்ள ப்ரமாணங்களை யறிந்துவைத்தும் இந்த அத்யவஸாயத்தை எம்பெருமானளவிற் பண்ணாதே வேறொரு விஷயத்திற்பண்ணி, (அதாவது) அப்ராப்த விஷய

*மொன்றைப்பற்றி ‘இதுவே நமக்கு ரக்ஷகம், இதனில் விஞ்சிய ரக்ஷகமில்லை’ என்கிற அத்யவஸாயத்தை அவ்விஷயத்திலே கொண்டிருக்குமளவில்.*

காது செய்வான் கூதைசெய்து கடைமுறை வாழ்க்கையும் போம்=*கனங்குழை யிடுவதற்காகக் காதைப்பெருக்கப்புகுந்து பண்டுள்ள யோக்யதையையுங் கெடுத்துக் கூதை யாக்கிக் கொள்வாருண்டே; அப்படியாகி, தண்ணிதானமுறைமையாலே வாழக்கடவதான வாழ்வும் தொலைந்து போம். “ஸம்ஸாரத்திலே பசுலுங்குட்டியுமாய் அளாய்குளாயாய்ப் போருமதுவுங்கூடக் கெடுமித்தனை” என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. கடைமுறை வாழ்க்கையாவது இவ்வாழ்வே; இதுவும் கெட்டுப்போமித்தனை. உயர்ந்த ஜீவனத்தில் ஆசை கொண்டதற்குப் பயனாக அதமஜீவனமும் அழிந்து போமென்றபடி. “காது செய்வான் கூதைசெய்து” என்பது உபமானத்தைப்புட்கொண்ட வாக்யம்.*

*முன்னடிகட்கு மற்றொரு வகையான நிர்வாஹமுமுண்டு; அதாவது கைவல்ய பரமான நிர்வாஹம்; கைவல்யஸுகத்தை விரும்பி ‘இவ்வாத்மாநுபவ ஸுகத்திற்கு மேற்பட மற்றோ ரின்பமில்லை’ என்று துணிந்து அதற்கு கரு பண்ணுமளவில் முன்புள்ள ஸாம்ஸாரிக -என்று. இங்கே ஆறாயிரப்படி யருளிச்செயல்:—“எல்லாவற்றிலும் மேற்பட்ட புருஷார்த்தமன்றோ ஸாம்ஸாரிக துக்கநிவ்ருத்திரூப கைவல்யமென்று அத்தைப் புருஷார்த்தமென்று பற்றில், காதுபெருக்க வென்றுபுக்குப் பண்டுள்ளதையுங் கெடுத்துக் கூதையாக்கினாப்போலே பண்டுள்ள ஸாம்ஸாரிக ஸுகத்தையுமிழக்குமித்தனை; ஆதலால், ஸ்ரீமதுரையிலே திருவவதாரம் பண்ணுகையாலே புதுக்கணித்தவழகையுடையனான கண்ணனை பரமப்ராப்யனென்கிறார்” என்று. இப்பொருளில் “அது கருதி” என்றது கைவல்யோபாஸநத்தைப்பண்ணி யென்றபடி. அந்த ஹேயக்ருத்யத்தைத் தம்வாக்காலே சொல்லக்கூசி ‘அது’ என்றதாகக் கொள்க.*

*தோளுந் தோள்மாலையுமான வழகிலே யீடுபட்டுத் தாதுசேர்தோள் கண்ணன் என்றது.* ... ... — .... (9)

கண்ணனல்லாலில்லைகண்டீர்சரண் அதுநிற்கவந்து*
மண்ணின்பாரம் நீக்குதற்கே வடமதுரைப்பிறந்தான்*
திண்ணமாநும்முடைமையுண்டேல் அவனடிசேர்த்துய்மினோ*
எண்ணவேண்டாநும்மதாதும் அவனன்றிமற்றில்லையே. (10)

| | | | |
|---|---|---|---|
| கண்ணன் அல்லால் சரண் இல்லை அது நிற்க | ஸ்ரீக்ருஷ்ணனல்லது வேறு சரணில்லை யென்னுமர்த்தம் நிலைநிற்கைக்காகவும், | திண்ணமா அவன் அடி சேர்த்து உய்ம்மின் | திடமாக அவன் திருவடிகளிலே ஸமர்ப்பித்து உஜ்ஜீவியுங்கள்; |
| மண்ணின்பாரம் நீக்குதற்கு | பூபாரத்தைப் போக்குகைக்காகவும் | எண்ண வேண்டா | ஆலோசிக்கவேண்டா: |
| வட மதுரை பிறந்தான் | வடமதுரையிலே வந்து அவதரித்தான்; (ஆனபின்பு. ஸம்ஸாரிகளே)! | நும்மது ஆதும் | உங்களுடையதான எபபொருளும் |
| நும் உடைமை உண்டேல் | உங்களதாக நினைத்திருக்கிற பொருளுண்டாகில் (அதை) | அவன் அன்றி மற்று இல்லை | அவனதேயன்றி மற்றபடியாயில்லை. |

***—*பரித்ராணாய ஸாதூநாம்*என்கிற கீதாச்லோகத்தை நிர்வஹிக்கும் நம்மாசார்யர்கள் வெவ்வேறு வகையான சாஸ்த்ரார்த்தங்களை வெளியிட்டருளினார்கள். எம்பெருமானுடைய அவதாரம் ஸாதுபரித்ராணத்திற்காகவும் துஷ்டர்களைத் தொலைப்பதற்காகவும் என்று மூலத்தில் மொழிந்திருந்தாலும் ஸாதுபரித்ராணந்தான் முக்கியமான ப்ரயோஜனமென்றும்

துஷ்க்ருத்விநாசநம் அப்படி முக்ய மன்றென்றும், அது ஸங்கல்பத்தாலும் செய்துமுடிக்கத் தக்கதாகையாலே அதற்காக அவதாரம் அபேக்ஷிதமன்றென்றும் எம்பெருமானார் திருவுள்ளம் பற்றினர். ஸ்ரீவசநபூஷணத்தில் "ஈச்வரன் அவதரித்துப்பண்ணின ஆனைத்தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறாமையென்று ஜீயரருளிச்செய்வர்" என்ற சூர்ணையையும் அதன் வியாக்கியானத்தையும் நோக்குமளவில் துஷ்க்ருத் விநாசநத்தை நோக்கியே எம்பெருமானது அவதாரமென்று நஞ்சீயர் திருவுள்ளம் பற்றினதாகப் புலப்படுகின்றது. இவை பரஸ்பர விருத்தங்களல்ல. இரண்டுபடியாகவும் சொல்லலாம் போலேயுள்ளது. இரண்டும் ஆழ்வார் திருவுள்ளத்திலோடியிருப்பதாக விளங்காநின்றது. இப்பதிகத்திலேயே கீழ் எட்டாம்பாட்டில் ஸாதுபரித்ராணமே அவதாரத்திற்கு ப்ரயோஜனமென்னுந் திருவுள்ளத்தை வெளியிட்டார்; இப்பாட்டில் "மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப்பிறந்தான்" என்பதனால் துஷ்க்ருத்விநாசமே அவதாரப்ரயோஜன மென்கிற திருவுள்ளத்தை வெளியிடுகிறாராயிற்று. உண்மையில்; துஷ்க்ருத்விநாசந மென்பதும் ஸாதுபரித்ராணத்தின் பாகுபாடேயென்பது நுண்ணிதி னுணரத்தக்கது. ரக்ஷிக்கையாவது அநிஷ்டங்களைத் தவிர்க்கையும் இஷ்டங்களைக் கொடுக்கையுமாதலால் துஷ்க்ருத் விநாசநம் பண்ணுதவளவில் ஸாதுபரித்ராணம் பூர்ணமாக ஸித்திக்கமாட்டாதன்றோ.

அன்றியும், ஸாதுபரித்ராண துஷ்க்ருத்விநாசநங்களுக்கு மேலே "தர்மஸம்ஸ்தாபநார்த்தாய" என்று மூன்றாவதான வொரு ப்ரயோஜனமும் சொல்லப்பட்டுள்ளது. தர்மஸ்தாபனத்திற்காக அவதரிக்கிறேனென்ற திருவாக்கினாலேயே "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்றும் மேலே சொல்லியிருக்கையாலே இவ்விரண்டு வார்த்தைகளுக்கும் முரண்பாடில்லாமை ஆராயத்தக்கது. இன்று புதிதாக நாம் ஆராயவேண்டாவே; முமுக்ஷுப்படி சரமச்லோகப்ரகரணத்தில் "தர்மஸம்ஸ்தாபநம் பண்ணப்பிறந்தவன்தானே ஸர்வதர்மங்களையும்விட்டு என்னைப்பற்றென்கையாலே ஸாக்ஷாத்தர்மம் தானே யென்கிறது" என்றருளிச்செய்தார் பிள்ளையுலகாசிரியர். ஆகவே *தர்மஸம்ஸ்தாபநார்த்தாய* என்றவிடத்தில் விவக்ஷிதமான தர்மஸ்தாபனம் ஆபாஸதர்மான ஸாத்ய தர்மங்களின் ஸ்தாபனமன்றிக்கே *க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்* *ராமோ விக்ரஹவாந் தர்ம:* என்று ஸாக்ஷாத்தர்மமாகவும் ஸித்ததர்மமாகவும் சொல்லப்பட்ட தன்னையே ஸ்தாபிப்பது என்று தேறிற்று. இவ்விஷயமும் இப்பாட்டின் முதலடியில் தெரிவிக்கப்படுகிறது—"கண்ணனல்லாலில்லைகண்டீர் சரணதுநிற்க" என்று. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகாண்மின்;—'க்ருஷ்ணனையொழிய வேறு சரணமாவாரில்லையென்னுமிவ்வர்த்தம் நிலைநிற்கைக்காக. இவ்வர்த்தத்தை ஸ்தாபிக்கைக்காகவும், அதுக்குறுப்பாக பூபாரததைப போக்குகைக்காகவும் திருவவதாரம் பண்ணினன்" எனறு.

ஆனபின்பு, நீங்களும் உங்களுடைமையென்று நினைத்திருந்தனவுண்டாகில் அவன் திருவடிகளுக்கே சேஷமாம்படி ஸமர்ப்பித்திடுங்கள் என்கிறார் மூன்றாமடியால். "நும்முடைமைகளை அவனடி சேர்த்து" என்னாமல் "நும்முடைமையுண்டேல்" என்கையாலே, நும்முடைமையென்று சொல்லக்கூடிய வஸ்து ஆழ்வார் தம்முடைய திருவுள்ளத்தால் இல்லையென்பது போதரும். அவர்களுடைய அந்யதாஜ்ஞானத்தாலுள்ளதத்தனை. எண்ண வேண்டா = இதுதான் அவனதோ நம்மதோ வென்று விசாரிக்கவேண்டா; உங்களோடு உங்களுடைமையோடு வாசியற எல்லாம் அவனுக்கே சேஷப்பட்டதாகையாலே மருளவேண்டா என்றபடி. அவனன்றியென்றது—அவனுக்கு சேஷபூதமாக வல்லது என்றபடி. ஈற்றடிக்கு மற்றொருவகையாகவும் பொருள் கூறுவர்; இனிச்செய்ய வேண்டுவதில் உங்கள் தலையிலே சுமையொன்றும் கிடக்கின்றதன்று; எல்லாம் அவன்பக்கலிலே கிடக்கிறது = என்பதாக. மற்றில்லை யென்றவிடத்திற்கு ஈடு;—"பலஸித்திக்கீடான ஸாதனமும் அவனையொழிய இல்லை; ஸமித்தைபாதி ஸாவித்ரி பாதியாக நீங்களும் ஒரு தலை கூட்டுப்பட வேண்டுவதில்லை." ... (10)

ஆதுமில்லைமற்றவனில் என்றதுவே துணிந்து*
தாதுசேர்தோள்கண்ணனைக் குருகூர்ச்சடகோபன் சொன்ன*
தீதிலாதவொண்டமிழ்கள் இவையாயிரத்துளிப்பத்தும்*
ஓதவல்லபிராக்கள் நம்மையாளுடையார்கள்பண்டே. (11)

தாது சேர் தோள் கண்ணனை } மாலையணிந்த தோள்களையுடைய பெருமானைக்குறித்து
அவனில் மற்று ஆது இல்லை என்றதுவே துணிந்து } அவனையொழிய வேறெதுவும் இல்லையென்னும் அத்யவஸாயத்தையே கொண்டு
குருகூர் சடகோபன் சொன்ன } ஆழ்வாரருளிச்செய்த
ஒண் தமிழ்கள் அழகிய தமிழினாலான
தீது இலாத } குற்றமற்ற
இவை ஆயிரத்துள் இப்பத்தும் ஓத வல்ல பிராக்கள் } இப்பத்தையும் கற்கவல்ல உபகாரகர்களான ஸ்வாமிகள்
பண்டே நம்மை ஆளுடையார்கள் } ஏற்கெனவே நம்மை அடிமை கொண்டவராவர்.

***—*இத்திருவாய்மொழி கற்றார்க்குப் பலனுரைக்கும் பாசுரமானவிது விலக்ஷணமாகத் தோன்றியுள்ளது. "இப்பத்து மோதவல்லபிராக்கள் பண்டே நம்மையாளுடையார்கள்" என்கிறார். இப்பதிகத்தை யோதவல்லவர்களுக்கு ஆழ்வார் தாம் அடிமைப்படுவதாக அருளிச்செய்கிறார்; இது இப்பதிகத்திற்குப் பலன் கூறினவாறாக எங்ஙனே யாகுமென்று சங்கிக்க நேரும். "இப்பதிகம் கற்பார் என்போன்றவர்களை ஆட்படுத்திக் கொள்ளப் பெறுவர்" என்பது பரமதாற்பரியமாகையாலே பாகவதர்களை வசப்படுத்திக்கொள்வதே இப்பதிகம் கற்கைக்குப் பலனாகச்சொல்லிற்றாயிற்றென்று கொள்க. இப்பதிகத்தை யோதுவதென்றால் வெறும் சப்தராசிகளைக் கற்கையன்றே; பொருளுணர்ந்து அதுதானும் அனுஷ்டான பர்யந்தமாகுமே; அதுதானே ஆழ்வார்க்கு உகப்பு; ஆழ்வார்க்கு மாத்திரமன்று; ஆழ்வார் போல்வாரெல்லார்க்குமே உகப்பு; ஆகவே இப்பத்துமோதவல்லவர்கள் பாகவதோத்தமர்களை உகப்பிக்கவல்லராவர்களென்று பயனுரைத்ததாயிற்று.

ஆழ்வார் இப்பதிகமருளிச் செய்ததற்குக்காரணம் ஒரு துணிவு; அதாவது "ஆதுமில்லை மற்றவனில்" என்னுந்துணிவு. எம்பெருமானையொழிய வேறு ப்ராப்யப்ராபகங்களில்லையென்கிற அத்யவஸாயமே இப்பதிகமாகப் பரிணமித்ததென்னலாம். இரண்டாமடியை நோக்கி நம்பிள்ளையருளிச்செய்வது காணீர்—"இவர்க்கு இப்படி இந்த வ்யவஸாயத்தைக் கொடுத்தார் ஆரென்றால், வேறுண்டோ? அவனுடைய தோளும் தோள்மாலையுமன்றோ. அவனுடைய ஸௌந்தர்யமாயிற்று இவரையிப்படி துணியப்பண்ணிற்று." என்று.

தீதிலாதவாயிரம்—ஸ்ரீராமாயணம் மஹாபாரதம் முதலானவைபோல பகவத் கதைகளோடு இதர கதைகளையும் சேர்த்துப் பேசுகையாகிற தீதில்லாமை விவக்ஷிதம். ஒண்தமிழ்கள்—"உள்ளுண்டான அர்த்தத்தையடைய வெளியிட்டுக் கொடுக்கவற்றாயிருக்கை" என்பது ஈடு. ... ... ... (11)

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.
நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

## திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையுரையில்

ஒன்பதாம்பத்து முதல் திருவாய்மொழி

முற்றிற்று.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# இரண்டாந் திருவாய்மொழி—பண்டை நாளாலே



உரையவதாரிகை :— ஸர்வேச்வரனைத் தவிர்ந்தவர்களனைவரும் ஆபாஸ பந்துக்களென்றும் ஸர்வேச்வரனொருவனே நிருபாதிக பந்துவென்றுமருளிச்செய்தார் கீழ்த்திருவாய்மொழியில். இவரருளிச்செய்தவளவேயன்றே; உண்மையில் அவன்தான் பரம பந்துவாயிற்றே. *மாதா பிதா ப்ராதா நிவாஸச் சரணம் ஸுஹ்ருத கதிர் நாராயண:* என்று சுருதி சொன்னது உண்மையல்லதில்லையே. அப்படி பரம பந்துவானவன் பந்துக்கள் செய்ய வேண்டிய செயலைச் செய்யாதிருக்கமாட்டானே. அது செய்கைக் குறுப்பாகத திருப்புளிங்குடியிலே திருக்கண்வளர்ந்தருளா நின்றான்; நாமும் அங்கே சென்று கிட்டினால் நமக்கு பந்துக்ருத்யமெல்லாம் பண்ணுவன் என்று அநுஸந்தித்து ஆழ்வார் அங்கே சென்று கிட்டினார்.

இப்படி பரம பந்துவானவன் ஸன்னிதி பண்ணியருளுகிற திருப்புளிங்குடியிலே எல்லாவகையான பரிமாற்றங்களையுமாசைப்பட்டுச் சென்று கிட்டினவிடத்தும், இவரை என்னென்று வினவுதல் குளிர நோக்குதல் ஒரு வார்த்தை சொல்லுதல் ஒன்றுஞ் செயதிலன். ஆனாலும்,* இன்றாக நாளையேயாக இனிச்சிறிது நின்றாக நின்னருள் என்பாலதே* என்று திண்ணிய அத்யவஸாயம் கொண்டிருக்குமவர்களிலே ஒருவரான ஆழ்வார் 'அவனுளனாயிருக்கும்பொழுது பந்துக்ருத்யம் செய்யத் தவறமாட்டான்; சிறிது தாமதித்தால் என்ன குறை?' என்று ஒருவாறு தேறுதலடைந்து, வேறொன்றுக்காக மிகவும் ஆர்த்தியடைந்தார்; அதாவதென்னெனில்; இங்கே என்றைக்குத் திருக்கண்வளர்ந்தருளப் புகுந்தானோ அன்று முதல் இன்றளவாக ஏகரீதியாய் ஆடாதே அசையாதே சயனித்திருக்கின்றானே! இது என்ன கிரமமோ?' என்று இவ்வாற்றாமை திருவுள்ளத்திலே குடி புகுந்தது. கீழ் எட்டாம்பத்தில் *கொடியார்மாடக் கோளூரகத்தும் புளிங்குடியும் மடியாதின்னே நீ துயில்மேவி மகிழ்ந்தது தான், அடியாரல்லல் தவிர்த்த வசவோ அன்றேலிப்படிதான் நீண்டு தாவிய வசவோ பணியாயே* என்ற பாசுரத்திலுண்டான வயிறுபிடியே மீண்டும் தலையெடுத்தது. அப்பெரிய வாற்றாமையோடே 'தேவரீரும் பிராட்டிமாருங்கூட எழுந்தருளியிருக்குமிருப்பை எனக்குக் காட்டியருளவேணும்; என்னைக் கண்ட காட்சியிலே விகாரமடைந்து என்முன்னே நாலடியுலாவியருளவேணும்; புன்முறுவல காட்டியருளவேணும்; ஒரு வார்த்தை யருளிச்செய்யவேணும்' என்றிங்ஙனே தாமுமவனுமேயறிந்ததாகத் திருவாசலைத் திருக்காப்பிட்டுக்கொண்டு ஏகாந்தத்திலே தம்முடைய மநோரதங்களையெல்லாம் விண்ணப்பஞ் செய்கிறார் இத்திருவாய்மொழியில்.

இப்பதிகத்தின் பொருட்சுவை ஒருபுறமிருக்க சொற்சுவை கல்நெஞ்சையும் கரையப் பண்ணும். ஸம்ஸாரத்தில் ஆர்த்திவிசேஷங்களுண்டாகி நெஞ்சு தடுமாறிக் கிடக்கும்போது இப்பதிகத்திற் பாசுரங்களை வாய்வெருவினால் நெஞ்சு குளிரும். நாற்பதாண்டுகளுக்குக் கீழே திருவரங்கம் பெரிய கோயிலில் பெரிய திருவத்யயனத் திருநாளில் இத்திருவாய்மொழியை அரையர் இசைபாடாநிற்க, அஸ்மதாசார்யரான அழகிய மணவாளச் சீயர் கண்ணுங் கண்ணீருமாயிருந்த விருப்பு* நின்று தோன்றிக் கண்ணுள் நீங்கா நெஞ்சுள்ளும் நீங்காவே. ... ... ...

பண்டைநாளாலேநின்திருவருளும் பங்கயத்தாள்திருவருளும்
கொண்டு* நின்கோயில்சீய்த்துப்பல்படிகால் குடிகுடிவழிவந்தாட்செய்யும்*
தொண்டரோர்க்கருளிச்சோதிவாய்திறந்து உன்தாமரைக்கண்களால்நோக்காய்*
தெண்டிரைப்பொருநல்தண்பணைசூழ்ந்த திருப்புளிங்குடிக்கிடந்தானே. (1)

| | | | |
|---|---|---|---|
| தெண் திரை பொருநல் | தெளிந்த அலைகளையுடைத்தான தாமிரபர்ணியோடு சேர்ந்த | கோயில் | உன்னுடைய திவ்யதேசத் [illegible]ரிய கைங்கரியத்தைப் |
| சூழ்ந்த | அழகிய நீர்நிலங்களால் சூழப்பட்ட | பல்படிகால் குடி குடி [illegible]ழி | அநா காலமாய்ப் போருகிற வம்ச பரம்பரையாக |
| திருப்புளிங்குடி | திருப்புளிங்குடி யென்கிற திருப்பதியிலே | ஆள் செய்யும் தொண்டரோர்க்கு | அடிமைசெய்து போருகிற அடியோங்கள் விஷயத் |
| கிடந்தானே | சயனித்தருள்பவனே! | அருளி | அருள |
| நின் திரு அருளும் | ஊனது கருபையையும் | சோதி வாய் | அழகிய பவளத்தைத் (நல்வார்த்தைகளைப் பேசி) |
| பங்கயத்தாள் திரு அருளும் | பெரிய பிராட்டியாருடைய க்ருபையையும் | | |
| பண்டை நாளாலே கொண்டு | நெடுநாளாகவே அடைந்து கொண்டு | உன் தாமரை கண்களால் நோக்காய் | உனது தாமரை போன்ற திருக்கண்களாலே நோக்கியருள வேணும். |

* * *—வேறு புகலற்ற அடியேனைக் குறித்து ஒரு வார்த்தை யருளிச் செய்து விடாய் கெடக் குளிர நோக்கியருளவேணுமென்று வேண்டுகிறார். முன்னடிகளிரண்டாலும் தம்முடைய படியை [illegible]க்கிறார்; திவ்ய தம்பதிகளின் திவ்ய கடாக்ஷமே விளைநீராகக் கொண்டு நித்ய கைங்கர்யம் பண்ணும் ஸந்தானத்திலே தோன்றப் பெற்ற தமது பெருமையை யெடுத்துப் பேசுகிறார். *எதிர் சூழல்புக்கெனைத்தோர் பிறப்பு மெனக்கே யருள்கள் செய்ய விதி சூழ்ந்ததாலெனக்கே லெம்மான் திரிவிக்கிரமனையே* என்றருளிச் செய்தவராகையாலே "பண்டை நாளாலே நின் திருவருள்" கொண்டதாகக் கூறுகின்றார். பிராட்டியின் க்ருஷிபலமாகவே எம்பெருமானது திருவருள் வாய்த்ததாதலால் "பங்கயத்தாள திருவருளுங்கொண்டு" என்கிறார். முற்பட்டதை முன்னே சொல்லிப் பிற்பட்டதைப் பின்னே சொல்ல வேண்டியிருக்க, பிற்பட்டதான எம்பெருமான் திருவருளை முன்னே சொல்லியிருப்பது வழுவாகாது; கார்யத்தை முன்னே சொல்லிக் காரணத்தைப் பின்னே சொல்லுவதும் முறையே.

நின் கோயில் சீய்த்து—திவ்ய தேசங்களிலே பண்ணுங் கைங்கரியங்களில் தலையானது இது. *வயலணியனந்தபுரம் கடைத்தலை சீய்க்கப் பெற்றால் கடுவினை களையலாமே* என்று மேலுமருளிச் செய்வர். திருவலகிடுதல் மெழுகுதல் கோலமிடுதல் முதலியன செய்கைக்குக் கோயில் சீய்க்கை யென்று பெயர். இங்கே ஈட்டில் திருக்கண்ணமங்கையாண்டானிதிஹாஸமொன்றுளது; அவரைப் பற்றி ஸ்ரீவசநபூஷணத்தில் "திருககணணமங்கையாண்டான் ஸ்வவ்யாபாரத்தை விட்டான்". என்றருளிச் செய்யப் பட்டிருக்கின்றதன்றோ. அப்படிப்பட்டவர் அவ்வூரில் ஒரு மகிழ மரத்தடியிலேயிருந்து திருவலகிடா நிற்கையில் உண்மையுணர்ச்சியற்ற வொருவன் 'எம்பெருமானே உபாயமென்றிருக்கிற அநந்ய ப்ரயோஜநர் இங்ஙனே கிலேசப்படுவது எதற்காக?' என்றானாம்; அப்போது திருவலகிட்ட விடத்தையும் இடாத விடத்தையுங் காட்டி 'இவ்விடமும் அவ்விடமும் இருந்தபடி கண்டாயே; இதற்கொரு பலமில்லை யென்று தோற்றியிருந்ததோ?' என்று பணித்தாராம் திருக்கண்ணமங்கையாண்டான். இங்கு அறிய வேண்டுவதாவது;— த்ருஷ்டப்ரயோஜந மென்பம்

*அத்ருஷ்ட ப்ரயோஜநமென்றும் ப்ரயோஜந மிருவகைப்படும். அத்ருஷ்ட ப்ரயோஜநத்திற் கொரு ஸாதநாநுஷ்டாநம் பண்ணுமையே அநந்ய ப்ரயோஜநர்க்குற்றது. ஸந்நிதி வாசலை அலகிடுதல் முதலிய திருப்பணிகளை ஒரு ப்ரயோஜநாபேக்ஷயின்றிக்கே செய்வதனால் ஒரு குறையுமில்லை; இது நிஷ்ப்ரயோஜநந்தானே யென்ன வேண்டா; திருவலகிடாதவிடம் கண் கொண்டு காண வொண்ணுததாயும், திருவலகிட்டவிடம் கண்ணுற்காண வினிதாயுமிருப்பதே ப்ரயோஜனம். இது அநந்ய ப்ரயோஜநத்வத்திற்கு விரோதியன்று-என்பதாம்.*

பல்படிகால் *என்பதனால் வம்ச பரம்பரையாக இங்ஙனே கைங்கரியஞ்செய்யும் ஸந்தான மென்கிறது.* தோண்டனேற்கு *என்று ஒருமையாகச் சொல்லாமல்* 'தொண்டரோர்க்கு' *என்று பன்மையாகச் சொன்னது அநுபந்திகளையுங் கூட்டிக்கொண்டு சொன்னபடி.* சோதிவாய்திறந்து *—பூவலருமாபோலே வாய்திறந்தொரு வார்த்தை யருளிச் செய்யவேணும். வாய் திறக்கும் போது திருமுகத்தில் பிறக்கும் செவ்வியையும் அநுபவிக்க வேண்டிச்* 'சோதிவாய்' *என்கிறுர். இங்கே ஈடு;—"*மாம் அக்ரூரேதி வக்ஷ்யதி யென்று வார்த்தையளவிலேயாயிற்று அக்ரூரன் அநுபவித்தது; தத்காலத்தில் திருமுகத்திற் செவ்வியும் உத்தேச்யமாயிருக்கிறதாயிற்று இவர்க்கு."*

உன் தாமரைக் கண்களால் நோக்காய்*—வார்த்தையில் தோற்றுத பந்தமும் நோக்கிலே தெரியும்படி குளிர நோக்கியருளவேணுமென்கை. கோயிலில் பிள்ளை தேவப்பெருமாளரையர் இப்பாட்டை ஸேவிக்கையில் *உன் தாமரைக் கண்களால் நோக்காய்* என்று ஒருவிசை சொல்லி நிறுத்தாதே 'நோக்காய் நோக்காய் நோக்காய்' என்று பலகாலும் சொல்லிக் கொண்டிருந்து மேலடியில் போகமாட்டாதே நின்றுராம்; அப்போது கோஷ்டியில் வீற்றிருந்த அவரது திருத்தகப்பனுரான ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் எழுந்திருந்து 'பிள்ளாய்! நீ எம்பெருமான் திருவுள்ளம புண்படும்படி இங்ஙனே பலகாலும் சொல்லி நிர்ப்பந்திக்கலாமோ? அழகிய மிடற்றைத் தந்து நல்ல பாட்டைத் தந்து ஐச்வர்ய ஸந்தானங்களையும் தந்தருளியிருக்க ஒன்றும் செய்யாதாராக நினைத்து இன்னமும் நோக்காய் நோக்காய் நோக்காயென்றுல் இது என்னே! மேலே பாடு' என்றுராம்.* ... ... (1)

குடிக்கிடந்தாக்கஞ்செய்து நின்தீர்த்தவடிமைக்குற்றேவல் செய்து* உன்போன்
னடிக்கடவாதே வழிவருகின்ற அடியரோர்க்கருளி* நீயோருநாள்
படிக்களவாகநிமிர்த்த நின்பாதபங்கயமேதலைக்கணியாய்*
கோடிக்கோள்போன்மதிள்சூழ்குளிர்வயற்சோலைத் திருப்புளிங்குடிக்கிடந்தானே. (2)

| | | | |
|---|---|---|---|
| கொடி கொள் பொன் மதிள் சூழ் | கொடிகளாலே அலங்காரங் கொண்ட பொன்மயமான மதிளாலே சூழப்பட்டு | உன் பொன் அடி கடவாதே | உனது அழகிய திருவடிகளை விட்டு நீங்காதே |
| குளிர் வயல் சோலை | குளிர்ந்த வயல்களையும் பொழில் களையுமுடைத்தான | வழி வருகின்ற அடியரோர்க்கு அருளி | பரம்பரையாய் வருகின்ற அடியோமுக்கு அருள் செய்து, |
| திருப்புளிங் குடி கிடந்தானே | திருப்புளிங்குடியிலே சயனித் தருளும பெருமானே | நீ ஒரு நாள் | நீ முனபொருகாலத்தில் |
| குடி கிடந்து | ப்ரபந்நகுல மரியாதை வழுவா மலிருந்து | படிக்கு அளவு ஆக நிமிர்த்த | பூமிக்குத் தகுதியாக நிமிர்ந்து அளந்து கொண்ட |
| ஆக்கம் செய்து | குடியில் பண்டில்லாத நன்மை களை யுண்டாக்கி | நின் பாதபங்கயமே | உனது திருவடித்தாமரை யையே |
| தீர்த்த நின் அடிமை குற்றேவல் செய்து | இதரவிஷயங்களில் ருசியைப் போக்கின உன் விஷய மான அந்தரங்க கைங்கரி யங்களைச் செய்து | தலைக்கு அணியாய் | என் தலைக்குத் தக்க அலங்கார மாம்படி பண்ணியருளவேணும். |

***- -உன் திருவடிகளை என் தலைமேல் வைத்தருளவேணு மென்று திருப்புளிங்குடிக் கிடந்தானைப் பிரார்த்திக்கிறார். முன்னிரண்டடிகளால் தம்முடைய சேஷத்வப் பெருமையைப் பேசிக்கொள்ளுகிறார். குடிக்கிடத்தல், ஆக்கஞ் செய்தல், தீர்த்தவடிமைக் குற்றேவல் செய்தல், பொன்னடிக் கடவாதே வழிவருதல் ஆகிய நான்கு விசேஷங்கள் ஆழ்வார் தமகருள்ளனவாக இங்குச் சொல்லப்படுகிறது. குடிக் கிடத்தலாவது–குலமரியாதை தப்பாதபடி வர்த்தித்தல். பரதாழ்வான் தலையிலே முடியை வைக்கப்புக "இக்ஷ்வாகு வம்சத்தவர்களில் மூத்தாரிருக்க இளையார் முடி சூடியறியார்" என்றான் அவன். அப்படியே ஆழ்வாரும் தம்முடைய சேஷத்வத்தைக் காத்துக்கொள்ளும் விஷயத்தில் குலமரியாதை தவறாதவரென்க. ஆசார்ய ஹ்ருதயத்தில் பரதாழ்வானோடு ஆழ்வார்க்கு ஸாம்யம் நிர்வஹிக்குமிடத்து "குடிக்கிடந்தகையறவும்" என்றருளிச் செய்ததுங் காண்க.

ஆக்கஞ் செய்தலாவது — குடியில் பண்டில்லாத நன்மைகளை யுண்டாக்குகை. ஆசார்ய ஹ்ருதயத்தில் (82) *ஜநக தசரத வஸுதேவ குலங்களுக்கு மூத்த பெண்ணும் நடுவிற் பிள்ளையும் கடைக்குட்டியும்போலே இவரும் பிறந்து புகழு மாக்கமுமாக்கி அஞ்சிறையுமறுத்தார்" என்ற விடத்து ஆழ்வார்க்கு பரதாழ்வானோடே ஸாம்யம் நிர்வஹிக்குமிடத்து ஆக்கஞ் செய்தல் என்கிறவிது எடுத்துக் காட்டப் பட்டது. அவ்விடத்து வியாக்கியானத்தில மணவாள மாமுனிகளின் திவ்ய ஸூக்தி வருமாறு — 'ஸ்ரீ பரதாழ்வான் பிறந்து *ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய தர்மம் வக்துமிஹார்ஹஸி, கதம் தசரதாஜ்ஜாதோ பவேத் ராஜ்யாபஹாரக:* இத்யாதியாலே மூத்தாரிருக்க இளையார் முடிசூடக் கடவதன்றென்கிற குலமர்யாதையை நடத்தினவளன்றிக்கே, *ஜடிலம் சீரவஸநம் ப்ராஞ்ஜலிம் பதிதம் புவி* என்றும், *பங்கதிக்தஸ்து ஜடிலோ பரதஸ் த்வாம் ப்ரதீக்ஷதே* என்றும் சொல்லுகிறபடியே ஜ்யேஷ்டரான பெருமாளுடைய விச்லேஷத்தில் ஜடை புனைந்து வல்கலையுடுத்து கண்ண நீராலுண்டான சேற்றிலே தரைக்கிடை கிடந்து குலத்துக்கு முன்பில்லாத ஏற்றத்தையுண்டாக்கினாப்போலே ஆழ்வாரும் *குடிக்கிடந்து* என்கிறபடியே சேஷத்வ குலமர்யாதை தப்பாதபடி நின்றமாத்ரமன்றிக்கே, *ஆக்கஞ் செய்து* என்கிறபடியே சேஷி விரஹக்லேசாதிசயத்தாலே *காணவாராயென்றென்று கண்ணும் வாயுந்துவர்ந்து, *கண்ண நீர் கைகளாலிறைத்து, காலிட்ட கையாம்படி நிச்சேஷ்டராய்த் தரைக்கிடைகிடந்த ப்ரேமவிசேஷத்தாலே ஸ்ரீகுடிக்குப் பண்டில்லாத வேற்றத்தையுமுண்டாக்கினார்" என்று.

நின் தீர்த்த வடிமைக் குற்றேவல் செய்து — அடிமைக் குற்றேவலென்றும் தீர்த்தவடிமைக் குற்றேவலென்று மிரண்டுண்டு; எம்பெருமான் திறத்துக் கைங்கர்யம் பண்ணுவது அடிமைக் குற்றேவல், அப்போது விஷயாந்தரங்களிலும் போக்யதாபுத்தி அநுவர்த்தித்திருக்கவுங்கூடும் ; அப்படியன்றிக்கே தன்னுடைய பரம போக்யதையாலே இதர புருஷார்த்தத்தில் நசையை அறவேயறுத்த அடிமைக் குற்றேவலுண்டு, அதற்குத் தீர்த்த வடிமைக் குற்றேவலென்று பெயர். *மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு* பரமாத்மநி யோ ரக்தோ விரக்தோபரமாத்மநி* என்னுமாபோலே. நாமும் கதாசித் பகவத் விஷயத்திலே அடிமைக் குற்றேவல் செய்யா நின்றோமாகிலும் விஷயாந்தரங்களில் நசையும் கலசியிருக்கும். அவற்றைக் காரியுமிழ்ந்து செய்யும் குற்றேவலே தீர்த்த வடிமைக் குற்றேவல். அதனைச் செய்து.

உன் பொன்னடிக் கடவாதே வழிவருகின்ற — இது அத்யந்த பாரதந்த்ர்யத்துக்குச் சேர்ந்ததொரு வழிபாடு. இளைய பெருமாளும் அடிமை செய்தார். பரதாழ்வானும் அடிமை செய்தான். இளைய பெருமாளுடையது நிர்ப்பந்தித்த வடிமை; பாரதந்த்ரியம் குடிபுகாத வடிமை; பரதாழ்வானுடையது அப்படிப்பட்டதன்று; *ஸ காமம் அநவாப்யைவ* என்று நிற்கச் செய்தேயும் *ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்ட:* என்று நின்றதே. ஆகவே பொன்னடிக் கடவாத வழிபாடாவது ஆணையை மீறாத வழிபாடென்றதாயிற்று. ஆக இப்படிப்பட்ட

வழிபாடுகளில் ஊன்றியிருக்குமடியாரான வெமக்குக்கருணை புரிந்து. 'அருளி' என்ற வினையெச்சம் 'அணியாய்' என்ற வினைமுற்றிலே சென்று அந்வயிக்கும். அடியரோர்க்கருளிப் பாதபங்கயமே தலைக்கணியாய் என்க.

பாதபங்கயத்தை விசேஷிக்கிறார் நீயொருநாள் படிக்களவாக நிமிர்த்த என்று. குணகுண நிரூபணம் பண்ணாதே எல்லார் தலையிலும் வைத்த திருவடிகளல்லவா? அப்ரதிஷேதமே பற்றாசாக விஷயீகரிக்கும் திருவடிகளல்லவா? அவற்றை, ஆசைப்படுமென் தலையிலே வைக்கலாகாதோ? விசாலமான பூமிக்களவாக்கின திருவடியை என்தலைக்கு அளவாக்கலாகாதோ? *கோலமாமென் சென்னிக்கு உன் கமலமன்ன குரைகழலே* என்றும் *அடிச்சியோந்தலைமிசை நீயணியாய் ஆழியங்கண்ணாவுன் கோலப்பாதம்* என்றும் ஆசைப்பட்டுக் கிடக்குமென் தலையிலே உன் பாத பங்கயத்தை வைத்தருளாய்.

இனி ஈற்றடி "கொடிக்கொள் பொன்மதிள்சூழ் குளிர்வயல்சோலைத் திருப்புளிங்குடிக் கிடந்தானே" என்பது. இதற்கு நம்பிள்ளையருளிச் செய்யும் வியாக்கியானத்தைக் கண்டால் 'என்னே அவருடைய மேதாவிலாஸம்!' என்று உருகவேண்டியிரா நின்றது; ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"[கோடி யித்யாதி.] *ஸா ராமஸங்கீர்த்தநவீதசோகா ராமஸ்ய சோகேந ஸமாநசோகா*=பிராட்டிக்கு, பெருமாளுடைய ஸத்பாவத்தில் அதிசங்கையாலேயும் ஒரு சோகமுண்டு; பிரிவாற்றாமையாலே படுகிறதும் ஒரு சோகமுண்டு; அதில் திருவடியைக் கண்டபின்பு ஒன்று தீர்ந்ததிறே. அப்படியே, ஸுரக்ஷிதமாய் ச்ரமஹரமான தேசத்திலே கண்வளர்ந்தருளப் பெற்றபடியாலே 'இத்தலைக்கு என் வருகிறதோ?' என்கிற பயம் தீர்ந்தது; இனி யென்னை விஷயீகரிக்குமதுவே குறை; அக்குறையும் தீர்த்தருளவேணும்" என்று. இக்கருத்தைச் சிறிது விவரிப்போம்; ஆழ்வார்க்கு இரண்டு சோகங்களுண்டாம்; திருநாட்டிலே மங்களாசாஸநபரர்களான நித்யஸூரிகள் புடைசூழ நிர்ப்பயமாய் எழுந்தருளியிருக்குமவன் ஆஸுரவர்க்கம் மலிந்த இவ்விருள்தருமாஞாலத்திலே வந்து ஒரு மூலையிலே கிடக்கிறானே! அந்தோ! என்ன அவத்யம் வருகிறதோவிங்கு—என்பது ஒரு சோகம். இப்பெருமானோடே யதாமநோரதம் தமக்கு அநுபவம் கிடைக்கவில்லையே யென்பது மற்றொரு சோகம். இவ்விரண்டு சோகங்களில் முந்தின சோகம் தீரப்பெற்றதாம்; எப்படி யென்னில், கொடிக்கொள் பொன்மதிள் சூழ்ந்திருக்குமிருப்பைக் கண்டதனாலே 'அவனுக்கென் வருகிறதோ!' என்கிற சோகம் தொலைந்ததாம். இனி இரண்டாவது சோகம் தீரவேணுமென்பதே மூன்றாமடியினால் தெரிவிக்கப்பட்டதாயிற்று. ... ... ... (2)

கிடந்தநாள் கிடந்தாயெத்தனைகாலங்கிடத்தி உன்திருவுடம்பசைய*
தொடர்ந்துகுற்றேவல்செய்து தொல்லடிமைவழிவருந்தொண்டரோர்க்கருளி*
தடங்கொள்தாமரைக்கண்விழித்து நீயெழுந்துன்தாமரைமங்கையும்நீயும்*
இடங்கொள்மூவுலகுந்தொழவிருந்தருளாய் திருப்புளிங்குடிக்கிடந்தானே. (3)

திருப்புளிங் குடி கிடந்தானே { திருப்புளிங்குடியிலே திருக்கண் வளர்ந்தருளுகிறவனே !,
கிடந்த நாள் கிடந்தாய் { இங்கு சயனிக்கத் தொடங்கின காலம் முதலாக இப்படியே ஏகரீதியாகச் சயனித்துக் கொண்டிரா நின்றாய் ;
உன் திரு உடம்பு அசைய } உன் திருமேனி நோவ
எத்தனை காலம் கிடத்தி { இன்னு மெத்தனை காலம் சயனித்திருப்பாய் ;

(இனி)
தொடர்ந்து குற்றேவல் செய்து } நிரந்தரமாக நித்ய கைங்கரியஞ் செய்து
தொல் அடிமை வழிவரும் தொண்டரோர்க்கு அருளி } அநாதியான அடிமைவழியிலே அந்வயித்திருக்கின்ற அடியோமுக்கு அருள் செய்து

| | | | |
|---|---|---|---|
| தடம் கொள் தாமரை கண் விழித்து | (உன்து) விசாலமான தாமரைக்கண்களைப் பரக்க விழித்து | இடம் கொள் மூ உலகும் தொழ | விசாலமான மூவுலகமும் தொழும்படியாக |
| உன் தாமரை மங்கையும் நீயும் | திருததேவியாருடனே | இருந்தருளாய் | வீற்றிருந்து ஸேவை ஸாதிக்க வேணும். |

***—ஆசார்யஹ்ருதயத்தில் (81) "பண்டைநாளிற்பிறவி உண்ணாட்டுத்தேசிறே" என்றொரு அத்புதமான ஸூக்தியருளிச் செய்கிறார். *பண்டைநாளிற்பிறவி* என்றது ஒரு கம்பீரமான வருளிச் செயல். *பண்டை நாளாலேயென்று தொடங்குகிற இத்திருவாய்மொழியில் ஒரு விலக்ஷணமான பிறவி சொல்லப்படுகிறது; அதாவது, தாஸ்ய விரோதியான ஜந்மாத்யபிமாநமின்றிக்கே கைங்கர்யாநுரூபமான குடிப்பிறவி. இப்பதிகத்தில் முதற் பாட்டில் *பல்படிகால் குடிகுடி வழிவந்தாட் செய்யுந்தொண்டர்* என்றார்; இரண்டாம் பாட்டில் *உன் பொன்னடிக்கடவாதே வழிவருகின்ற வடியார்* என்றார்; மூன்றாம் பாட்டான விதில் *தொல்லடிமை வழிவருந்தொண்டர்* என்கிறார். இப்படிப்பட்ட மிகச்சிறந்ததான தொண்டக்குலப் பிறவியை வெளியிடும் பதிகமாயிற்று இது.

தொடர்ந்து குற்றேவல் செய்து தொல்லடிமை வழிவருந்தொண்டராம் ஆழ்வார். எம்பெருமான் போமிடமெங்கும் இளையபெருமாளைப் போலே கூடவே திரிந்து 'இந்த நிலைமையில் இன்ன கைங்கரியம் செய்ய வேணும், இந்த நிலைமையில் இன்ன கைங்கரியம் செய்ய வேணும்' என்று அந்தரங்கவடிமைகளைச் செய்து ஆத்மாவுக்கு ஸ்வாபாவிகமான அடிமையில்நின்றும் வழுவாதிருப்பவர் என்க. இப்படிப்பட்ட தொண்டரான தமக்கு அருள வேணுமென்று இரண்டாமடியால் பிரார்த்திக்கிறபடி. அருள் செய்யவேண்டும் ப்ரகாரத்தைப் பின்னிரண்டடிகளால் விளக்குகிறார். தடங்கொள் தாமரைக்கண் விழிக்கவேணும், எழுந்திருக்க வேணும்; கைங்கரியங் கொள்ளுகைக்குத் தாமரைமங்கையோடுகூட விருக்கவேணும்; என்னுடைய கோரிக்கையை நிறைவேற்றியருளும் வியாஜத்தினால் மூவுலகுந்தொழ வீற்றிருந்தருள வேணும் என்றிரக்கிறார்.

அர்ச்சாவதாரநிலை என்றைக்குமொருபடிப்பட்டே யிருக்குமென்பதும் அது குலைக்க வொண்ணாததென்பதும் ஆழ்வாரறியாததன்று; அறிந்து வைத்தும் "நீ யெழுந்து—இருந்தருளாய்" என்று பிரார்த்திக்கிறார்—திருமழிசைப்பிரான் திருக்குடந்தையாராவமுதன் பக்கலிலே பிரார்த்தித்துப் பெற்றாரென்னும் ப்ரஸித்தியாலே. *நடந்த கால்கள் நொந்தவோ நடுங்க ஞாலமேனமாய், இடந்தமெய் குலுங்கவோ விலங்குமால் வரைச்சுரம், கடந்தகால் பரந்த காவிரிக்கரைக் குடந்தையுள், கிடந்தவாறு—எழுந்திருந்து பேசுவாழி கேசனே! (திருச்சந்த விருத்தம்) என்ற பாசுரத்திலே திஹ்யமுணர்க.

அப்பாசுரத்தின் சாயலாகவே யருளிச்செய்கிறார் கிடந்தநாள் கிடந்தாயெத்தனை காலங் கிடத்தி உன் திருவுடம்பசைய=கிடையழகு காணவேணுமென்று ஆசைப்பட்ட வொருவனுக்காகக் கண்வளர்ந்தருளினாய்; இனியொருவன் வந்து "கிடந்தவாறெழுந்திருந்து பேசு" என்றால் அதற்குப் பிறகும் கிடந்தருளலாமோ? எழுந்திருக்க வேண்டியதன்றோ. [உன் திருவுடம்பசைய எத்தனை காலங்கிடத்தி] இடம்வலங் கொள்ளாதே ஏகாகாரமாக நெடுங்காலம் சயனமே செய்தருளினால் சாலவும் சிரமமாயிராதோ? ஸுகுமாரமான திருமேனிக்குத் தகுமோவிது. என்றைக்கோ வொருவன் பிரார்த்தித்தானென்று அவனுடைய வேண்டுகோளையே பார்க்குமித்தனையோ? திருமேனியின் ஸௌகுமார்யத்தையும் அடியேன் போல்வாருடைய வேண்டுகோளையும் கணிசிக்க வேண்டாவோ? "கோப்புடைய சீரிய சிங்காசனத்

இருந்து யாம் வந்த காரியமாராய்ந்தருள்'' என்று வேண்டினால் அங்ஙனமே செய்தருள வேண்டாவோ? .... ... .... (3)

புளிங்குடிக்கிடந்து வரகுணமங்கையிருந்து வைகுந்தத்துள்நின்று*
தெளிந்தவென்சிந்தையகங்கழியாதே என்னையாள்வாயெனக்கருளி*
நளிர்ந்தசீருலக மூன்றுடன்வியப்ப நாங்கள் கூத்தாடிநின்றார்ப்ப*
பளிங்குநீர்முகிலின்பவளம் போற்கனிவாய்சிவப்ப நீகாணவாராயே. (4)

| | | | |
|---|---|---|---|
| புளிங்குடி கிடந்து | திருப்புளிங் குடியிலே சயனித்தும் | உலகம் மூன்று உடன் வியப்ப | மூவுலகும் ஒருமித்து ஆச்சரியப் படும்படியாகவும் |
| வரகுண மங்கை இருந்து | வரகுண மங்கையிலே வீற்றிருந்தும் | | |
| வைகுந்தத்துள் நின்று | ஸ்ரீ வைகுண்டத்திலே நின்றும் | நாங்கள் கூத்தாடி நின்று ஆர்ப்ப | நாங்களும் கூத்தாடிக் கோலாஹலம் செய்யும்படியாகவும் |
| தெளிந்த என் சிந்தை அகம் கழியாதே என்னை ஆள்வாய் | என் சிந்தையைத் தெளிவித்து அங்கே விட்டுப் பிரியாதேயிருந்து என்னை யாளுமவனே! | பளிங்கு நீர் முகிலின் | தெளிந்த நீரையுடைத்தான காளமேகத்திலே |
| | | பவளம் போல் | பவளக்கொடி படர்ந்தாற் போலே |
| | | கனிவாய் சிவப்ப | கனிந்த திருவதரம் சிவந்து தோன்று மழகை |
| எனக்கு அருளி | என் திறத்திலே க்ருபை பண்ணி, | | |
| நளிர்ந்த சீர் | (உனது) குளிர்ந்த திருக்குணத்தைப் பற்றி | காண நீ வாராய் | நாங்கள் காண நீ வாராய். |

***—இவ்யதேசங்களில் சில தலங்களில் சயனிப்பது, சில தலங்களில் வீற்றிருப்பது, சில தலங்களில் நிற்பதாகவன்றோவுள்ளது. இந்நிலைமைகளைத் தனித்தனியே அநுபவிப்பது தவிர, இவை மூன்றையும் சேர்த்தநுபவிப்பதொரு சுவையுமுண்டு ஆழ்வார்களிடத்தில். *நின்ற தெந்தையூரகத்து இருந்ததெந்தை பாடகத்து அன்று வெஃகணைக் கிடந்தது* என்றார் திருமழிசைப்பிரான். *நின்றவாறு மிருந்தவாறும் கிடந்தவாறும் நினைப்பரியன* என்றார் இவர்தாமே கீழே. திருமங்கையாழ்வார் திருநெடுந்தாண்டகத்தில் *கல்லுயர்ந்த நெடுமதிள்சூழ் கச்சிமேயகளிறென்றும் கடற்கிடந்த கனியேயென்றும் அல்லியம்பூமலர்ப்பொய்கைப் பழனவேலியணியழுந்தூர் நின்றுகந்தவம்மானென்றும்* என்றொரு பாசுரம் பாடினார். இதில் *கச்சிமேய களிறென்பதற்குத் திருப்பாடகத்தெம்பெருமானை அர்த்தமாகவுரைத்தார் பெரியவாச்சான்பிள்ளை. களிறு என்றதற்குப் பொருத்தமாக ஹஸ்திகிரிநாதரான பேரருளாளப் பெருமாளை அர்த்தமாகப் பணிக்க வேண்டியிருக்க அவரைவிட்டு ஒரு மூலையிலுள்ள பாண்டவ தூதனை எதுக்குப்பணித்தாரென்று சிலர் விசிகித்ஸை செய்வதுண்டு; ஆழ்வாருடைய திருவுள்ளமறிந்து செய்தருளின வியாக்கியான மன்றோவது; அப்பாட்டில், கடல்கிடந்த கனியே யென்று கிடையழகையும், அணியழுந்தூர் நின்றுகந்த வம்மானென்று நிலையழகையும் அநுபவித்திருக்கையாலே அதற்குப் பொருத்தமாக வீற்றிருக்குமழகின் அனுபவந்தான் ஆழ்வாருடைய திருவுள்ளத்தில் உறைந்திருக்குமென்றும் அதற்குச்சேர ஸ்ரீபாண்டவதூதனையே பொருளாகக் கொள்ளவடுக்கு மென்றும் திருவுள்ளம்பற்றியே பெரியவாச்சான்பிள்ளை வீற்றிருந்த தலமான திருப்பாடகத்தை யெடுத்துக் காட்டியருளினர். அநுபவரஸிகர்களின்படி இது. இந்த ரீதியிலே "புளிங்குடிக்கிடந்து வரகுணமங்கையிருந்து வைகுந்தத்துள் நின்று" என்று இப்பாசுரமமைந்தவழகு பரமபோக்யம்.

ஆசார்யஹ்ருதயத்தில் — திருவாய்மொழியாயிரத்திலும் நம்மாழ்வாருகந்த திவ்ய தேசங்களில் விளங்கும் திருக்குணங்களை ஒவ்வொன்றாக எடுத்துக் காட்டும் பிரகரணத்தில், இம்மூன்று தலங்களிலுஞ் சேர்ந்து ஒன்றாக விளங்குந்திருக்குணத்தை யெடுத்துக்காட்டியுள்ள சூர்ணையாவது—“போக்யபாகத்வரை தெளிந்த சிந்தைக்கு முன்னில் மூன்றிலும் ப்ரகடம்” என்பது. (இதன் கருத்தாவது) பசி கனத்தவன் அன்னம் பக்வமாகுமளவும் ஆறியிருக்க மாட்டாமல் பதற்றத்தாலே அன்னம் பக்வமாகுமிடத்திற்கு அணித்தாகவந்து கிடப்பதும் இருப்பதும் நிற்பதுமாய் தன்னுடைய அலமாப்பைக் காட்டுவனும்; அதுபோல, எம்பெருமானும் தனக்கு போக்யபூதரான ஆழ்வார்க்குப் பரமபக்திபாகம் பிறக்குமளவும் ஆறியிருக்க மாட்டாமல் தனக்குண்டான பதற்றத்தைத் திருப்புளிங்குடி வரகுணமங்கை ஸ்ரீவைகுண்டங்களில் கிடப்பதிருப்பது நிற்பதான நிலைமைகளினால் காட்டியருள்கிறானும். இதை ஆழ்வார் *தெளிந்த வென்சிந்தை யகங்கழியாதே யென்னையாள்வாய்!* என்கிற விளியினால் ஒருவாறு காட்டியருளுகிறார். பசிகனத்தவன் அன்னம் பக்வமாகுமிடத்தை விட்டகலாதாப்போலே எம்பெருமானும் ஆழ்வாருடைய பக்திபரிபக்வமாகுமிடமான திருவுள்ளத்தைவிட்டு அக [illegible]

திருப்புளிங்குடியிலே கிடந்ததோர் கிடக்குமழகைக் காட்டியும், வரகுணமங்கையிலே *பிரானிருந்தமை காட்டினீர்* என்னுமிருப்பழகைக் காட்டியும், ஸ்ரீவைகுண்டத்திலே *நிலையார நின்றான்* என்னும் நிலையழகைக் காட்டியும் தம்மையீடுபடுத்திக் கொண்டமையை முதலடியிலே பேசினாராயிற்று.

தெளிந்த வென்சிந்தை யகங்கழியாதே யென்னை யாள்வாய்—என் சிந்தையைத் தெளிவித்து அத்தைவிட்டுப் பிரியாதேயிருந்து குணஜ்ஞானத்தாலே யென்னைத் தரிப்பித்துக் கொண்டு போருமவனே! என்றபடி. அயோக்யதாநுஸந்தானம் பண்ணி அகலாதபடி *கண்கள் சிவந்தென்கிற பதிகத்திலே என்னுள்ளத்தைத் தெளிவித்து அத்தைக் கைவிடாதே அதிலே நிரந்தரவாஸம்பண்ணி எடுப்பும் சாயப்புமாக என்னை நடத்திக்கொண்டு போருமவனே! என்க.

எனக்கருளி என்பது நீ காணவாராயே யென்பதிலே அந்வயிக்கும். நளிர்ந்த சீரை உலகம் மூன்றும் வியக்கவும், நாங்கள் கூத்தாடி நின்று ஆர்க்கவும் நீ வரவேணும் என்கிறார். ‘நளிர்ந்த சீர்’ என்றது குளிர்ந்த குணம் என்றபடி. அநுஸந்தித்தவர்களின் உள்ளத்தைக் குளிரச்செய்யும் சீல்குணமென்க. ‘ஆழ்வார் எப்படி யபேக்ஷித்தாரோ அப்படியே செய்தான்’ என்று இம்மஹா குணத்தைச் சிறியார் பெரியாரென்னும் வாசியின்றிக்கே எல்லாருமறிந்து ஆச்சரியப்படும்படி வரவேணும். அவ்வளவேயுமன்றிக்கே நாங்களும் மதுவனமழித்த வானர முதலிகள் போலே ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணி நின்று கோலாஹல பரவசர்களாம்படியாகவும் வரவேணும் என்கிறாராயிற்று.

பளிங்கு நீர் முகிலின் பவளம்போல் கனிவாய் சிவப்ப—தெளிந்த நீர் நிறைந்த காள மேகத்திலே பவளக்கொடி படர்ந்தாற்போலே யிருக்கிற திருவதரம் சிவந்து தோன்றுமழகை நாங்கள் காணும்படியாகவும் வரவேணும். ... ... .... (4)

பவளம்போல்கனிவாய் சிவப்பநீகாணவந்து நின்பன்னிலாமுத்தம்*
தவழ்கதிர்முறுவல்செய்து நின்திருக்கண்தாமரை தயங்கநின்றருளாய்*
பவளநன்படர்க்கீழ்ச்சங்குறைபொருநல் தண்திருப்புளிங்குடிக்கிடந்தாய்*
கவளமாகளிற்றினிடர்கெடத்தடத்துக் காய்சினப்பறவையூர்ந்தானே. (5)

| | | | |
|---|---|---|---|
| பவளம் நன் படர் கீழ் | நல்ல பவளப் படரின் கீழே | பவளம் போல் கனிவாய் சிவப்ப | பவளம் போன்று கனிந்த அதரம் சிவந்து தோன்ற, |
| சங்கு உறை பொருநல் | சங்குகள் உறையப் பெற்ற தாமிர பர்ணியையுடைய | நின் பல் நிலா முத்தம் | உன்னுடைய பல்லாகிற நிலாவையுடைய அதரத்தினது |
| தண் திருப்புளிங் குடி கிடந்தாய் | அழகிய திருப்புளிங் குடியிலே திருக்கண் வளர்ந்தருளு மவனே ! | | |
| கவளம் மா களிற்றின் | கவளங்கொள்ளுமியல்வின ஞன கஜேந்திராழ்வானு டைய | கதிர் தவழ் முறுவல் செய்து | கதிர் உள்ளடங்காதே புறம்பே தவழும்படி புன்முறுவல் செய்து |
| இடர் கெட | துயரம் தீரும்படி | காண நீ வந்து | நான் காணும்படி நீ வந்தருளி |
| தடத்து | பொய்கைக் கரைக்கு | | |
| காய் சினம் பறவை ஊர்ந்தானே | (விரோதிகள் திறத்து) வெவ்விய சினத்தை யுடைய பெரிய திருவடியை நடத்திக் கொண்டு வந்தவனே !, | நின் திரு கண் தாமரை தயங்க நின்றருளாய் | உனது திருக்கண்களாகிற தாமரை விளங்கும்படி நின்றருளவேணும். |

* * *—இப்பாட்டில் *கவளமாகளிற்றினிடர்கெடத் தடத்துக் காய்சினப் பறவையூர்ந்தானே !* என்ற விளியினால், கஜேந்திராழ்வானுக்கு வந்து தோற்றினாற்போலே தமக்கு வந்து தோற்றி யருளவேணுமென்று பிரார்த்திக்கின்றமை விளங்கும். கீழ்ப் பாட்டில், பவளம போல் கனிவாய் சிவப்பக் காண வரவேணுமென்றாரே ; அவ்வளவிலும் பர்யாப்தியில்லாமையாலே இன்னமும் சில மநோரதங்களையும் விஜ்ஞாபிக்கிறாரிதில். பவளம் போல் கனிவாய் சிவப்பக் காண வந்து, அதற்குமேலே பன்னிலாமுத்தம் தவழ்கதிர் முறுவல் செய்யவேணும்; அதற்குமேலே திருக்கண் தாமரை தயங்க நின்றருளவும் வேணும் என்கிறார். பல்லாகிற நிலாமுத்து நிரையானது கதிர் உள்ளடங்காதே புறம்பே தவழும்படி புன்முறுவல் செய்யவேணுமென்கிறார். நிலாமுத்த மென்றது—ஒளியுடைய முத்துக்கோவை யென்றபடி. இனி வேறொருவகையாகவும் பொருள் கூறுவர் ; முத்தம் என்று அதரத்தைச் சொன்னபடியாய், அதரத்திலே பல் நிலாக்கதிர் தவழும்படி என்று. முந்துற நாலடிவந்து, பின்னை அதுவும் மாட்டாதே ஸ்தப்தனாய் நிற்கும் நிலை காணவேண்டி "நின் திருக்கண்தாமரை தயங்க நின்றருளாய்" என்கிறார்.

பின்னடிகளிரண்டும் விளி. நல்ல பவளப் படரின் கீழே சங்குகள் நிராபாதமாய் வர்த்திக்கப் பெற்ற தாமிரபர்ணியையுடைத்தான திருப்புளிங்குடியிலே திருக்கண் வளர்ந்தருளுமவனே !, *நாராயணாவோ மணிவண்ணா நாகணையாய் ! வாராய் யென்னாரிடரை நீக்காய்* என்று கூவியழைத்த ஸ்ரீகஜேந்திராழ்வானுடைய இடர் கெடும்படியாக மடுவின் கரையிலே பெரிய திருவடியை நடத்தினவனே ! என் வேண்டுகோளைத் தலைக்கட்டியருள வேணுமென்றதாயிற்று.

* கவளமாகளிறு என்றது யானையின் சாதிக்குரிய சொற்போக்கு. "கவளம்மால் யானை கொன்ற" "கவள யானை கொம்பொசித்த" "கவளக்கடாக்களிறட்ட பிரான்" என்பன காண்க. ... ... ... ... (5)

காய்சினப்பறவையூர்ந்து பொன்மலையின் மீமிசைக்கார்முகில்போல்*
மாசினமாலிமாலிமானென்று அங்கவர்படக் கனன்று முன்னின்ற*
காய்சினவேந்தே கதிர்முடியானே கலிவயல்திருப்புளிங்குடியாய்*
காய்சினவாழிசங்குவாள் வில்தண்டேந்தியெம்மிடர்கடிவானே. (6)

பொன் மலையின் மீ மிசை — பொன்மயமான மஹாமேருமலையின் மேலே படிந்த
கார் முகில் போல் — காள மேகம் போலே,
காய் சினம் பறவை ஊர்ந்து — வெவ்விய டைய பக்ஷி ராஜனை நட,
மா சினம் மாலி — பெரிய சினத்தை யுடையனாய்க் கொண்டு வந்த மாலி யென்ன
மான் மாலி — சுமாலி யென்ன
என்றவர் அங்கு பட — இப்படிப்பட்டவர்கள் அங்கே முடியும் படியாக
கனன்று முன் நின்ற — அவர்கள் முன்னே நின்ற
காய் சின வேந்தே! — காய்சின வேந்தென்னும் திருநாமமுடைய பெருமானே!
முடியானே — விளங்காநின்ற திருவபிஷேகத்தை யுடையவனே!
கலி வயல் திருபுளிங்குடியாய் — செழித்த வயலையுடைய திருப்புளிங்குடியில் வாழ்பவனே!
காய் சினம் — வெவ்விய சினத்தை யுடைய
சங்கு வாள் வில் தண்டு — திருவாழி முதலான பஞ்சாயுதங்களையும் திருக்கைகளில் தரித்துக் கொண்டு
எம் இடர் கடிவானே — எமது இடர்களைப் போக்குமவனே!

[திருக்கண் தாமரை தயங்க நின்றருளாய் என்று கீழ்ப்பாட்டோடே அந்வயம்.]

* * *—கீழ்ப்பாட்டில் அபேக்ஷித்தபடிகளைத் திருச்செவி சாத்தின எம்பெருமான் ‘ஆழ்வீர்! உம்முடைய அபேக்ஷிதங்களறிந்தோம்; அப்படியே செய்ய நமக்கும் விருப்பமுண்டு; ஆனால் அதற்குச் சில ப்ரதிபந்தகங்களுண்டே; அவையிருக்க நாம் எப்படி செய்வது?” என்ன, மாலி ஸுமாலி மால்யவான் முதலான அரக்கர்களை அநாயாஸமாகப் பொடி படுத்தினவுனக்கு என் விரோதிகளைப் போக்குகை அரிதோ? அவர்களிலும் வலிதோ என் விரோதி என்கிறாரிப்பாட்டில். உகவாதார்முன்னே பெரிய திருவடியை மேற்கொண்டு சென்று நின்ற நீ, உகந்து காணவாசைப்பட்ட என் முன்னே அப்படி வந்து நின்றருள நினைத்தால் தடையுண்டோ? அவசியம் அப்படி வந்து நின்றருளவேணும் என்கிறார்.

இராவணனுக்கு முன்பு இலங்கையை யாண்டு கொண்டிருந்த மாலி ஸுமாலிப்ரப்ருதிகளான அரக்கர்களை எம்பெருமான் கருடாரூடனாய்ச் சென்று முடித்தருளின வரலாற்றைத் திருமங்கை யாழ்வார் பெரிய திருமொழியில் (8—6—2) “பொருந்தாவரக்கர் வெஞ்சமத்துப் பொன்றவன்று புள்ளூர்ந்து, பெருந்தோள் மாலி தலை புரளப்போர்ந்தவரக்கர் தென்னிலங்கை, இருந்தார் தம்மையுடன் கொண்டு அங்கெழிலார் பிலத்துப் புக்கொளிப்பக், கருந்தாள் சிலைக் கொண்டான்” என்ற பாசுரத்தினால் விரிவாக அநுஸந்திப்பது காண்க. “அருளாழிப் புள்” என்று விசேஷிக்கப்படுகிற புள்ளரையன் இங்குக் “காய்சினப் பறவை” என்று விசேஷிக்கப்படுகிறான்; விரோதிகளின் மீது எம்பெருமானுக்கு ஒருகால் அருள்தோன்றினாலும் கருடனுக்கு அருள் தோன்றாதாம்; கண்ணற்று அழியச் செய்வனாம். காய்சினப் பறவை யென்றது—விரோதிகள் விஷயத்திலே வெவ்விய சீற்றத்தையுடைய கருடன் என்றபடி. அவன்மேல் எம்பெருமான் ஏறிநின்ற நிலைக்குத் தகுதியாக ஒருவமை கூறுகின்றார் பொன்மலையின் மீமிசைக்கார்முகில்போல் என்று. மேருமலையின்மீது காளமேகம் படிந்தாற்போன்றிருந்த தென்க. கருடன் பொன்மலையாகவும் எம்பெருமான் கார்முகிலாகவுங் கொள்ளப்பட்டனன். அப்படி கருடாரூடனாயெழுந்தருளினபோது மாண்டுபோனவர்களைச் சொல்லுகிறது இரண்டாமடி. ‘மாலிமான்’ என்றதை ‘மான்மாலி’ என்றாக்கி மஹானான மாலி—ஸுமாலி என்று கொள்க. மாலி ஸுமாலிகளைச் சொன்னது மால்யவானுக்கும் உபலக்ஷணம். என்று அவர் பட—என்று சொல்லப்படுகிற அவ்வரக்கர்களெல்லாம் முடியும்படியாக, கனன்று முன்னின்ற—சீற்றங்கொண்டு அவர்கள் முன்னே நின்ற என்றபடி. கொல்லப்பட வேண்டிய பாபிகளான அவர்களுக்குப் பெரிய திருவடிமேல் நின்று ஸேவை ஸாதிக்கவும் வேணுமோ? அடியேனுக்குத்தானே அந்த ஸேவை அரிதாக வேண்டும்? என்பது உள்ளுறை.

காய்சின வேந்தே!=விரோதிகளைக் காய்ந்து போடும் சினத்தையுடைய ஸ்வாமியே! என்றபடி. இங்கு ஓர் ஆராய்ச்சி குறிக்கொள்ளத்தக்கது; திருப்புளிங்குடி யெம்பெருமானுக்குக் ‘காய்சின வேந்து’ என்று திருநாமம். ஈட்டிலும் நம்பிள்ளை இது திருநாமமென்றே யெடுத்துக் காட்டியுள்ளார். இப்படியிருக்க, காய்சின வேந்து என்கிற இச்சொல்லைச் சிலர் ‘காசினி வேந்து’ என்று ஆக்கினதோடு நில்லாமல், காசினி யென்று பூமிக்குப் பெயராதலால் காசினி வேந்தென்றது பூமிக்கு அரசன் என்றவாறு என்று கொண்டு இத்தலத்தெம்பெருமானைப் பூமிபாலன் என்கிற வட சொல்லால் வழங்கி வருகின்றனர். திருநாங்கூரைச் சேர்ந்த பதினொரு திருப்பதிகளையுஞ் சேர்த்து “நந்தாதீப கடப்ரணர்த்தக மஹாகாருண்ய ரக்தாம்பக” இத்யாதியாக ஒரு ச்லோகம் இருப்பதுபோல, ஆழ்வார் திருநகரியைச் சார்ந்த நவ திருப்பதிகளையுஞ் சேர்த்து “வைகுண்டநாத விஜயாஸந பூமிபால” இத்யாதியாக வொரு ச்லோகம் ப்ரஸித்தமாகவுள்ளது. இது மணவாள மாமுனிகள் அருளிச் செய்ததென்றும் சொல்லி வருகிறார்கள். ஈட்டிலருளிச் செய்த படிக்கு நேர்விரோதமாகக் காசினி வேந்தென்று பாடங்கொண்டு பூமிபாலனென்று அதற்கு ஸம்ஸ்க்ருதமாக்கி மணவாள மாமுனிகளருளிச் செய்தாரென்றால் இது ஸம்பாவிதமாகுமோ? ஒரு வியாக்யானத்திலாவது காசினி வேந்தென்கிற பாடமும் அதற்குரிய பொருளும் காணப்படவில்லை. “காயுஞ் சினத்தையுடைய வேந்தே!” என்றே ஸகல வியாக்யானங்களிலு முள்ளது. “இது திருநாமம்” என்று இருபத்தினாலாயிரப்படியிலும் ஈட்டிலும் விசேஷித்து அருளிச் செய்யப்பட்டுமிருக்கிறது. இங்ஙனேயிருக்க, விபரீதம் எங்ஙனே புகுந்ததென்று ப்ராமாணிக ப்ராஜ்ஞர்கள் ஆராயக்கடவர்கள். உண்மை யென்ன வென்றால் காய்சின வேந்தென்பதைக் காசின வேந்தென்று வழங்கிவர, பிறகு அது காசினி வேந்தென்று வழங்கப்பட்டு, அதற்கு பூமிபாலனென்று அர்த்தமும் செய்யப்பட்டதாயிற்று. திவ்யப்ரபந்தத்திலும் வியாக்யானங்களிலும் பரிசய மற்றவர்களின் பணி இது. ஸ்ரீவில்லிபுத்தூர் ஸமீபத்திலுள்ள திருத்தண்கால் என்னுந் திருப்பதியைத் திருத்தங்காலென்று வழங்கி வந்து ஸம்ஸ்க்ருதத்தில் தங்கால க்ஷேத்ரமாக்கி ஸ்தல புராணமும் இட்டிருப்பதுபோல, இங்கும் பூமிபால க்ஷேத்ர மாஹாத்மிய மென்று ஒரு ஸ்தல புராணமும் தோன்றி யிருக்கக் கூடும்.

கதிர் முடியானே!—அடியார்களை ரக்ஷிப்பதற்கென்று நீ திருவபிஷேகம் அணிந்திருக்க, நான் இழக்கலாமோ வென்கிறார்போலும். கலிவயல் திருப்புளிங்குடியாய்!=செழிப்புமிக்க வயலையுடைய திருப்புளிங்குடியிலே திருக்கண்வளர்ந்தருளுமவனே!. நீ இப்படி அணியனாயிருக்க நானிழக்கலாமோ வென்கை. ஈற்றடியில் பஞ்சாயுதச் சேர்த்தியை யருளிச் செய்கிறார். *எப்போதுங் கைகழலா நேமியான் நம்மேல் வினைகடிவான்* என்றாப்போலே அடியோங்களுடைய ஆபத்துக்களைப் போக்குகைக்காக நீ பஞ்சாயுதாழ்வார்களோடே கூடியிருக்க என் ப்ரதிபந்தகங்கள் என் செய்யும்? என்றவாறு.

இப்பாட்டில் வினை முற்று யாடே நின்றிருக்கிறது. கீழ்ப்பாட்டோடே அந்வயம். “எம்மிடர்கடிவானே! ராமரை தயங்க நின்றருளாய்” என்று கூட்டுக. ... ... ... (6)

எம்மிடர்கடிந்திங்கென்னையாள்வானே இமையவர்தமக்குமாங்கனையாய்*
செம்மடல்மலருந்தாமரைப்பழனத் தண்திருப்புளிங்குடிக்கிடந்தாய்*
நம்முடையடியர்கவ்வைகண்டுகந்து நாங்களித்துளநலங்கூற*
இம்மடவுலகர்காண நீயொருநாள் இருந்திடாயெங்கள் கண்முகப்பே. (7)

| | | | |
|---|---|---|---|
| எம் இடர் கடிந்து | எம்முடைய ...ரைப் போக்கி | நாம் | அடியோம் |
| இங்கு என்னை ஆள்வானே | இங்கு என்னை அடிமை கொண்டு போருமவனே ! | நம்முடை அடியர் கவ்வை கண்டு உகந்து | பாகவதர்களின் கோலாஹலங் கண்டு மகிழ்ந்து |
| இமையவர் தமக்கும் ஆங்கு அனையாய் | பிரமன் முதலிய தேவர்களுக்கும் அப்படியே ரக்ஷகனானவனே ! | களித்து உளம் நலம் கூர | உள்ளத்திலுள்ளே பரமானந்தம் பொங்கும்படியாக |
| செம் மடல் மலரும் தாமரை பழனம் | சிவந்த இதழ்கள் மலருகிற தாமரைகள் பொருந்திய நீர் நிலங்களை யுடைத்தான | இம் மடவுலகர் காண | அறிவிலிகளான இவ்வுலகத்தாருங் காண |
| தண் திருப்புளிங்குடி கிடந்தாய் | அழகிய திருப்புளிங்குடியிலே சயனித்தருள்பவனே ! | நீ ஒருநாள் எங்கள் கண் முகப்பே இருந்திடாய் | நீ ஒருநாள் எமது கண்ணெதிரே இருந்தருளவேணும். |

* * *—உலகில் துர்ப்பலர்களென்றும் ப்ரபலர்களென்றும் இருவகுப்பினருளர்; ப்ரபலர்கள் தங்களைத்தாங்களே ரக்ஷித்துக்கொள்ள வல்லவர்களென்பது கிடையாது; எப்படி துர்ப்பலர்கள் எம்பெருமானால் ரக்ஷிக்கப்படவேண்டியவர்களோ, அப்படியே ப்ரபலர்களும் அவன் கைபார்த்திருக்கவேண்டியவர்களே—என்னுமர்த்தத்தை வெளியிட்டுக்கொண்டு, அடியோங்கள் வாழும்படி எங்கள் கண்வட்டத்திலே ஒருநாள் இருக்கவேணுமென்று இரக்கிறார். ஆதியிலேயே *மயர்வற மதிநலமருளினன்யவனவன்* என்று நான்பேசும்படியாக என்னுடைய மயர்வையறுத்து என்னையடிமை கொண்டவனன்றோ நீ என்னுங்கருத்துப்படவருளிச் செய்கிறார் எம்மிடர்கடிந்து இங்கென்னையாள்வானே யென்று. இருள்தருமாஞாலமான விந்நிலத்திலேயன்றோ இவ்வுபகாரம் செய்தது! என்பது, இங்கு என்றதனால் காட்டப்ப(

இப்படிரக்ஷகனாவது எங்களுக்கு மாத்திரமல்ல; "ஈச்வரோஹம்" என்று செருக்கியிருக்கிற பிரமன் முதலிய தேவர்களுக்கும் நிர்வாஹகன் நீயேயன்றோ வென்கிறார் இமையவர் தமர்க்குமாங்கனையாய்/ என்று. இப்படி துர்ப்பலரோடு ப்ரபலரோடு வாசியற அனைவர்க்கும் ரக்ஷகன் நானேயென்னுமிடத்தை ஸர்வலோகஸாக்ஷிகமாக நிரூபித்துக்கொண்டு திருப்புளிங்குடியிலே சாய்ந்தருளாநிற்பவனே யென்கிறது இரண்டாமடி. தமக்குச் செய்தருளவேண்டுவதைப் பின்னடிகளாலருளிச்செய்கிறார். "இம்மடவுலகர்காண நீயொருநாள் எங்கள் கண்முகப்பேயிருந்திடாய்" என்பது பிரார்த்தனை. திருப்புளிங்குடியில்நின்று மெழுந்துவந்து திருப்புளியடியிலே ஸேவை தந்தருளவேணுமென்கிறார். ஒருநாளிருந்தால் போதுமோ வென்று கேட்கவேண்டா: பெருவிடாயன் 'நாக்குநனைக்கத் தண்ணீர்வேணும்' என்றால் அதற்கு அவ்வளவேயோ கருத்து. "அதர்சநே தர்சநமாத்ரகாமா: த்ருஷ்ட்வா பரிஷ்வங்க ரஸைகலோலா:" என்றான் ஒருமஹாகவி. முதலடியிலேயே *ஆசாஸ்மஹே விக்ரஹயோரபேதம்* என்று ஆசம்ஸிக்கவொண்ணாதே.

அன்றிக்கே, இருந்திடாய் என்றது—சயனத்திருக்கோலத்தைவிட்டு வீற்றிருந்த திருக்கோலத்தைக் காட்டியருளவேணுமென்று பிரார்த்திக்கிறாரென்றுமாம். மூன்றாமடிக்கு ஆறாயிரப்படியருளிச்செயல்காண்மின்—"உனக்கு நல்லராயிருப்பார் நீயிருந்தருளுமிருப்பைக் கண்டால் படும்பாடுகண்டு நாங்கள் வாழும்படியாக" என்று. 'நும்முடையடியர்' என்பதற்குப் பர்யாயமாக 'நம்முடையடியர்' என்பது உலகவழக்கு. "நம் அகத்தில் எல்லாரும் ஸௌக்கியந்தானே" என்றால் 'நும் அகத்தில்' என்றுதானே பொருள்படும். 'எங்களைப் போன்ற அடியவர்கள்' என்கிற பொருளிலும் 'நம்முடையடியர்' என்பதுண்டு. பக்தபாகவதர்களின் கவ்வையை—கோலாஹலத்தைக்கண்டு நாங்கள் களிக்கும்படியாக என்றதாயிற்று. எம்பெருமான் எழுந்தருளியிருந்து ஸேவைஸாதிப்பது எப்படி உத்தேச்யமோ, அப்படியே

அப்போது பாகவதர்கள் தங்களுடைய ஆனந்தபரீவாஹமாகச் செய்யும் கோலாஹலங்களைக் கண்டுகளிப்பதும் உத்தேச்யம் என்பது இங்குத் தெரிவிக்கப்படுகிறது. *நெல்லுக்கிறைத்த நீர் வாய்க்கால்வழியோடிப் புல்லுக்குமாங்கே பொசியுமால்* என்றகணக்கிலே ஸம்ஸாரிகளும் காணும்படியாகவேணுமென்கிறார் இம்மடவுலகர்காண என்பதனால். இந்த ஸம்ஸாரத்தில் அறிவுகேடராய் இடக்கை வலக்கையறியாதவர்களாயிருப்பாரும் கண்ணாலேகாணும்படியாக வென்கை. "மடவுலகர்" என்பதற்கு ஸ்வாபதேசம் ஆசார்யஹ்ருதயத்தில் (142) "ஊரார் நாட்டார் உலகர் கேவலைச்வர்யகாமஸ்வதந்த்ரர்" என்ற சூர்ணையில் காணத்தக்கது. ... (7)

எங்கள்கண்முகப்பேயுலகர்களேல்லாம் இணையடிதோழுதேழுதிறைஞ்சி*
தங்களன்பாரத்தமது சோல்வலத்தால் தலைத்தலைச்சிறந்துபூசிப்ப*
திங்கள்சேர்மாடத்திருப்புளிங்குடியாய் திருவைகுந்தத்துள்ளாய்தேவா*
இங்கண்மாஞாலத்திதனுளுமோருநாள் இருந்திடாய் வீற்றிடங்கோண்டே. (8)

| | | | |
|---|---|---|---|
| திங்கள் சேர் மாடம் | சந்திர மண்டலத்தளவும் ஓங்கின மாடங்களையுடைய | தங்கள் அன்பு ஆர | தங்களுடைய பக்தி வளர |
| திருப்புளிங்குடியாய் | திருப்புளிங்குடியில் வாழ்பவனே! | தமது சொல் வலத்தால் | தாம் தாம் சொல்லக்கூடிய வளவிலே |
| திருவைகுந்தத்துள்ளாய் தேவா | ஸ்ரீவைகுண்டமென்னுந்திருப்பதியில் நிற்கும் தேவனே!, | தலைத் தலை சிறந்து பூசிப்ப | ஒருவர்க்கொருவர் மேல் விழுந்து ஸ்தோத்திரங்களைப் பண்ணும்படி |
| எங்கள் கண் முகப்பே | எங்கள் கண் முன்னே, | இ கண் மா ஞாலத்து இதனுளும் | இந்த மிக விசாலமான பூமியிலே இத்திருப்புளிங்குடியிலும் |
| உலகர்கள் எல்லாம் | லோகத்திலுள்ளாரெல்லாரும் | வீற்றிடங்கொண்டு | உனது மேன்மை இடங்கொண்டு தோன்றும்படி |
| அடி | | | |
| தொழுதுஎழுது இறைஞ்சி | தொழுவதுமெழுவதுமாயிருந்து வணங்கி | ஒரு நாள் இருந்திடாய் | ஒரு நாளாவது |

***—கீழ்ப்பாட்டில் "இருந்திடாயெங்கள்கண்முகப்பே" என்று ப்ரார்த்தித்த ஆழ்வாரை நோக்கி, 'ஆழ்வீர்; வீற்றிருக்குமழகுகாணவேண்டில் அது திருநாட்டிலே காணும். *ஸவ்யம் பாதம் ப்ரஸார்ய ச்ரிததுரிதஹரம் தக்ஷிணம் குஞ்சயித்வா* இத்தியாதியநுஸந்தானம் இங்குச்செய்யலாமேயொழிய, அது காண்பது பரமபதத்திலேயன்றோ' என்று எம்பெருமானருளிச்செய்ய, அஃது இங்குங்காட்டியருளவேணுமென்கிறாரிப்பாட்டில். பாட்டடியில் எங்கள்கண்முகப்பே யென்றதற்கு ஈற்றடியில் இருந்திடாய் என்றத்தோடே அந்வயம். வீற்றிருக்குமவ்வழகை இம்மைப்பிறவியில் இங்கே காணப்பெறாதே தேசாந்தரே காலாந்தரே காண்பது ஒரு காட்சியோ? எங்கள் கண்முகப்பேயிருந்திடாய். அப்படி இருந்தருளும்போது இவ்வுலகத்திலுள்ளா ரெல்லாரும் திருவடிகளின் சேர்த்தியழகுகண்டு திருவடிகளிலேவிழுவது மெழுவதுமாகி, தங்கள் பிரேமம் புறவெள்ளமிட்டுத் தம்தம் இயற்றிக்குத்தக்கவாறு தோத்திரங்கள் செய்து வழிபடுபவர்களே, அதுவுங்காணவன்றோ நானாசைப்படுவது.

தங்களன்பாரத் தமது சொல்வலத்தால் பூசிக்கையாவது—நூறு பிராயம் புகுவீர், பொன்னாலே பூணுநூலிடுவீர் என்றாப்போலே சொல்லுகை. இவ்விடத்து ஈட்டில் "வங்கிப்புரத்து நம்பி விஜயஸ்வ என்ன, ஆண்டான் சொன்ன வார்த்தையை நினைப்பது" என்றுள்ளது. அவ்வைதிஹ்யமாவதென்னென்னில்; வங்கிப்புரத்து நம்பி பெருமாளை ஸேவிக்க எழுந்தருளினவளவிலே ஒரு பக்கத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களும் மற்றொரு பக்கத்தில் ஆய்ச்சிகளும் நின்றுகொண்டு பெருமாளை ஸேவித்திருந்தார்களாம்; வங்கிப்புரத்துநம்பி ஸ்ரீவைஷ்ணவர்கள் நிற்கிற

பக்கமாக நில்லாமே ஆய்ச்சிகள் நிற்கிற பக்கமாக நின்றாராம். அதை முதலியாண்டான் கண்டு 'இதென்ன? ஸ்ரீவைஷ்ணவர் திரளிலே சேராமல் ஆய்ச்சிகள் பக்கமாக நிற்கிறதேன்? என்று கேட்டாராம். அதற்கு நம்பி சொன்னாராம் ' எப்படியும் நாம் பலவகை யபிமானங்கொண்டு அஹங்காரமமகாரயுக்தர்களாயிருப்போம், நம்மேல் பகவத்கடாக்ஷம் பாய்வது மேட்டுமடையாகவேயிருக்கும்; அவர்கள் உண்மையில் தாழ்ச்சியுடையவர்களாயும் தாழ்ச்சி தோற்றப் பேசுமவர்களாயுமிருப்பவர்களாகையாலே அவர்கள்மேல் பகவத்கடாக்ஷம் பாய்வது பள்ளமடையாயிருக்குமென்று அவர்கள் பக்கமாக நின்றேன்' என்று. ஆனாலும் எம்பெருமானை நோக்கி ஆய்ச்சிகள் போற்றும்படியையும் நம்பி போற்றும்படியையும் ஆண்டான் கண்டவராகையாலே இந்த வாசியையெடுத்துக் காட்டவேணுமென்று திருவுள்ளம்பற்றி நம்பியை நோக்கிக் கேட்டாராம்—' ஆய்ச்சிகள் சொன்னதென்? தேவரீர் அருளிச்செய்ததென்?' என்று. "பொன்னாலே பூணுநூலிடுவீர், நூறுபிராயம் புகுவீர், அழுத்தவிரட்டையுடுப்பீர் என்று ஆய்ச்சிகள் சொன்னது; விஜயஸ்வ, விஜயீபவ இத்யாதிகள் அடியேன் சொன்ன வார்த்தை" என்று நம்பி சொல்ல, அதற்கு ஆண்டான் "அங்குப்போயும் முரட்டு ஸம்ஸ்க்ருதம் விட்டிலீலையே; எங்கேயிருந்தாலும் நாம் நாமே; இங்கே யெழுந்தருளீர்" என்றருளிச் செய்தாராம். இதுதான் தங்களன்பாரத் தம்து சொல்வலத்தால் பூசிப்பது. அது தன்னிலும் தலைத்தலைச் சிறந்து பூசிப்பதாவது—ஒருவர்க்கொருவர் மேல்விழுந்து மிகவும் ஆச்ரயித்துக் கொண்டாடுவது. இப்படிப்பட்ட ஸந்நிவேசங்களையெல்லாம் ஆழ்வார் காண விரும்புகிறபடி.

திங்கள்சேர் மாடத்திருப்புளிங்குடியாய்—சந்திரமண்டலத்தளவும் ஓங்கியிராநின்ற மாடங்களையுடைய திருப்புளிங்குடியென்கிறவிது பொய்யுரையல்லவா? *பொய்யில் பாடலாயிரத்தில் இங்ஙனே பொய்யுரை புகலாமா? என்று சிலர் சங்கிக்கக்கூடும்; கேண்மின்; அலங்கார சாஸ்த்ரத்தில் அதிசயோக்தியென்பதோர் அலங்காரமுண்டு. (தமிழர் உயர்வு நவிற்சியணி என்பர்.) அதனை அப்ராப்த விஷயங்களில் உபயோகிப்பர் ஸாமாந்யகவிகள் ஆழ்வார் போல்வார் ப்ராப்த விஷயமான பகவத் விஷயத்திலே உபயோகிப்பர்கள். அவர்களுடைய திருக்கண்களுக்கு அங்ஙனே காட்சிதந்தபடி. உயரவோங்கினமாடங்களுண்டாக வேணுமென்கிற ஆசம்ஸையினால் அருளிச்செய்கிற படியுமாகலாம். *அங்யத்ர அதத்குணோக்திர் பகவதி ந* என்று பட்டருளிச் செய்கையாலே பகவத் விஷயத்தில் பொய்யுரையென்பதற்கு ப்ரஸக்தியில்லையென்க. திருவைகுந்தத்துள்ளாய்=*புளிங்குடிக்கிடந்து வரகுணமங்கையிருந்து வைகுந்தத்துள் நின்று*என்ற பாசுரத்தில் பேசப்பட்ட ஸ்ரீவைகுண்டமென்கிற அணித்தான திவ்ய தேசத்தைச் சொல்லுகிறபடி. ... ... .... (8)

வீற்றிடங்கொண்டுவியன்கோள்மாஞாலத்து இதனுளுமிருந்திடாய்*அடியோம்
போற்றியோவாதே கண்ணிணைகுளிரப் புதுமலராகத்தைப்பருக*
சேற்றிளவாளைசெந்நெலூடுகளும் செழும்பணைத்திருப்புளிங்குடியாய்*
கூற்றமாயசுரர்குலமுதலரிந்த கொடுவினைப்படைகள் வல்லானே. (9)

| | | | |
|---|---|---|---|
| சேறு இளவாளை | தன்னிலமான சேற்றிலே வளருகையாலே இளமை தங்கிய வாளைகள் | கூற்றம் ஆய் | (எதிரிகளுக்கு) மிருத்யுவாய்க் கொண்டு |
| செந்நெலூடு உகளும் | செந்நெற் பயிர்களினிடையே களித்து வர்த்திக்கப் பெற்ற | அசுரர் குலம் முதல் அரிந்த | அஸுரவர்க்கத்தை வேரோடே களைந்தொழித்த |
| செழு பணை திருப்புளிங்குடியாய் | அழகிய நீர் நிலங்களையுடைய திருப்புளிங்குடியிலே வாழ்பவனே! | கொடு வினை படைகள் வல்லானே | கொடுந்தொழில் செய்யவல்ல ஆயுதங்களை விதேயமாக வுடையவனே!, |

| | |
|---|---|
| அடியோம் போற்றி | அடியோங்கள் மங்களாசாஸனம் பண்ணி |
| ஓவாதே | இடைவிடாதே |
| கண் இணை குளிர | கண்கள் குளிருமாறு |
| புது மலர் ஆகத்தை பருக | புதிய மலர்போலே ஸௌகுமார்யமாயிருக்கிற உன் திருமேனியை யநுபவிக்கும்படி |
| வீற்றிடங்கொண்டு | உனது மேன்மை இடங்கொண்டு தோன்றும்படி |
| வியன் கொள் மா ஞாலத்து இதனுளும் | விஸ்தாரமான மஹா பூமண்டலத்தினுள்ளேயும் |
| இருந்திடாய் | இருந்தருளவேணும், |

***—எம்பெருமானுடைய பரமஸௌகுமாரமான திருமேனிக்கு இந்த முரட்டு நிலம் அடியோடு தகாது; ஆயினும் இங்குள்ள பக்தர்கள் ஸேவிக்கும்படியாக இம்முரட்டு நிலத்திலும் எம்பெருமானெழுந்தருளியிருக்க ப்ராப்தமாகிறது என்கிற தத்துவத்தை வெளியிட்டுக்கொண்டு பிரார்த்தனை பண்ணுகிறாரிப்பாட்டில். "மாஞாலத்திதனுளும்" என்கிற உம்மை—எம்பெருமானுடைய ஸௌகுமார்யத்திற்கு இந்நிலத்திலிருப்பு தகுதியற்றது என்னுமிடத்தைக் காட்டித்தரும். வீற்றிடங்கொண்டு இருந்திடாய்=உன்னுடைய பெருமை தோற்ற இருந்தருளவேணுமென்றபடி. இதனுளும்—"உன்னைக்கொண்டு ஒரு கார்யமில்லாத இந்த ஸம்ஸாரத்திலே" என்பர் நம்பிள்ளை. உண்மையில் இந்த ஸம்ஸாரத்திலுள்ள பொருள்களையெல்லாம் ஹேயமென்று சிறிதும் பாராதே உகக்கிறோம்; எம்பெருமானொருவனையே வெறுக்கிறோம்; இப்படியிருந்தும் இங்கே வந்து நிற்பதுமிருப்பதும் கிடப்பதுமாயிருக்கிறானவன் தன்னுடைய பரமக்ருபையாலே. "தன்னை அநாதரிக்கிறவர்களைத் தான் ஆதரித்து நிற்கிறவிடம்" என்பது ஸ்ரீவசநபூஷணம்.

இருந்திடாய்=சாய்ந்தருளினபோதையழகு கண்டோம்; இருந்தருளும் போதையழகுங்காணவேண்டாவோ? அதையுங்காட்டியருளாய் என்கிறார். இங்கே பட்டர் அருளிச்செய்வராம்—"இவையெல்லாம் நமக்குக் கோயிலிலே காணலாமிறே; சாய்ந்தருளினவழகு பெரியபெருமாள் பக்கலிலே; நின்றருளினவழகு நம்பெருமாள் பக்கலிலே; இருப்பிலழகு பெரிய பிராட்டியார் பக்கலிலே" என்று.

'இருந்திடாய்' என்று நிர்ப்பந்திக்கிறது எதற்காகவென்ன, அடியோம் போற்றி ஓவாதே கண்ணிணை குளிரப் புதுமலராகத்தைப்பருக என்கிறார். அடியோமென்றது—இவ்விருப்பைக் காணவாசைப்பட்டிருக்கிற நாங்களென்றபடி. போற்றி — இவ்விருப்பு இங்ஙனே நித்யமாகச் செல்லவேணுமென்று மங்களாசாஸனம்பண்ணி யென்றபடி. புதுமலராகத்தைக் கண்ணிணை குளிரப் பருக—செவ்விப்பூப்போலே ஸௌகுமாரமாயிருக்கிற திருமேனியைக் கண்குளிர அநுபவிக்கும்படியாக. புஷ்பஹாஸ ஸௌகுமாரமான வடிவுக்கு "புதுமலராகம்" என்று ஆழ்வார் திருநாமஞ்சாத்துகிறார். ஆகம்—திருமேனி. 'ஆகத்தைக் காண' என்னவேண்டியிருக்க 'ஆகத்தைப்பருக' என்றது*தேனும்பாலுங்கன்னலுமமுதுமான திருமேனியை "லோசநாப்யாம் பிபந்நிவ" என்கிறபடியே பருகவேணுமென்னுமாசையே தமக்குள்ளமையைக் காட்டினபடி. உபநிஷத்தும் *ரஸோ வை ஸ:* என்று கூறினவிஷயமாகையாலே பருகத்தக்கதேயன்றோ.

திருப்புளிங்குடியின் நீர்வள நிலவளங்களைக்கூறுவது மூன்றாமடி. செந்நெலினிடையே சேற்றிலே வாளை மீன்கள் களித்துத் துள்ளாநிற்கும்படியைச் சொன்னது — அவ்வூரில் அஃறிணைப்பொருள்களுங்கூட அபிமதம் ஸித்தித்துக் களித்து வர்த்திக்கின்றனவே, அப்படி என்னபிமதமும் ஸித்தித்துக் களித்து வர்த்திக்கும்படி செய்தருள வேண்டாவோவென்ற குறிப்பு.

ஈற்றடியால் எம்பெருமானுக்குள்ளதான விரோதிநிரஸந ஸாமர்த்தியத்தை யருளிச்செய்கிறார். இதுகாறும் என்னுடைய இடையூறுகளையெல்லாம் போக்கினவுனக்கு இனிமேலுள்ள இடையூறுகளைப்போக்குதல் அரிதோ? என்பது கருத்து. (9)

கொடுவினைப்படைகள்வல்லையாய் அமரர்க்கிடர்கெட அசுரர்கட்கிடர்செய்*
கடுவினைநஞ்சேயென்னுடையமுதே கலிவயல்திருப்புளிங்குடியாய்*
வடிவிணையில்லாமலர்மகள் மற்றைநிலமகள்பிடிக்கும் மெல்லடியை*
கொடுவினையேனும்பிடிக்கநீயொருநாள் கூவுதல் வருதல்செய்யாயே. (10)

| | | | |
|---|---|---|---|
| கொடு வினை படைகள் வல்லையாய் | (விரோதிகள் திறத்துக்) கொடுந்தொழில் புரியவல்ல ஆயுதங்களைக்கொண்டு காரியஞ்செய்ய வல்லவனே! | வடிவு இணை இல்லா மலர் மகள் | வடிவழகில் ஒப்பற்ற பெரிய பிராட்டியாரும் |
| அமரர்க்கு இடர் கெட | தேவர்களுக்கு இடர் கெடும்படியாக | மற்றை நிலமகள் | அப்படிப்பட்ட பூமிப் பிராட்டியாரும் |
| அசுரர்கட்கு இடர் செய் | அசுரர்களுக்கு துக்கத்தை விளைக்குமிடத்து | பிடிக்கும் மெல் அடியை | வருடுகின்ற ஸௌகுமாரமான திருவடியை |
| கடு வினை நஞ்சே | விரைவில் முடிக்கவல்ல நஞ்சானவனே! | கொடு வினையேனும்பிடிக்க | தௌர்ப்பாக்யசாலியான நானும் வருடுமாறு |
| என்னுடைய அமுதே | எனக்குப் பரம போக்யமான அம்ருதமே! | ஒரு நாள் | ஒரு நாளாகிலும் |
| கலி வயல் திரு புளிங்குடியாய் | செழித்த வயல் சூழ்ந்த திருப்புளிங்குடியில் வாழ்பவனே! | கூவுதல் வருதல் நீ செய்யாய் | என்னை யழைத்துக் கொள்வதோ நீ வந்தருள்வதோ செய்யவேணும். |

***—கீழே ஆரம்பத்தில் தோழிபாசுரமாக அவதரித்த*துவளில்மாமணிமாடப் பதிகத்தில் *பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல் பிறந்திட்டாள்* என்ற பாசுரத்தினால் ஆழ்வார் பிராட்டிமாருடைய ப்ராதுர்ப்பாவவிசேஷமென்பது காட்டப்பட்டிருக்கின்றதல்லவா; அப்பிராட்டிமார்தாம் *கேசவநம்பியைக் கால்பிடிப்பாளென்னும் பேற்றைப் பெற்றவர்களாகையாலே அப்பேற்றில் தமக்கும் அந்வயமுண்டாகவேணுமென்று கருதி, உன்னுடைய திருவடிகளிலே நானும் வந்து அடிமை செய்யும்படி என்னை அங்கேயழைப்பதோ, நீ யிங்கேவருவதோ இரண்டத்தொன்று செய்யவேணுமென்கிறார்.

எம்பெருமான் கீதையில் தன்னைப்பற்றித் தானே சொல்லிக்கொள்ளும்போது*ஸமோஹம் ஸர்வபூதேஷு நமே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய:* என்று, தான் ஸர்வபூதங்களிடத்தும் ஒருநிகராயிருப்பவனென்றும், தனக்கு த்வேஷபாத்ரமாவானும் ப்ரீதிபாத்ரமாவானும் ஒருவனுமில்லையென்றும் சொல்லிக்கொள்ளுகிறான். இப்படி அவன் தான் சொல்லிக்கொள்வது மாத்திரமேயல்லாமல் அவனையறிந்தவர்கள் சொல்லுமிடத்தும் *தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்* என்று தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் பொதுவான தெய்வமென்கிறார்கள். இப்படிப்பட்ட எம்பெருமான் அமரர்களை வாழ்விப்பதும் அசுரர்களைத் தொலைப்பதுமாயிராநின்றான்; இப்பாட்டில் "அமரர்க்கு இடர்கெட அசுரர்கட்கிடர்செய்" என்று அருளிச்செய்யப்படுகிறது. ஸர்வபூதஸமனாகக் கூறப்படுகிற பகவானுக்கு இது பொருந்துமோ வென்று சங்கை தோன்றும். உண்மையில் எம்பெருமான் ஸர்வபூதஸமனென்பதில் ஸந்தேஹமில்லை; தேவஜாதியில் ப்ரீதியும் அஸுரராக்ஷஸ ஜாதியில் த்வேஷமும் அவனுக்கில்லை. அப்படியிருக்குமாகில் அஸுரஜாதியிற் பிறந்தவனான ப்ரஹ்லாதாழ்வானிடத்தும், ராக்ஷஸஜாதியிற் பிறந்தவனான விபீஷணாழ்வானிடத்தும் அருள் செய்யப் பொருத்தமில்லை

யாகும். விளக்கில் விட்டில்கள் தாமாகவே வந்து விழுந்து முடிந்து போவதுபோல அஸுர ராக்ஷஸர்களும் தாங்களே வந்து விரோதங்களைச்செய்து, கழுத்திலே கல்லைக்கட்டிக்கொண்டு குளத்திலே விழுந்து சாவாரைப்போல மடிந்து போனால் அது எம்பெருமானுடைய குற்ற மன்றே. ராமாவதாரத்தில் இராவணன் *சூர்ப்பநகைவாய்த் திருவினைப்பிரித்த கொடுமையிற் கடுவிசையரக்கன்* என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடி கனத்த அபராதியாயிருக்கச் செய்தேயும், பெருமாள் அவனையும் அங்கீகரிக்கத் திருவுள்ளங் கொண்டிருந்தமையை விபீஷணோவா ஸுக்ரீவ! யதி வா ராவணஸ் ஸ்வயம்* என்பதனால் நன்கு அறியாநின்றோம். இராவணனையும் வலியடக்கி வெற்றிப்புகழ் பெற்றிருந்த வாலியையே ஓர் அம்பினால் முடித்தருளின பெருமாளுக்கு இராவணனை முடித்தல் அரிதன்றே. *பொல்லாவரக்கனைக் கிள்ளிக் களைந்தானை* என்று ஆண்டாளருளிச் செய்தபடி அவலீலையாகக் கிள்ளிக்களைய வேண்டியவனன்றோ இராவணன். அன்னவனை விரைவில் கொன்றிடாதே தாமதஞ்செய்ததும், *கச்சாநுஜாநாமி* என்று சொல்லிப் போர்க்களத்தில் நின்றும் போகவிட்டதும் அவனுடைய ஆநுகூல்யத்தை யெதிர்பார்த்தேயன்றோ. ஆகவே "அமரர்க்கிடர்கெட அசுரர்கட்கிடர் செய்" என்றவிதில் எம்பெருமானுக்கு குணஹாநியொன்றும் வாராதென்க.

கடுவினை நஞ்சே! என்னுடையமுதே !=ஒரு வஸ்துதானே சிலர்க்கு விஷமாயும் சிலர்க்கு அமுதமாயுமிராநின்றதாயிற்று. *வன்சரண் சுரர்க்காய் அசுரர்க்கு வெங்கூற்றமுமாய்* என்று கீழுமருளிச் செய்தார். *வஞ்சஞ்செய் கஞ்சனுக்கு நஞ்சானானை* என்றார் திருமங்கை யாழ்வாரும். "என்னுடையமுதே "என்று சொல்லப்பட்ட இவ்வமுதம் எங்கிருக்கிறதென்ன, கலிவயல் திருப்புளிங்குடியாய்! என்கிறார். இங்கே ஈடு :—"இவ்வம்ருதத்துக்குக் கடல் கடைதல் ஸ்வர்க்கத்திலே போதல் செய்யவேண்டா ; திருப்புளிங்குடியிலே ஸந்நிஹிதமாயிற்று இவ்வம்ருதம்."

திருப்புளிங்குடியார் யென்றழைத்து அவனுக்கு ஸமாசாரம் சொல்லுகிறார் பின்னடிகளால். வடிவழகுக்கு ஒப்பில்லாத பெரிய பிராட்டியாரும் ஸ்ரீபூமிப் பிராட்டியாரும் தங்களுடைய பரம ஸுகுமாரமான திருக்கைகளாலே பிடிக்கும்போதும் கூசிப்பிடிக்க வேண்டும்படி அத்யந்த ஸுகுமாரமான திருவடிகளைப் பாவியேனும் பிடிக்குமாறு என்னை அங்கே யழைத்துக் கொள்ளுதல், அன்றிக்கே இங்கே வந்தருளுதல் ஒரு நாள் செய்யவேணுமென்றாராயிற்று. கொடுவினையேனும் என்றது—ப்ராப்தியுடையேனாயும் அதில் போக்யதையை யறிந்தவனாயுமிருந்துவைத்து நெடுங்காலம் இழந்திருக்கும்படி கொடிய பாபத்தை யுடையேனானாலும் என்றபடி.

கூவுதல் வருதல் செய்யாயே=இரண்டு காரியங்களை விகற்பித்துச் சொல்லுமிடங்களில் பெரிய காரியத்தை முன்னே சொல்லுவதும், சிறிய காரியத்தைப் பின்னே சொல்லுவதும் இயல்பு. எம்பெருமான் தானே வருவதென்பது பெரிய காரியமாயும், ஆழ்வாரைக் கூவிக்கொள்வதென்பது சிறிய காரியமாயுமிருப்பதால் "வருதல் கூவுதல் செய்யாயே" என்று சொல்ல ப்ராப்தமாயிருக்க, கூவுதல் வருதல் செய்யாயே யென்று சொல்லியிருப்பதேன்? என்று சங்கை தோன்றும்; இதற்கு நம்பிள்ளை யருளிச் செய்வது காணீர்—"முற்பட 'வருதல்' என்னிலசாயிற்று அஸ்ஸமுதாயத்தைக் குலைக்க வொண்ணாதென்னுமத்தாலே" என்று. அதாவது, *வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் ஸந்நிவேசத்தைத் தாமும் கண்டுகளிக்க ஆழ்வார் ஆசைப்பட்டவராகையாலே அந்தச் சேர்த்தி யழகைக் குலைக்க மனமில்லாமை பற்றி, வருதலை முன்னே சொல்லிற்றிலரென்கை. ... ... (10)

கூவுதல் வருதல் செய்திடாயென்று குரைகடல்கடைந்தவன்தன்னை*
மேவிநன்கமர்ந்த வியன்புனற்பொருநல் வழுதிநாடன்சடகோபன்*
நாவியல்பாடலாயிரத்துள்ளும் இவையுமோர்பத்தும் வல்லார்கள்*
ஓவுதலின்றியுலகம் மூன்றளந்தான் அடியிணையுள்ளத்தோர்வாரே. (11)

| | |
|---|---|
| குரை கடல் கடைந்தவன் தன்னை | குமுறுகின்ற கடலைக் கடைந்தவனான எம்பெருமானைக் குறித்து |
| கூவுதல் வருதல் செய்திடாய் என்று | அழைத்துக்கொள்வதோ வந்தருள்வதோ இரண்டத்தொன்று செய்ய வேணுமென்று அபேக்ஷித்து |
| மேவி நன்கு அமர்ந்த | (அப்படியே பெறுகையாலே) நன்கு தரிக்கப்பெற்ற |
| வியன் புனல் பொருநல் வழுதி நாடன் சடகோபன் | பரிபூர்ணமான தீர்த்தத்தையுடைய தாமிர பர்ணி சூழ்ந்த வழுதி நாட்டுக்குத் தலைவரான ஆழ்வாருடைய |
| நா இயல் பாடல் | திருநாவின் தொழிலான பாடலாகிய |
| ஆயிரத்துள்ளும் | ஆயிரம் பாசுரங்களினுள்ளும் |
| இவையும் பத்தும் வல்லார்கள் | இப்பதிகத்தைக் கற்க வல்லவர்கள் |
| மூன்று உலகம் அளந்தான் அடி இணை | திரிவிக்கிரமனுடைய உபய பாதங்களை |
| ஓவுதல் இன்றி | அநவரதமும் |
| உள்ளத்து ஓர்வார் | நெஞ்சிலே அநுஸந்திக்கப் பெறுவர்கள். |

***—இத்திருவாய்மொழி கற்கைக்குப்பலன் எம்பெருமானுடைய திருவடிகளை நிரந்தரம் சிந்திக்கப் பெறுதலேயாம் என்று தலைக்கட்டியருளுகிறார். குரை கடல் கடைந்தவன் தன்னைக் குறித்து 'கூவுதல் வருதல் செய்திடாய்' என்று பிரார்த்தித்த ஆழ்வாரருளிச் செய்த ஆயிரத்தினுள்ளும் இப்பதிகம் வல்லார் அடியவர்க்கெளியனான எம்பெருமானுடைய திருவடிகளை நிரந்தரமாக நெஞ்சினுள்ளே யநுபவிக்கப்பெறுவர் என்றாராயிற்று.

திருவடி வருடவேணுமென்கிற அபிநிவேசமில்லாமலே ஸ்வப்ரயோஜனத்திலேயே ஊன்றியிருக்குமவர்களுக்கும் உடம்பு நோவக் கடல் கடைந்து அமுதங்கொடுத்துக் காரியஞ் செய்யுமெம்பெருமான் நம் அபேக்ஷிதம் செய்தருளத்தட்டில்லை யென்பது தோன்றுகைக்காகக் குரை கடல் கடைந்தவன் தன்னை என்றதிங்கு.

"ஓவுதலின்றி" என்பதை 'ஓர்வார்' என்கிற வினை முற்றிலும் அந்வயிக்கலாம்; உலகம் மூன்றளந்தானென்பதிலும் அந்வயிக்கலாம். குணாகுண நிரூபணம் பண்ணாதே அஸங்கோசமாக உலகங்களை யளந்தவனுடைய என்றபடி. .... ... (11)

## திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையுரையில்

ஒன்பதாம்பத்து இரண்டாந் திருவாய்மொழி

முற்றிற்று.

நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# மூன்றாந் திருவாய்மொழி—ஓராயிரமாய்

உரையவதாரிகை :— கீழ்த்திருவாய்மொழியில் *தொண்டரோர்க்கருளிச் சோதி வாய்திறந்து உன் தாமரைக் கண்களால் நோக்காய்*என்றும்*இடங்கொள் மூலவுருந் தொழ இருந்தருளாய்* என்றும் ; *மெல்லடியைக் கொடுவினையேனும் பிடிக்க நீ யொருநாள் கூவுதல் வருதல் செய்யாயே* என்றும் பலவாறு பிரார்த்தித்தார். இப்படிப் பிரார்த்திக்கக் கேட்ட எம்பெருமான் ஆழ்வாரை நோக்கி 'ஆழ்வீர்! நமக்கு நாராயணனென்று திருநாமமிருப்பது அறியீரோ? நாராயணனென்பதற்கு—நாரங்களுக்கு அயனமாயிருப்பவனென்கிற பொருள் தவிர, நாரங்களை அயனமாகவுடையவனென்கிற பொருளுமுண்டென்பதை அறிவீரன்றோ, அப்பொருளில் ஸகல சேதநா சேதநங்களும் சரீரமாய் நான் சரீரியாயிருக்கையாகிற அம்சம் தேறுகின்றதென்பதையும் அறிவீரே; சரீரத்திற்கு ஆகும்பேறு சரீரிக்கேயாதலால் சரீரபூதரான உமக்கென்று ஒரு பேறு உண்டோ? சரீரியான என்னுடையதேயன்றோ பேறு. என் பேற்றுக்கு நீர் பிரார்த்திப்பது பொருந்துமோ? எல்லாம் நானே செய்து போரக் கடவேன்; உமக்கும் நமக்குமுண்டான ருடல் துடக்கையறிந்துவைத்து நீர் இப்படிப் ப்ரார்த்திப்பதும் கிலேசிப்பதும் தகுதியன்று' என்று ஸமாதானம்பண்ண, அது கேட்டு ஆழ்வார் ஒருவாறு தாம் ஸமாஹிதரானபடியை வெளியிட்டுக்கொண்டும் 'இது என்ன சீலகுணம்!' என்று ஈடுபட்டுக்கொண்டும் அருளிச் செய்வதாம் இத்திருவாய்மொழி.

இவர் பிரார்த்திததபடியே காரியம் செய்து நிறைவேற்றாமல் கேவலம் வாசா ஒரு வார்த்தை சொல்லி விட்டால் அதனால் ஆழ்வார் ஸமாதானமடைந்திடுவரோவென்று சங்கிக்க வேண்டா; *பெய்யுமாமுகில்போல்வண்ணா! உன்றன் பேச்சுஞ் செய்கையும் எங்களை மையலேற்றி மயக்க உன் முகம் மாயமந்திரம்தான் கொலோ!* என்னும்படியாயன்றோ வுள்ளது. இராமபிரான் 'நான் வனவாஸஞ் சென்று வருகிறேன்' என்று திருத்தாயார் பக்கலிலே விண்ணப்பஞ் செய்ய, அவளும் மிகவருந்தி 'உன்னைப் பிரிந்து நான் தனியிருக்கமாட்டேன்; நானும் கூடவருவேனத்தனை; என்னையுங் கூட்டிக்கொண்டு போகவேணும்' என்று சொல்லிப் பின்தொடர, இராமன் புரிந்து பார்த்து 'ஆய்ச்சீ! நீர் என்னைப்பின்தொடருகிறவிது தருமமோ? தருமமன்றே' என்று முகத்தை நோக்கியொரு வார்த்தை பணிக்க, மீட்கைக்காகப் போனவவள் மங்களாசாஸனம் பண்ணி மீண்டாளென்று காண்கிறோமன்றோ. இதுவன்றோ அவனுடைய பார்வைகளும் பேச்சுக்களும் செய்யும்படி.

ஆக, 'ஆழ்வீர்! நான் நாராயணனன்றோ, நீர் கவலைப்படலாமோ?' என்று அவன் சொல்ல அதையநுஸந்தித்து அந்த நாராயண சப்தத்தினுடைய அர்த்தத்தை ஆராயப் புகுந்தவாறே, அவனை யொழிந்த ஸகல வஸ்துக்களினுடையவும் பேறும் இழவும் அவனுடையதாயே யிருக்கிறபடியையறிந்து, பிரார்த்திப்பதற்குத் தமக்கு அதிகாரமில்லாதபடியையுமறிந்து ஒருவாறு ஸமாஹிதராய் நாராயண சப்தார்த்தத்துக்கு எல்லையான அவனுடைய சீலகுணத்தை யனுஸந்தித்துத் தலைக்கட்டுகிறார் இத்திருவாய்மொழியால்.

இப்பதிகத்திற்கு மற்றொருபடியாகவும் ஈட்டில் அவதாரிகை அருளிச் செய்யப்படுகிறது; அது நடுவில் திருவீதிப்பிள்ளையின் நிர்வாஹமாகவுங்காண்கிறது. அதன் ஸாரமாவது, கீழ் எட்டாம்பத்தில் *கண்கள் சிவந்து* என்கிற பதிகம் தொடங்கி முறையே திருமந்திரார்த்தம் அருளிச் செய்யப்பட்டு வந்து, கீழ்*பண்டை நாளாலே*என்கிற பதிகத்தின்

கைங்கர்ய ப்ரார்த்தனை பண்ணுகிற முகத்தால் வ்யக்த சதுர்த்தியளவாக அர்த்தம் அநுஸந்திக்கப்பட்டுத் தலைக்கட்டிற்று. இப்படி அர்த்தாநுஸந்தானம் பண்ணினவர் அந்த அர்த்தத்தைக் கொண்ட மந்த்ரம் திருவஷ்டாக்ஷர மஹா மந்த்ரமே யென்று வெளியிட வேண்டி இப்பதிகமருளிச் செய்கிறாரென்பதாம். இப்பதிகத்தின் முதற்பாட்டில் "நாராயணன் நங்கள் பிரானவனே" என்றதில் முழு நோக்காக இந்த நிர்வாஹம் தோன்றியதென்க.

பகவந் மந்த்ரங்களை வ்யாபகங்களென்றும் அவ்யாபகங்களென்றும் இருவகுப்பாக்கி, அவ்யாபக மந்த்ரங்களிற் காட்டிலும் வ்யாபக மந்த்ரங்கள் மூன்று [—ஷடக்ஷரி, அஷ்டாக்ஷரி, த்வாதசாக்ஷரி] சிறந்தவை யென்று கொண்டு, இவை மூன்றிலும் பெரிய திருமந்த்ரமாகிய அஷ்டாக்ஷரியே மிகச் சிறந்ததென்று நம் ஆசாரியர்களின் ஸித்தாந்த மாகையாலே அது இங்கே அநுஸந்தேயம். ப்ரணவமும் நமஸ்ஸும் சதுர்த்தியும் இதர மந்த்ரங்களிலு மிருக்கையாலே திருவஷ்டாக்ஷரத்தில் அநுஸந்திக்கப்படும் பொருள்கள் பெரும்பாலும் இதரமந்த்ரங்களிலும் காணலாமன்றோ. ஆகவே அர்த்தத்தை வெளியிடுவதனால் மாத்திரம் பயனில்லையே; சப்தத்தையும் வெளியிட வேண்டுவது ப்ராப்தமாதலால் அது இங்கே வெளியிடப்படுகிறதென்பது இரண்டாமவதாரிகையின் ஸாராம்சம். ... ... *

ஓராயிரமாய் உலகேழளிக்கும்*
பேராயிரங்கொண்டதோர் பீடுடையன்*
காராயின காளநன்மேனியினன்*
நாராயணன் நங்கள் பிரானவனே. (1)

| | | | |
|---|---|---|---|
| ஓர் ஆயிரம் ஆய் | ஒரு திருநாமமே ஆயிரம் திருநாமமாய்க்கொண்டு | காளம் கார் ஆயின | காளமேகம்போலே ச்யாமளமான |
| உலகு ஏழ் அளிக்கும் | ஏழுலகங்களையும் ரக்ஷிக்கும்படியான | நல்மேனியினன் | அழகிய திருமேனியையுடையனுமான |
| ஆயிரம் பேர் கொண்டது ஓர் பீடு உடையன் | ஆயிரந் திருநாமங்களையுடையனாயிருக்கையாகிற விலக்ஷணமான பெருமையையுடையனும் | நாராயணன் அவனே | நாராயணனே |
| | | நங்கள் பிரான் | நமக்கு உபகாரகன். |

* * *—அவன் நாராயணனாகையாலே நம் அபேக்ஷிதம் செய்து தலைக்கட்டுகை நிஸ்ஸந்தேஹமென்று தம்முள் தாமே அநுஸந்தித்துக்கொள்ளுகிறார். 'ஒரு திரு நாமமே ஆயிரந்திருநாமங்களின் காரியஞ் செய்ய வல்லது' என்னும்படியான பெருமை பொருந்திய திருநாமங்கள் ஆயிரமுண்டு எம்பெருமானுக்கு. இங்கு ஆயிரமென்று, குறிப்பிட்டவொரு லக்கத்தைச் சொல்லுமதன்று; எண்ணிறந்தவை என்பதற்குப் பர்யாயமத்தனை. வடமொழியில் *தேவோ நாமஸஹஸ்ரவாந்* இத்யாதிகளிலுள்ள ஸஹஸ்ர சப்தமும் இப்பொருளதே. வீரர்கள் பலரைக் காட்டி 'இவர்களுள் ஒவ்வொருவரும் ஆயிரக் கணக்கான சூரர்களை வெல்லவல்லவர்' என்னுமாபோலே சொல்லுகிறதிங்கு. ஒரு திருநாமம் செய்யக்கூடிய காரியத்தை மற்றொரு திருநாமம் செய்யக்கூடுமோவென்று சங்கிக்கவேண்டா; திருநாமத்திற்குப் பொருளான எம்பெருமான் செய்யுமத்தையே திருநாமம் செய்வதாகச் சொல்லுகிறபடியாலும், அப்பெருமான் தான் ஸகல பலப்ரதாந ஸமர்த்தனாகையாலும் அஸம்பாவிதமொன்றுமில்லை யென்க.

பேராயிரங்கொண்டதோர்பீடுடையன் = இப்படிப்பட்ட அதிசயம் வாய்ந்த பலபல திருநாமங்களை யுடையனாயிருக்கையாகிற பெருமை பொருந்தியவன் என்றபடி. இவ்விடத்து ஈட்டில் "கோயிலாத்தான் புத்ரவியோகத்திலே பட்டர் ஸ்ரீபாதத்திலே வந்து தன் சோகமெல்லாம் தோற்ற விழுந்துகிடக்க, அவரருளிச்செய்த வார்த்தையை நினைப்

பது" என்றுள்ளது. அதாவது, கோயிலாத்தானென்பவர் பட்டரையே தெய்வமாக நினைத்திருந்தவர்; அவர் தமக்குப் பிறந்த பிள்ளைக்கு பட்டரென்று பெயரிட்டு வளர்த்து வந்தார். அந்தப்பிள்ளை தெய்வாதீனமாக ஆசாரியன் திருவடிசார, தந்தை பட்டர் பக்கலிலே வந்து கதறியழுதவளவிலே "நீ நம்முடைய திருநாமமிடப்பெற்ற பிள்ளை போனுன் என்றன்றோ துக்கப்படுவது; அந்தத் திருநாமமுடைய நாமிருக்க துக்கப்படுவானேன்?" என்று பட்டரருளிச் செய்தாராம். திருநாமமுடைய எம்பெருமான் நிலை நின்றிருந்து நம்மைக் காத்தருள்பவன் என்பதை வற்புறுத்தும் இந்த ஸம்வாதம்.

கரைகட்டாக் காவேரிபோலே பரந்திருக்கிற திருநாமங்களை ஒருமுகஞ்செய்து அநுபவிக்கப் பாங்காக திவ்ய மங்கள விக்ரஹம் அமைந்ததே யென்கிற ஆனந்தம் தோற்ற அருளிச்செய்கிருர் காராயின காளநன்மேனியினன் என்று. காளம் என்று இடையிலுள்ளதைக் காரோடே கூட்டியந்வயிப்பது. காளமேகமே யென்னலாம் படியான நன்மேனியையுடையவன் என்க. இவன்தான் யாவனென்ன, நாராயணன் நங்கள் பிரானவனே யென்று திருநாமத்தை முக்த கண்டமாகச் சொல்லி முடிக்கிருர். இப்பதிகத்திற்கு இட்ட அவதாரிகையில் இரண்டு நிர்வாஹம் காட்டப்பட்டுள்ளது. முதல் நிர்வாஹத்திற்கு, இங்கு நாராயணனென்றது அர்த்தத்தில் நோக்குடையதாகும்; இரண்டாம் நிர்வாஹத்திற்கு சப்தத்தில் நோக்காகும். ... ... .... (1)

அவனே அகல்ஞாலம் படைத்திடந்தான்*
அவனே அஃதுண்டுமிழ்ந்தானளந்தான்*
அவனே யவனும் அவனுமவனும்*
அவனே மற்றெல்லாமுமறிந்தனமே. (2)

| | | | |
|---|---|---|---|
| அகல் ஞாலம் படைத்து இடந்தான் அவனே | விபுலமான ஜகத்தைப் படைத்ததும் (வராஹ மூர்த்தியாகி) இடந்ததும் அப்பெருமானே; | அவனும் அவனும் அவனும் அவனே | பிரமனும் சிவனும் இந்திரனும் அவனே; |
| அஃது உண்டு உமிழ்ந்தான் அளந்தான் அவனே | அந்த ஜகத்தை உண்டதும் உமிழ்ந்ததும் அளந்ததும் அவனே; | மற்று எல்லாமும் அவனே | மற்றுள்ள ஸகல சேதநாசேதநங்களும் அவனே; (என்னுமிவ்விஷயத்தை) |
| | | அறிந்தனம் | (அவன் தந்த ஞானத்தாலே) அறிந்து கொண்டோம். |

***—கீழ்ப்பாட்டில் நாராயண சப்தம் ப்ரஸ்துதமாகையாலே அதன் பொருளைப் பன்னி யுரைக்கிருரிதில். அவனே அகல்ஞாலம் படைத்திடந்தான்=மிக விசாலமான பூமண்டலத்தை யுண்டாக்கினுனுமவனே; அதனை ஹிரண்யாக்ஷனென்னுமசுரன் பாயாகச் சுருட்டிக் கொண்டுபோக மஹாவராஹமாகி இடந்தெடுத்தானும் அவனே. இத்தால் காரணத்வமும் ரக்ஷகத்வமும் சொல்லப்பட்டன. 'அவனே' என்கிற ஏகாரத்தினுல் ஸஹகாரியொன்றையும் அபேக்ஷியாத பெருமை தெரிவிக்கப்பட்டது.

அவனே அஃது உண்டுமிழ்ந்தான் அளந்தான்=பிரளயங் கொள்ளாதபடி பூமியையெடுத்து வயிற்றிலே வைத்திருந்து, பிறகு வெளிநாடுகாண உமிழ்ந்து, மற்றொருகால் மஹாபலியாலே அபஹரிக்கப்பட்டதாக எல்லை நடந்து மீட்டுக் கொண்டானும் அவனே. இனி, பின்னடிகளின் கருத்து — பிரமன் சிவன் இந்திரன் முதலானுருடைய ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகளும் அவனிட்ட வழக்கென்கிறது. பிரமன் சிவன் இந்திரன் முதலானுருடைய பெயர்கள் ஒன்றும் பாசுரததில் இல்லையே யென்று சங்கிக்கவேண்டா; அவனும் அவனும் அவனும் என்று சுட்டுப்பெயர்களாகவே இங்கெடுத்திருப்பது உபநிஷச்சாயை; நாராயணுநுவாகத்தில் * स ब्रह्मा स शिवस्सेन्द्रस्सोऽक्षरः परमस्स्वराट् — ஸ ப்ரஹ்மா ஸ சிவஸ் ஸேந்த்ரஸ் ஸோக்ஷர: பரமஸ்ஸ்வராட் * என்று ஸ:, ஸ:, ஸ: என்று நிர்தேசித்திருப்பவற்றையே உட்கொண்டு "அவனுமவனுமவனும்" என்றருளிச் செய்தபடி.

மற்றேல்லாமும் அவனே அறிந்தனமே = பிரமன் சிவனிந்திரனென்று பிரித்துச் சொல்ல வேணுமோ? ப்ராதாநர் அப்ராதாநர் என்கிற வாசியின்றிக்கே ஸகல சேதநாசேதநங்களும் அவனிட்ட வழக்கே; என்னுமிவ்விஷயத்தை எம்பெருமானே உணர்த்த உணர்ந்தேனென்றபடி. *மயர்வற மதிநலமருளப் பெற்றவரிறே இவர்தாம். (2)

அறிந்தனவேத வரும்பொருள்நூல்கள்*
அறிந்தனகொள்க அரும்பொருளாதல்*
அறிந்தனரெல்லாம் அரியைவணங்கி*
அறிந்தனர் நோய்களறுக்கும்மருந்தே. (3)

அறிந்தன வேதம் { தத்துவத்தை யறிந்தவையாயிருக்கிற வேதங்களினுடைய
அரு பொருள் நூல்கள் { அரிய பொருள்களை யறுதியிட வல்ல இதிஹாஸ புராணாதி நூல்களானவை
அரு பொருள் ஆதல் அறிந்தன கொள்க { "எம்பெருமான் அறிவதற்கரிய பொருள்" என்றிவ்வளவே அறிந்ததாகக்கொள்ளத்தகும்;
அறிந்தனர் எல்லாம் } ஞானிகளான யாவரும்
அரியைவணங்கி ஸர்வேச்வரனை ஆச்ரயித்து
நோய்கள் அறுக்கும் மருந்து { தங்களுடைய ஸம்ஸார வியாதிகளைப் போக்க வல்ல மருந்தாக
அறிந்தனர் { அவனைத் தெரிந்து கொண்டார்கள். (இவ்வளவேயல்லது அவனுடைய போக்யதையிலே யீடுபட்டிலர் என்றவாறு.)

***—வேதங்களாலும் வேத வித்துக்களாலும் அறியப்போகாத பெருமானை நான் அவனது நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே உள்ளபடி அறியப்பெற்றேனென்கிறார். "அறிந்தன வேத வரும்பொருள் நூல்கள்" என்கிற முதலடிக்கு இரண்டுபடியாகப் பொருள் கூறுவர்; 'அரும்பொருள் அறிந்தன வேத நூல்கள்' என்று அந்வயம் கொண்டால்—ப்ரத்யக்ஷத்தாலும் அநுமானத்தாலும் அறியவொண்ணாத அர்த்தங்களை அறிந்தவையாயிருக்கின்ற வேதங்களாகிற சாஸ்த்ரங்கள் என்று பொருள்படும். அன்றியே, பாசுரமுள்ளபடியே அந்வயித்தால்—அறிந்தவையாயிருக்கிற வேதங்களில் அறிந்து கொள்ள முடியாத அர்த்தங்களை நிஷ்கர்ஷித்துத் தரவல்ல ப்ரஹ்மஸூத்ரம் இதிஹாஸ புராணம் முதலிய நூல்கள் என்று பொருள்படும். ஆக இப்படிப்பட்ட சாஸ்த்ரங்களெல்லாம், அரும்பொருளாதல் அறிந்தன கொள்க—'எம்பெருமான் அறிய முடியாத பொருள்' என்றிவ்வளவே அறிந்து கொண்டதாக நாம் கொள்ளவேணும் என்றபடி. "वेदाहमेतं पुरुषं महान्तम् —வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்" என்று எம்பெருமானை அறிந்துவிட்டதாக அவை சொல்லிக்கொண்டாலும் உண்மையில் என்ன அறிந்தன? அறிய முடியாதவனவன் என்றே யறிந்தன.

வேதங்கள் கிடக்கட்டும்; ப்ரஹ்ம வித்துக்களாகக் குலாவப்படுகின்ற வ்யாஸ பராசர வால்மீகி ப்ரப்ருதிகளான மஹர்ஷிகள்தாமும் அறிந்த விதம் கேண்மின்; அரியை வணங்கி நோய்களறுக்கும் மருந்தே அறிந்தனர் = எம்பெருமானுடைய திருநாமங்களில் ஹரி யென்கிறவொரு திருநாமத்தையே பற்றிக்கொண்டு "हरणादेव दुःखानां हरिरित्यभिधीयते – ஹரணாதேவ து:க்காநாம் ஹரிரித்யபிதீயதே" என்கிறபடியே ஸாம்ஸாரிகதுக்கங்களைப் போக்குமவன் என்றிவ்வளவு தெரிந்து கொண்டார்களே யல்லது அவனுடைய பரம போக்யதையை யாவது, அவனே நிரபேக்ஷ உபாய பூதன் என்பதையாவது தெரிந்து கொண்டார்களல்லர்; 'நோய்களறுக்கும் மருந்து' என்றிவ்வளவே தெரிந்து கொண்டார்கள்.

பாசுரத்தில் இவ்வளவே யிருந்தாலும், கீழ்ப்பாட்டின் முடிவில் அழிந்தனமே என்றுள்ளதை இங்கும் ஆகர்ஷித்துக் கொள்ளவேணும்; ஆறுயிரப்படி முதலான ஸகல வியாக்கியானங்களுக்கும் இது உடன்பாடு. ... ... ... (3)

மருந்தே நங்கள்போகமகிழ்ச்சிக்கென்று*
பெருந்தேவர்குழாங்கள் பிதற்றும்பிரான்*
கருந்தேவனெம்மான் கண்ணன் விண்ணுலகம்*
தருந்தேவனைச் சோரேல்கண்டாய்மனமே. (4)

| | | | |
|---|---|---|---|
| நங்கள் போகம் மகிழ்ச்சிக்கு மருந்தே என்று | "உன்னுடைய அநுபவத்தாலே எங்களுக்கு வரும் ஆனந்தத்தை ஸாத்மிப்பிக்கும் மருந்தானவனே" என்று | கரு தேவன் | கரிய திருமேனியை யுடையனாய் |
| பெருந் தேவர் குழாங்கள் | நித்யஸூரிகணங்கள் | எம்மான் கண்ணன் | எமக்கு ஸ்வாமியான க்ருஷ்ணனாய் |
| பிதற்றும்பிரான் | வாய்வெருவும்படியான ஸ்வாமியாய், | விண் உலகம் தரும்தேவனை | பரமபத போகத்தைத் தருவானான பெருமானை |
| | | மனமே சோரேல்கண்டாய் | நெஞ்சே! நழுவவிடாதே கொள். |

***—நித்ய ஸூரிகளுக்குப் பரம போக்யனாயிருந்துவைத்து அங்கு நின்றும் போந்து க்ருஷ்ணனாயவதரித்து நம்மையும் நித்யஸூரிகள் நடுவே கொண்டு வைக்குமவனாயிருக்கிற எம்பெருமானை ஒருவாறு கிட்டப்பெற்றோம், நெஞ்சே! அவனை விடாதேகொள் என்று தம் திருவுள்ளத்தை நோக்கி யருளிச்செய்கிற பாசுரமிது.

நங்கள் போகமகிழ்ச்சிக்கு மருந்தேயென்று பெருந்தேவர்குழாங்கள் பிதற்றும்பிரான் என்கிறவிதற்கு—பகவத்விஷய ப்ரஸ்தாநத்தில் ஒருவகையான அர்த்தமும் ரஹஸ்ய ப்ரஸ்தாநத்தில் மற்றொருவகையான அர்த்தமும் ஸம்ப்ரதாயஸித்தம். "உன்னழகாலே எங்கள் போகத்துக்கு வர்த்த (ர்) கனானவனேயென்று பெருந்தேவர் குழாங்கள் பிதற்றும் பிரான்" என்பது ஆறுயிரப்படியருளிச்செயல். "உன்னுடைய அநுபவத்தால் எங்களுக்கு வருமானந்தத்துக்கு வர்த்த (ர்) கனானவனே!" என்பது ஈடுமுதலிய வியாக்கியானங்களிலருளிச் செயல். இனி, முமுக்ஷுப்படியில் பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்யுமது கேண்மின்; அதில் த்வயார்த்தத்தை விவரித்தருளுமிடத்து (த்வயப்ரகரணத்தின் முடிவில்) நமஸ்ஸுக்குப் பொருளருளிச்செய்கையில் (180) "நம: —கைங்கர்யத்தில் களையறுக்கிறது; களையாவது தனக்கென்னப்பண்ணுமது" என்றருளிச்செய்தார். அதாவது, 'பகவந்முகவிகாஸத்திற்கு ஹேதுவாகையாலே இது நமக்கு ஆதரணீயம்' என்கிற ப்ரதிபத்தியில்லாமல் தன்னுடைய ஸந்தோஷத்தையே ப்ரயோஜனமாக நினைத்துச்செய்வது புருஷார்த்த விரோதியென்றும், அந்த விரோதியைக் கழிக்கிறது நமஸ்ஸென்றும் ரஹஸ்யார்த்தமுள்ளது. கைங்கர்யம் வாய்க்கவேணுமென்று ப்ரார்த்திப்பது போலவே கைங்கர்யத்தில் இந்தவிரோதி கழியவேணுமென்றும் நித்யப்ரார்த்தனை நடக்கவேணுமென்று அருளிச்செய்து, இந்த ப்ரார்த்தனை இந்நிலத்தில் மாத்திரமன்று, திருநாட்டிலுமுண்டு என்றுமருளிச்செய்து, அதற்கு ப்ரமாணமாக "மருந்தேநங்கள் போகமகிழ்ச்சிக்கு" என்னுமிப்பாசுரத்தை யெடுத்துக்காட்டியுள்ளார் பிள்ளைலோகாசார்யர். (187) "மருந்தேநங்கள் போகமகிழ்ச்சிக்கு என்னாநின்றதிறே" என்கிற விதுவே த்வயப்ரகரணத்தின் முடிவுசூர்ணை. அவ்விடத்து மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் வருமாறு:—"கந்தல்கழிந்த அந்நிலத்திலும் ஸ்வபோக்த்ருத்வோதய முண்டாமோவென்ன அருளிச்செய்கிறார் (மருந்தே நங்கள்போகமகிழ்ச்சிக்கென்னாநின்றதிறே) என்று. அதாவது, உன்னுடைய அநுபவத்தாலே எங்களுக்கு வரும் ஆனந்தத்துக்கு ஸ்வபோக்த்ருத்வபுத்தியை விளைவித்து ஸ்வரூபத்தையழியாதபடி ஸாத்மிப்பிக்கும் பேஷஜமானவனேயென்று நித்யஸூரிகள் பேசும்பாசுரமாகச் சொல்லாநின்றதிறேயென்கை" என்று.

இப்படி பிள்ளைலோகாசார்யரும் மணவாளமாமுனிகளுமருளிச்செய்த ரீதியில் பாசுரத்தின் பொருள்காணுமளவில், நங்கள் போகமகிழ்ச்சிக்கு மருந்தே!—உன்னையநுபவித்து அத்தாலே எங்களுக்கு உண்டாகுமானந்தத்தை ஸ்வரூபவிருத்தமாக்காமல் ஸ்வரூபாநுரூபமாகச் செய்யவல்ல மருந்தாயிருக்குமவனே! என்பதாகப்பொருள் காணவேணும். ஸ்வரூபவிருத்தமான ஆனந்தமாவது என்ன? ஸ்வரூபாநுரூபமான ஆனந்தமாவது என்ன? என்னில்; 'நானநுபவிக்கிறேன், என்னுடைய அநுபவமிது' என்று கொண்டு உண்டாகிற ஆனந்தம் ஸ்வரூப விருத்தமானது. 'அவன் வஸ்துவை அவன் அநுபவிக்கிறான், அவன் ஆனந்தப்படுகிறான்' என்றுகொண்டு அவனது ஆனந்தத்தைக்கண்டு உண்டாகிற ஆனந்தம் ஸ்வரூபாநுரூபமானது. ஸாரமாகக்கேண்மின்; சேதநனுகையாலே ஆனந்தப்படாமலிருக்க முடியாது; அவர்ஜநீயமாய் ஆனந்தம்விளையும்; தன்னையநுபவித்து அவனுக்குண்டாகிற முகமலர்த்தியைக்கண்டு ஆனந்திப்பதேயுள்ளது. வேறு ஸ்வதந்த்ரமான ஆனந்தம் உண்டாகக்கூடாதென்றும் அது ஸ்வரூபவிருத்தமென்றும் அநுஸந்தானம் செல்லவேணும். இவ்வநுஸந்தானம் இங்கிருக்கிற காலத்தோடு ப்ராப்யபூமியில் சென்று சேர்ந்தகாலத்தோடு வாசியற எப்போதும் நடந்துசெல்லும் என்பதே. இதற்கு ப்ரமாணமாகவுள்ள: பாசுரம் "மருந்தே நங்கள் போகமகிழ்ச்சிக்கு" என்கிறவிது. ஆறுயிரப்படி முதலிய வியாக்கியானங்களில் இவ்வர்த்த விசேஷத்தை வெளியிட்டருளாதது குஹ்யதமமென்பது பற்றியேயென்க.

உலகில் "பிணிக்குமருந்து, பசிக்குமருந்து" என்கிற பிரயோகங்கள் காண்கின்றன. பிணிக்குமருந்தென்றபோது, பிணியைத்தீர்க்கும் மருந்து என்று பொருள் படுகிறது. பசிக்கு மருந்தென்றபோது பசியையுண்டாக்கும் மருந்தென்று பொருள் படுகிறது. அப்படியே, நங்கள் போகமகிழ்ச்சிக்கு மருந்தென்ற இவ்விடத்திலும் இரண்டு பொருளும் அமையத்தட்டில்லை; போகத்தில் எங்களுக்கென்று உண்டாகும் மகிழ்ச்சியை யடக்குபவனே! என்கிறபொருள் ரஹஸ்யப்ரஸ்தானத்தில் கொள்ளப்பட்டது. போகத்தினால் நாங்கள் மிக மகிழும்படி செய்பவனே! என்கிறபொருள் பகவத் விஷயப்ரஸ்தானத்தில் கொள்ளப்பட்டது. [இது ஸாமாந்ய புத்திகளுக்கு நிலமல்லாத விஷயம்.] பட்டருளிச்செய்த அஷ்டச்லோகியில் (2) *மந்த்ர ப்ரஹ்மணி மத்யமே நமஸா* என்னும் ச்லோகத்தில் (திருமந்த்ரத்திலுள்ள) நமஸ்ஸுக்கு, முன்னும் பின்னும் ஸ்வஸ்தானத்திலும் யோஜனை காட்டி மூன்றுவகையாக அர்த்த சிக்ஷை பண்ணப்பட்டிருக்கின்றது. அதுவும் பெரியோர் பாடே கேட்டுணரத்தக்கது.

கருந்தேவன் = காளமேகச்யாமளமாய் திவ்யமான வடிவையுடையவன். எம்மான் அவ்வடிவைக்காட்டி என்னை யீடுபடுத்திக்கொண்டவன். பெருந்தேவர் குழாங்களுக்குப் படிவிடும் வடிவையன்றோ எனக்கு உபகரித்தானென்று ஆனந்தம் பொங்கிச் சொல்லுகிறபடி. கண்ணன்—அவதாரமுகத்தாலும் உபகாரம் செய்தவன். விண்ணுலகம் தரும் தேவன் — பரமபதத்தைத்தருவானாயிருக்கிற ஸர்வேச்வரன். ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை, மனமே சோரேல் கண்டாய்—அவன் நீர்மைப் பெறுவதற்கு எவ்வளவோ க்ருஷி பண்ணினான் காண்; அந்த க்ருஷி ஒருவாறுபலித்திருக்கின்ற திப்போது; அதை விபலமாக்கிவிடாதேகொள் நெஞ்சே! என்கிறார். ... ... ... ... (4,

மனமேயுன்னை வல்வினையேனிரந்து*
கனமேசொல்லினேன் இதுசோரேல்கண்டாய்*
புனமேவிய பூந்தண்டுழாயலங்கல்*
இனமேதுமிலானை அடைவதுமே. (5)

மனமே — நெஞ்சே!
வல் வினையேன் — வல்வினையேனான நான்
உன்னை இரந்து — உன்னை வேண்டிக்கொண்டு
கனமே சொல்லினேன் — திடமாகவொன்று சொல்லுகிறேன்;
இது சோரேல் கண்டாய் — இதனை நழுவவிடாதே கொள்;
(அதாவதென்னென்னில்)

புனம் மேவிய பூந்தண் துழாய் அலங்கல் — தன்னிலத்தில் வளர்ந்த செவ்வித திருத்துழாய் மாலையை யுடையனாய்
ஏதும் இனம் இலானை — (அவ்வழகுக்கு) ஒரு விதத்திலும் ஒப்பில்லாதவனான பெருமானை
அடைவதும் — கிட்டவேணு மென்கிறவிது தான்.

***—கீழ்ப்பாட்டில் சொன்னதையே வற்புறுத்திச் சொல்லுகிறாரிதில். உலகில் ஒருவர் ஒரு விஷயஞ்சொன்னால் அதனை ஸாமான்யமென்று கருதி உபேக்ஷித்திருப்பாருமுண்டே; அப்படி உபேக்ஷிக்கத்தக்க வார்த்தையன்றிது; அவசியம் கைக்கொள்ளத் தக்கது என்று ருசிப்பிக்கிறபடி. மனமே! வல்வினையேன் உன்னையிரந்து இது கனமே சொல்லினேன்—பால் குடிக்கக் கால்பிடிப்பாரில்லையுலகில்; நானோ உன்னைப் பால் குடிக்கக் கால்பிடிக்கிறேன்காண் நெஞ்சே!. *முயற்றி சுமந்தெழுந்து முந்துற்ற நெஞ்சே!* என்று நான் முன்பே சொல்லிவைக்கும்படி நல்லதிலே முற்பட்டு ஈடுபட்டிருக்கிறவுனக்கு எம்பெருமானிடத்தில் ப்ராவண்யம் இயற்கையாயிருக்க, உனக்கு நான் சொல்லவேண்டுவதொன்றில்லை; என் செல்லாமையாலே சொல்லுகிறேனித்தனை காண். (घनम्) என்கிற வடசொல் கனமெனத்திரிந்தது; திடமாக வென்றபடி. கனகம் என்ற வடசொல் கனமெனச் சிதைந்ததென்றுங்கொள்ளலாம்; பொன் போன்ற பரமார்த்தத்தை யென்றபடி. இது சோரேல்—இந்த வார்த்தையை உபேக்ஷியாதேகொள், எந்தவார்த்தையை யென்ன, பின்னடிகளால் அதனை விவரிக்கிறார்;

[புனமேவிய பூந்தண்டுழாயலங்கலினமேது மிலானை யடைவதுமே] பரமபோக்யனான அவனை ஆச்ரயித்திருக்கை யென்னுமிவ்வர்த்தமே. தன்னிலத்திலே வளர்ந்து அழகிதான திருத்துழாய் மாலையையணிந்து "தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மான்" என்று வாய்நிறையப் பேசும்படியான போக்யதை வாய்ந்த ஸர்வாதிகனை விட்டுப் பிரியாமையாகிற இவ்வர்த்தத்தையே திடமாகச் சொன்னாராயிற்று. ... ... ... (5)

அடைவதுமணியார் மலர்மங்கைதோள்*
மிடைவதுமசுரர்க்கு வெம்போர்களே*
கடைவதும் கடலுளமுதம்*என்மன
முடைவதும் அவற்கேயொருங்காகவே. (6)

மலர் மங்கை — பெரிய பிராட்டியாருடைய
அணி ஆர் தோள் — ஆபரணங்கள் பொருந்திய திருத்தோள்களையே
அடைவதும — ஸம்ச்லேஷிப்பதும்;
அசுரர்க்கு வெம் போர்களே மிடைவதும் — ஆஸுரப்ரக்ருதிகளோடு வெவ்விய போர்களைச்செய்வதே நெஞ்சினால் நினைப்பதும்;

கடலுள் அமுதம் கடைவதும் — கடலிலுள்ள அமுதத்தையே கடைந்து கொடுப்பதும்;
அவற்கே — அப்பெருமானுக்கே
என் மனம் ஒருங்காகவே உடைவதும் — என்னெஞ்சு ஒருபடிப்பட சிதிலமாவதும்.

***—கீழ்ப்பாட்டில் தம் திருவுள்ளத்தை வேண்டினாரே; வேண்டுகோள் பலித்து அது நினைந்து நைந்து உள்கரைந்துருகுகிறபடியைப் பேசுகிறாரிதில். அடைவதும் மிடைவதும் கடைவதுமென்று ஆழ்வார் சொல்லுகிறவையல்ல; இவற்றைத் தம்திருவுள்ளம் சிந்திக்கிறபடியைத் தாம் ஒரு கரணமாகநின்று சொல்லுகிறாராயிற்று. எம்பெருமான் பெரிய பிராட்டியாரது திருத்தோளோடே ஸம்ச்லேஷிக்கிறபடியை நினைந்து உடைகின்றதாம்

நெஞ்சு; அவன் ஆச்ரிதவிரோதிகளான அசுரர்களைப் போர்க்களத்தில் முடித்து *तं दृष्ट्वा शत्रुहन्तारं महर्षीणां सुखावहम् । बभूव हृष्टा वैदेही भर्तारं परिषस्वजे = தம் த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம், பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே* என்ன நின்ற ஸந்நிவேசத்தைத் திருவுள்ளம் சிந்தித்து உடைகின்றதாம். ப்ரயோஜநாந்தர பரர்களான தேவர்களுக்கும் உடம்பு நோவக் கடல்கடைந்து அமுதமளித்த ஆற்றலைச் சிந்தித்து உடைகின்றதாம் நெஞ்சு.

இப்பாட்டில் நான்கு அடிகளும் தனித்தனி நான்கு வாக்கியங்கள்போல் தோன்ற நின்றாலும் பாட்டுமுழுவதும் ஒரே வாக்கியமாகவே கொள்ளத்தகும். அணியார்மலர்மங்கை தோளணைவதுபற்றியும், அசுரர்க்கு வெம்போர்கள் மிடைவதுபற்றியும், கடலுளமுதம் கடைவதுபற்றியும் அவற்கேயொருங்காக என்மனமுடைவது என்று ஏகவாக்யமாகத் தாற்பரியங்கொள்ளக்கடவது.

"கடைவதும் கடலுளமுதம்" என்ற மூன்றாமடிக்கு நம்பிள்ளையீடு இன்சுவைமிக்கது. அவ்விடத்து ஸ்ரீஸூக்திகள்வருமாறு:—"அவன் பனிக்கடலைக்கடைய இவர் மனக்கடல் உடையப்புக்கது. விரகராயிருப்பார் கோழைகளாயிருப்பார்பக்கலில் த்ரவ்யம் வாங்க நினைத்தால், முந்துறமிடுக்கராயிருப்பாரை நெருக்கிவாங்கவே இவர்கள் தாங்களே கொடுசென்று கொடுப்பர்களிறே; (அதுபோல) அவனும் மஹத்தத்வமான கடலை உலக்கையிட்டு நகமிட்டு நெருக்கி அதன்நல்லுயிரை வாங்க, இவருடைய திருவுள்ளமுடையத்தொடங்கிற்று" என்று. இத்தால், ஆழ்வார்திருவுள்ள முருகுவதற்காகவே எம்பெருமான் கடல்கடைந்தானென்றதாயிற்று. ... ... ... ... (6)

ஆகம்சேர் நரசிங்கமதாகி*ஓர்
ஆகம்வள்ளுகிரால் பிளந்தானுறை*
மாகவைகுந்தம் காண்பதற்கு*என்மனம்
ஏகமெண்ணு மிராப்பகலின்றியே. (7)

| | | | |
|---|---|---|---|
| ஆகம்சேர் | ஒருவடிவிலே பொருந்தின | மாகம் வைகுந்தம் | பரமாகாசமான ஸ்ரீவைகுண்டத்தை |
| நரசிங்கம் அது ஆகி | மநுஷ்யமூர்த்தியும், ஸிம்ஹமூர்த்தியுமுடையவனாகி | காண்பதற்கு | காண்கைக்கு |
| ஓர் ஆகம் | (இரணியனது) ஒரு வடிவை | இரா பகல் இன்றியே | இரவென்றும் பகலென்றும் வாசியின்றிக்கே |
| வள் உகிரால் | கூரிய நகங்களினால் | என் மனம் ஏகம் எண்ணும் | என்மனம் ஒரே விதமாக எண்ணுகின்றது. |
| பிளந்தான் | பிளந்தவனான எம்பெருமான் | | |
| உறை | நித்யவாஸஞ்செய்கிற | | |

***—எம்பெருமான் இவ்விடத்தே செய்த சேஷ்டிதங்களை யநுஸந்தித்து உருகின நெஞ்சு, அன்னவனுறையும் திருநாட்டைச்சென்று காணவிழைகின்ற தென்கிறதிப்பாட்டில். [ஆகஞ்சேர் நரசிங்கமதாகி] மநுஷ்யசரீரத்தில் ஸிம்ஹசரீரம்கலசாது; ஸிம்ஹசரீரத்தில் மநுஷ்யசரீரம் கலசாது; இங்ஙனே உலகவியல்பாயிருக்க, ஓராகத்திலே நாமும் சிங்கமும் சேர்ந்ததாயிற்று அவனுடைய விலக்ஷணஸங்கல்பத்தாலே; *विरुद्धे वैयग्रीसुघटितसमानाधिकरणे नृसिंहत्वे बिभ्रत् விருத்தே வையக்ரீஸுகடிதஸமாநாதிகரணே ந்ருஸிம்ஹத்வே பிப்ரத்* (ஸ்ரீரங்கராஜஸ்தவம்) என்று பட்டருளிச்செய்தது இங்கே அநுஸந்தேயம். "ஆகம்சேர்" என்பதற்கு—ஒரு வடிவிலே பொருந்திச்சேர்ந்த என்று இங்ஙனே பொருள்கொள்வதிற்காட்டிலும் மற்றொருவகையான பொருள் மிகச் சிறக்கும்; ஆகமென்று தம்முடையதிருவுள்ளத்தைச் சொன்னபடியாய், தமது நெஞ்சிலே மறக்கவொண்ணாதபடி சேர்ந்த நரசிங்கம்—என்று. சிறுக்கனைக்காக்கவும் செருக்கனைமுடிக்கவும் ஒருகால தோன்றி மறைந்த திருவுருவமாயினும் அது ஆழ்வார்போன்ற பரமபக்தர்களின் உள்ளத்திலே ஸ்தாவரப்ரதிஷ்டையாயிருக்குமே.

ஓராகம்வள்ளுகிரால் பிளந்தான்—இரணியனுடைய முரட்டுடம்பைத் தமது வாயால் சொல்லக்கூசி 'ஓராகம்' என்கிறார். அதனைக் கூரியவுகிரால் ஆயாஸமின்றிப் பிளந்த பெருமான் நித்யவாஸம்பண்ணுகிற, மாகவைகுந்தம்—(மஹாகம்) என்கிற வடசொல் மாக மெனத்திரிந்தது. "பரமே வ்யோமந்" என்று வேதத்தில் சொல்லுகிறபடி வைகுந்தம் பரமாகாச சப்தவாச்யமாதலால் மாகம் என்றது. மாகம் என்று ஒருதமிழ்ச்சொல் உண் டென்றும், அது பெருமைக்கு வாசகமென்றும் சொல்லுவர் சிலர்; அப்போது பெருமை தங்கிய வைகுந்தமென்றதாகும். அதனைக் காண்பதற்கு, என்மனம் இராப்பகலின்றியே ஏகமெண்ணும்—என்னுடைய ஹ்ருதயமானது எப்போதும் மநோரதியாநின்றது. இராப்பக லின்றியேயென்றது—இரவென்றும் பகலென்றும் வாசியில்லாதபடி யென்றவாறு. ஸம்ஸாரி களுக்கு இரவொருகாரியமும் பகலொருகாரியமுமாயிருக்கும்; ஆழ்வார்க்கு எப்போதும் ஒரே காரியமேயுள்ளது. ஏகம்—வடசொல். ... ... ... (7)

இன்றிப்போக இருவினையுங்கெடுத்து*
ஒன்றியாக்கைபுகாமை உய்யக்கொள்வான்*
நின்றவேங்கடம் நீணிலத்துள்ளது*
சென்றுதேவர்கள் கைதொழுவார்களே. (8)

| | | | |
|---|---|---|---|
| இரு வினையும் | புண்ணியம் பாவம் என்கிற இரண்டு கருமங்களையும் | வேங்கடம் | திருவேங்கடமலை |
| இன்றி போக கெடுத்து | ஸத்தையழிந்து போம்படி தொலைத்து | நீள் நிலத்து உள்ளது | பரந்த இவ்வுலகத்தே யுள்ள தொன்றாம்; |
| ஆக்கை ஒன்றி புகாமை | (ஆத்மா) சரீரத்தோடே சரீரமாகக் கலந்துபோகாதபடி | சென்று | (அங்கே) சென்று கிட்டி |
| உய்யக் கொள் வான் | உஜ்ஜீவனப்படுத்தும் எம்பெருமான் | கை தொழுவார்கள் | கை தொழுமவர்கள் |
| நின்ற | (அடியார்களை யெதிர்பார்த்து) நிற்கிற | தேவர்களே | (மநுஷ்யரன்றிக்கே) தேவர்களேயாவர். |

***மாகவைகுந்தம் காண்பதற்கு மனோரதங்கொண்ட ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் 'ஆழ்வீர்! சரீரஸம்பந்த மற்றபின்பு போய் அநுபவிக்கும் பரமபதத்தையா விரும்புகிறீர்; இந்த சரீரத்தோடேயநுபவிக்கும் திருமலை இந்நிலத்தேயுள்ளதன்றோ; இதை விட்டு மாகவைகுந்தங்காண வாசைப்படுவதில் என்னவிசேஷம்?" என்ன; இது வாஸ்தவமே; திருவேங்கடமலை இந்நிலத்தேயுள்ளது தான். அதனாலெனக்கென்ன? *காலாழும் நெஞ்சழியும் கண்சுழலுமென்றிருக்கிற நான் திருமலையில் சென்று அநுபவிக்க பாக்யஹீனனன்றோ; தேவர்களேயன்றோ அங்குச்சென்று தொழுவார்; ஆகவே திருமலையோடு பரமபதத்தோடு வாசியில்லையே யெனக்கு என்கிறார்.

இருவினையும் இன்றிப்போகக் கெடுத்து—புண்ணிய மென்றும் பாவமென்றும் இருவகைப்பட்ட கருமங்களானவை வாஸனையோடேபோம்படி பண்ணியென்றபடி. பாவம்போலே புண்யமும் கழியவேணும். பாவம் நரகத்திலே கொண்டு சேர்க்கும்; புண்யம் ஸ்வர்க்கத்திலே கொண்டு சேர்க்கும். முமுக்ஷுக்களுக்கு ஸ்வர்க்கத்தோடு நரகத்தோடு வாசியற்றிருக்கையாலே பாவம்போலே புண்யமும் ஹேயமாகிறது. *तदा विद्वान् पुण्यपापे विधूय- ததா வித்வாந் புண்யபாபே விதூய*என்று உபநிஷத்தும் ஓதிற்று. அநுபவித்தே அறவேண்டிய இவ்விரு வினைகளை எம்பெருமான் க்ருபாவிசேஷத்தாலே அறுத்தொழிப்பது சில அதிகாரி விசேஷங் களிலே யென்க.

ஒன்றி ஆக்கை புகாமை=அவ்விருவினைகளில் பின்னையும் ருசி வாஸனைகள் கிடக்குமாகில் *யாதானுமோராக்கையில் புக்கு அங்காப்புண்டு தடுமாறவேண்டிவருமே; அதற்கு ப்ரஸக்தியில்லாதபடி செய்து. உய்யக்கோள்வான் நின்ற வேங்கடம்=இப்படியாக உஜ்ஜீவிப்பித்தருளுமெம்பெருமான் அவஸரமெதிர்பார்த்து நிற்குமிடமான திருமலையானது; நீணிலத்துள்ளது—சிறந்த இந்நிலவுலகத்தில்தானுள்ளது. இது நாம் அறியாததன்று, அறிந்தேயிருக்கிறோம். ஆனாலும் அங்குச் சென்று அநுபவிக்கும் பாக்கியமில்லாமையைப் பற்றியே கரையவேண்டிற்றாகிறது. *காலுமெழா கண்ணநீரும் நில்லா உடல் சோர்ந்து நடுங்கி யென்னும்படி யிருப்பார்க்குத் திருமலைகொண்டு காரியமென்? சென்று தேவர்கள் கைதொழுவார்களே=அங்குச் சென்று கை தொழுமவர்கள் மநுஷ்யர்களாக இருக்க முடியாதே; தேவர்களாகவன்றோ இருக்கவேண்டும்.

“உய்யக் கொள்வான்” என்பதற்கு — உய்யக் கொள்ளுகைக்காக என்றும் பொருள் கொள்ளலாம். ... ... ... ... (8)

தொழுதுமாமலர் நீர்சுடர்தூபம்கொண்டு*
எழுதுமென்னுமிது மிகையாதலில்*
பழுதில்தொல்புகழ்ப் பாம்பணைப்பள்ளியாய்*
தழுவுமாறறியேன் உனதாள்களே. (9)

| | | | |
|---|---|---|---|
| மா மலர் | சிறந்த புஷ்பங்களையும் | பழுது இல் தொல் புகழ் | (ஆராதிக்கைக்கு அரியன்) என்கிற அவத்யமின்றிக்கே இயற்கையான புகழையுடைய |
| நீர் சுடர் தூபம் | தீர்த்தம் தீபம் தூபம் இவைகளையும் | பாம்பு அணை பள்ளியாய் | சேஷசயன சாயியான பெருமானே; |
| கொண்டு | ஏந்திக்கொண்டு | உன தாள்கள் | உனது திருவடிகளை |
| தொழுது எழுதும் என்னும் இது | அடிமை செய்து உஜ்ஜீவிப்போமென்றால். இது | தழுவும் ஆறு அறியேன் | கிட்டும் .விரகு அறிகின்றிலேன். |
| மிகை ஆதலில் | (உனது திருவுள்ளத்தாலே) மிகையாயிருப்பதால், | | |

***—கீழ்ப்பாட்டில் “வேங்கடம் சென்று தேவர்கள் கைதொழுவார்களே” என்ற ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் ‘ஆழ்வீர்! திருவேங்கடம் சென்று கை தொழுவது அத்தனை யருமையன்று காணும்; மநுஷ்யர்களெல்லாருஞ் சென்று கை தொழுமிடமேயது; நீ நம் வந்து கை தொழுது க்ருதக்ருத்யராகலாமே’ என்று கூற, அதற்கு விடையளிக்கிறதிப்பாசுரம். *தெழிகுரலருவித்திருவேங்கடத்தெழில்கொள்சோதி யெந்தை தந்தை தந்தைக்கு ஒழிவில்காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்ய வேண்டு நாம்* என்று, அவ்விடத்தேற வந்து கைங்கரியஞ்செய்து வாழவேணுமென்று ஏற்கெனவே நான் பாரித்திருந்ததுமுண்டு. ஆலோசித்துப் பார்க்குமிடத்தில், தூபதீப புஷ்பாதிகளைக் கொண்டு அடிமை செய்வோமென்றால் அதுவும் மிகை என்னும்படியன்றோ உன் ஸ்வபாவமிருப்பது, நான் என்ன அடிமை செய்வேது! என்று தடுமாறுகிறார். “भूयिष्ठां ते नम उक्तिं विधेम பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம” என்கிற ச்ருதி வாக்யத்திற்கு—அதிகமான நமஉக்தியை உனக்குச் செய்வோம் என்று சிலர் பொருள் கூறுவர்; “பூயிஷ்டாம் நமஉக்திம் தே விதேம” என்று அந்வயங்கொண்டு அங்ஙனே பொருள் கூறுகின்றார்கள். நம் ஆசாரியர்கள் அருளிச்செய்யும் பொருள் அதுவன்று; ‘தே பூயிஷ்டாம் நமஉக்திம் விதேம’ என்று அந்வயித்து, தேவரீருடைய திருவுள்ளத்தாலே மிகையான நமஉக்தியைப் பண்ணக்கடவோம்’ என்று இங்ஙனே பொருளுரைப்பர். நம: என்று சொல்வதையும் எம்பெருமான் மிகையாக நினைப்பனாம். தே என்பதற்கு ‘உன்னுடைய கருத்தாலே’

என்கிற பொருள் ஸம்பவிக்குமோ வென்னில்; 'நையாயிகஸ்ய வாயு: அப்ரத்யக்ஷ:" என்றால் 'நையாயிகஸ்ய மதே' என்று பொருளாகவில்லையோ. "லோபச் சாகல்யஸ்ய" என்பது ஒரு வியாகரண ஸூத்ரம். சாகல்ய முனிவர்க்கு லோபம் என்பதாக இதற்குப் பொருளன்றே; 'சாகல்ய முனிவருடைய கருத்தாலே லோபம்' என்றுதானே பொருள். அப்படியே 'தே பூயிஷ்டாம்' என்றது 'உன் கருத்தாலே பூயிஷ்டமான' என்று பொருள்படக் குறையில்லை. ஆக, *பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம* என்கிற ச்ருதிவாக்யத்திற்கு நம் ஆசாரியர்கள் இங்ஙனே பொருள் திருவுள்ளம் பற்றுவதற்கு நிதாநம் இப்பாசுரமேயாகும். அந்த ச்ருதிவாக்யத்திற்கு ஆழ்வார் இங்ஙனே பொருள் கொண்டாரென்பது இப்பாசுரத்தினால் நன்கு விளங்கும்.

மாமலர் நீர்சுடர் தூபங்கொண்டு தொழுதெழுது மென்னுமிது மிகை=*செண்பக மல்லிகையொடு செங்கழுநீரிருவாட்சி முதலிய நன் மலர்களைக் கொண்டும், அர்க்ய பாத்ய ஆசமநீயாதிகளுக்குரிய தீர்த்தத்தைக் கொண்டும், மற்றும் தீபம் தூபம் முதலிய உபகரணங்களைக் கொண்டும் தொழுது [அடிமை செய்து] உஜ்ஜீவிப்போமென்றால் இதையும் மிகையாக நினைப்பவனன்றோ நீ என்றபடி. ஆதலில் உனதாள்கள் தழுவுமாறு அறியேன்=ஆகவே உன்னுடைய திருவடிகளைக் கிட்டும் விரகு அறிகின்றிலேன். 'நாம் செய்யும் ஸ்வல்பகிஞ்சித்காரத்தையும் பஹுவாக நினைக்குமுன்னுடைய சீலத்தை நினைத்தவாறே' என்று கூட்டிக் கொள்வது.

பழுதில் தோல்புகழ் என்றது — ஆராதனைக் கெளியன் என்கிற புகழ் மிக்கவனென்றபடி. பாம்பணைப்பள்ளியாய் என்றது—*சென்றால் குடையாமிருந்தால் சிங்காசனமாம்...திருமாற்கு அரவு*என்கிறபடியே ஸகலவித கைங்கரியங்களும் செய்ய பாக்கியம் படைத்த திருவனந்தாழ்வான் போல்வாரன்றோ உனக்கு அடிமை செய்து வாழ்வார்; அந்த பாக்கியம் என்போல்வார்க்கு உண்டோ? என்ற குறையைக் காட்டுகிறபடி. ... ... (9)

தாளதாமரையான் உனதுந்தியான்*
வாள்கோள்நீள்மழுவாளி உன்னாகத்தான்*
ஆளராய்த்தொழுவாரும் அமரர்கள்*
நாளுமென்புகழ்கோ உனசீலமே. (10)

| | | | |
|---|---|---|---|
| தாள தாமரையான் | தாளையுடைய தாமரையிற் பிறந்த பிரமன் | உன் ஆகத்தான் | உனது திருமேனியில் ஒரு பக்கத்தைப்பற்றினவன். |
| உனது உந்தியான் | உன்னுடைய உந்தியைப் பற்றினவன்; | ஆளர் ஆய் தொழுவாரும் அமரர்கள் | அடியார்களாய்ப் பணிகின்றவர்களும் தேவர்கள்; |
| | | உன சீலம் | உன்னுடைய சீல குணத்தை |
| வாள் கொள் நீள் மழு ஆளி | ஒளி பொருந்திய நீண்ட மழுப் படையை யுடைய ருத்ரன் | நாளும் என் புகழ்கோ | காலமெல்லாம் புகழ்ந்தாலும் என்னவென்று புகழ்வேன்! |

***—ப்ரயோஜநாந்தர பரர்களாய் அடிமைச் சுவடு அறியாதவர்களான பிரமன் முதலிய தேவர்களுக்கும் முகங்கொடுக்குமவனான உன்னுடைய சீலகுணம் என் வாக்குக்கு நிலமன்றே யென்கிறார். தாளதாமரையான் உனதுந்தியான்—தாமரைப் பூவைப் பிறப்பிடமாகவுடையனான பிரமன் உனது திருநாபியைப் பற்றியிராநின்றான். தாமரையிற் பிறந்தோமென்று தூரமானமுடையனான அவனுக்கு உடம்பு கொடுத்தது என்னே! என்று வியக்கிறபடி. வாள்கோள்நீள்மழுவாளி உன்னாகத்தான்—*தொடையொத்த துளபமுங் கூடையும் பொலிந்து தோன்றியதோள் தொண்டரடிப்பொடி* என்னுமாபோலே சேஷத்வலக்ஷணம் பொலிந்திருக்கையன்றிக்கே கொலைக்கருவியான மழுவையுடையவொருவன் உன்திருமேனியிலேகதேசத்தைப்பற்றியிராநின்றான். அந்த தூர்மானிக்குமுட்பட உடம்பு கொடுத்த சீலம் என்னே! என்று வியக்கிறபடி.

ஆளராய்த் தொழுவாரு மமரர்கள்—'அமரர் என்கிற பெயர் நித்யஸூரிகளுக்கே உரித்தாயிருக்க, ப்ரயோஜநாந்தரபரர்களான தேவர்களும் அப்பெயரைப் பூண்டு கொண்டு உனக்கு ஆட்பட்டவர்களாகத் தம்மைச் சொல்லிக்கொண்டு திரிவதும் அவர்களுக்குங்கூட முகங்கொடுப்பதும் என்னே! என்று வியக்கிறபடி. உனசீலம் நாளும் என் புகழ்கோ= காலதத்வமெல்லாங்கூடினாலும் உன்னுடைய சீலத்தை எத்தைச்சொல்லிப் புகழ்வேன்! (10)

சீல மெல்லையிலானடிமேல்*அணி
கோலநீள் குருகூர்ச்சடகோபன்*சொல்
மாலையாயிரத்துள் இவைபத்தினின்
பாலர்*வைகுந்தமேறுதல் பான்மையே. (11)

| | | | |
|---|---|---|---|
| சீலம் எல்லை யான் அடி மேல் | எல்லையற்ற சீல குணத்தையுடைய பெருமான் திருவடிகளைப்பற்றி | சொல் மாலை ...ரத்துள் | சொற்களாலான மாலையாயிருக்கிற ஆயிரத்தினுள்ளே |
| | | ...வை பத்தி பாலர் | இப்பதிகத்திலே அந்வயித்தவர்கள் |
| கோலம் குருகூர் சடகோபன் | மிகவழகிய ...ிலவ ...தரித்த ஆழ்வாருடைய | வைகுந்தம் ஏறுதல் பான்மை | பரமபதத்தில் ...ப்பெறுவது இயல்வா... |

***. ...ப்பதிகம் கற்பார் திருநாடு செல்லுகை ஆச்சரியமன்று, ப்ராப்தமே என்கிறார். இத்திருவாய்மொழியால் பேசப்பட்டது எம்பெருமானுடைய சீலாதிக்ய மாதலால் சீலமெல்லையிலானடிமேல் என்கிறார். महतो मन्दैस्सह नीरन्ध्रेण संश्लेषः शीलम् " — மஹதோ மந்தைஸ் ஸஹ நீரந்த்ரேண ஸம்ச்லேஷ: சீலம்" என்று சொல்லுவர்களாகிலும், நெஞ்சை யுருக்கும்படியான குணங்களெல்லாவற்றிற்கும் சீலமென்பது பொதுப்பெயருமாகும். அது எல்லை கடந்து விளங்குபவனை எம்பெருமானது திருவடிகளைப் பற்றிக் குருகூர்ச் சடகோபன் சொன்ன ஆயிரத்துள் இப்பதிகத்தின் அருகே யுள்ளவர்கள் (அதாவது) இப்பதிகத்தோடு ஏதேனுமொருபடியாக ஸம்பந்தம் பெறுமவர்கள், உரிய காலத்திலே பரமபதம் சென்றுசேர ப்ராப்தம். இப்பாசுரங்களைக் கண்டபாடமாக்கிச் சொல்லுவதோ, அர்த்தாநுஸந்தானம் பண்ணுவதோ, பிறர் அநுஸந்திக்கக் கேட்டிருப்பதோ, திருவாய்மொழி ஸேவிக்குமிடத்தில் இருந்து உறங்குவதோ இப்படிப்பட்டவற்றில் ஏதேனுமொன்றைச் செய்யுமவர்களும் 'இவை பத்தினின் பாலர்' என்றதற்குப் பொருளாவரென்க.

"வைகுந்த மேறுதல் பான்மையே" என்ற சப்தஸ்வாரஸ்யத்தில் கிடைத்த பொருளை நம்பிள்ளை விவரிக்குமழகு காண்மின்—"பித்ருதனம் புத்ரனுக்கு தாயப்ராப்தமா யிருக்குமிறே" என்று. .... ... ... ... (11)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையுரையில்

ஒன்பதாம்பத்து மூன்றாந் திருவாய்மொழி

முற்றிற்று.

२४

நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# நான்காந் திருவாய்மொழி—மையார்கருங்கண்ணி.

உரையவதாரிகை:—எம்பெருமான், சாஸ்த்ரங்களில் ஒரு பக்கத்திலே ஸ்வதந்த்ரனென்று போற்றப்படுவதுபோல, மற்றொரு பக்கத்தில் சீலாதி குணகண பூஷிதனென்றும் கொண்டாடப்படுகிறான். ஸ்வாதந்திரிய மென்பது அவனுக்கு ஸ்வரூபமாயிருக்கும். சீலாதி குணமுடைமையும் அவனுக்கு ஸ்வரூபமாயிருக்கச் செய்தேயும் ஸ்வாதந்திரியத்தின்கீழே அத்திருக்குணங்கள் தலையெடுக்கமாட்டாமல் அமுங்கிக்கிடக்கும். அவை எப்போது தலையெடுக்குமென்னில்; பிராட்டி புருஷகாரம் செய்யும்போதுகளில் தலையெடுக்குமென்று நம் ஆசாரியர்கள் கண்டறிந்து கூறுகிறார்கள். முமுக்ஷுப்படியில் த்வயப்ரகரணத்தில்—"புருஷகார பலத்தாலே ஸ்வாதந்த்ர்யம் தலைசாய்ந்தால் தலையெடுக்கும் குணங்களைச் சொல்லுகிறது நாராயண பதம்" என்ற திவ்ய ஸூக்தியை இங்கு அநுஸந்திப்பது. ஆக, கீழ்த்திருவாய்மொழியில் அநுஸந்திக்கப்பட்ட சீலகுணத்திற்கு ஊற்றுவாயான பிராட்டியின் ஸம்பந்தத்தையும் அநுஸந்தித்தார் ஆழ்வார். *மாக வைகுந்தங் காண்பதற்கு என்மனமேகமெண்ணு மிராப்பகலின்றியே* என்று கீழ்த்திருவாய்மொழியில் வெளியிட்ட ஆசையும் விஞ்சிப் பெருகிற்று. அவன் சீலாதிகனுமாய்த் திருமகள் கொழுநனுமாயிருந்து வைத்து இப்படி நம்மைத் துடிக்கவிட்டு உபேக்ஷையாயிருக்கிறானே யென்று மிகவருந்தினாராழ்வார். கஜேந்திராழ்வானுக்கு அருள்செய்ய அரைகுலையத் தலைகுலைய மடுவின் கரையிலே ஓடிவந்தாப்போலவு மன்றிக்கே ப்ரஹ்லாதாழ்வானுக்கருள் செய்யத் தூணிலே வந்து சடக்கெனத் தோன்றினாப்போலே தோன்றி யருள்செய்ய வேண்டும்படியான நிலைமையாயிற்று ஆழ்வாரது.

இப்படிப்பட்ட நிலைமையிலும் அவன் வந்து முகங்காட்டிற்றிலனென்றால் அவனைக் குறித்துச் சொல்லும் குணங்கள் கடலோசைபோலே நிரர்த்தகமாமத்தனையன்றோ. அப்படி தன் திருக்குணங்களைப் பழுதாக்கிக் கொள்ளமாட்டானே அவன். ஆழ்வாருடைய விடாயையறிந்து உதவவந்து முகங்காட்டினான். அதற்கு மிகமகிழ்ந்து 'நான் க்ருதக்ருத்யனானேன், அடிமை செய்யப்பெற்றேன், வாழ்ந்தேன், ஸ்ரீவைஷ்ணவர்களுக்கெல்லாம் சொல்லமுதளித்து உபகாரம் செய்யப்பெற்றவனானேன்; இப்பேறுகள் ஒருவன் பெறத்தகுமோ?' என்று சொல்லித் தம்முடைய மகிழ்ச்சியை வெளியிட்டுத் தலைக்கட்டுகிறார் இப்பதிகத்தை. ... *

மையார்கருங்கண்ணி கமலமலர்மேல்
செய்யாள்*திருமார்வினில்சேர் திருமாலே*
வெய்யார்சுடராழி சுரிசங்கமேந்தும்
கையா*உன்னைக்காணக் கருதுமென்கண்ணே. (1)

| | | | |
|---|---|---|---|
| மை ஆர் கரு கண்ணி | மையணிந்த கருங்கண்களையுடையவளும் | சுடர் ஆழி | ஒளிமிக்க திருவாழியையும் |
| கமலம் மலர் மேல் | தாமரைப் பூவின் மேலிருப்பவளுமான | சுரி சங்கம் | அழகிய ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் |
| செய்யாள் | சிவந்த நிறமுடைய பிராட்டி | ஏந்தும் கையா | ஏந்தின திருக்கைகளையுடையவனே! |
| திரு மார்வினில் சேர் | திருமார்பிலே சேரப்பெற்ற | என் கண் | எனது கண்களானவை |
| திருமாலே | ஸ்ரிய: பதியே!, | உன்னை காண கருதும் | உன்னைக் காண விரும்பா நின்றன. |
| வெய்யார் | வெம்மை விஞ்சின | | |

***—பெரிய பிராட்டியாரோடும் திவ்யாயுதங்களோடுஞ் சேர்ந்த சேர்த்தியைக் காண்பதற்குத் தமது கண்கள் விடாய்த்திருக்கிறபடியைப் பேசுகிறாரிதில். **वैकुण्ठे तु परे लोके श्रिया सार्धं जगत्पतिः, आस्ते विष्णुरचिन्त्यात्मा भक्तैर्भागवतैस्सह** *வைகுண்டே து பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:, ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர்பாகவதைஸ் ஸஹ* என்றோதப்பட்ட நிலைமையைக் கண்டு களிக்க வேணுமென்கிறாராயிற்று.

மையார்கருங்கண்ணி = ஆச்ரயணகாலமென்றும் அநுபவகாலமென்றும் இரண்டு ஸமயங்களுண்டு; ஆச்ரயண காலத்தில் பிராட்டியைப் புருஷகாரமாகக் கொள்ளவேணும்; அநுபவகாலத்தில் அவளும் அவனுமான சேர்த்தியிலே அடிமை செய்யவேணும். ஆக இரண்டு தசையிலும் பிராட்டியின் ஸம்பந்தம் அவர்ஜநீயமாயிருக்கையாலே ஸமயத்திற்குத் தகுந்தபடி உபயோகப்படுவதற்காகப் பிராட்டி நித்யோக முடையளாயிருப்பள். ஆச்ரயண காலத்தில் சேதநர்களைக் குற்றங்கண்டு சீறாமல் அங்கீகரிக்கச் செய்வதற்காக முதலிலே எம்பெருமானுக்கு உபதேசங்கள் செய்வள். அந்த வுபதேசங்கள் பலிக்காமற் போமளவில் தன்னழகைக் காட்டி அதிலே அவனை யீடுபடுத்தித் தன்சொற்படி நடக்கச் செய்வள். இவ்விஷயத்தை ஸ்ரீவசந பூஷணத்திலருளிச் செயயுமிடத்து (13.) "உபதேசத்தாலே மீளாதபோது ......ஈச்வரனை அழகாலே திருத்தும்" என்கிறார் பிள்ளை லோகாச்சாரியர். அவ்விடத்து வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள்—"ஈச்வரனை அழகாலே திருத்துகையாவது—ஓங்காண்போ, உனக்குப் பணியன்றேயிது' என்று உபதேசத்தை யுதறினவாறே கண்ணைப்புரட்டுதல் கச்சை நெகிழ்த்தல் செய்து தன்னழகாலே அவனைப் பிச்சேற்றித் தான் சொன்னபடி செய்தல்லது நிற்கமாட்டாதபடி பண்ணி அங்கீகாரோந்முகனாக்குகை." என்றருளிச் செய்கிறார். ஆகவே நம்முடைய வாழ்ச்சிக்குப் பிராட்டியின் திருக்கண்களே மூலகாரணமாதலால் அக் கண்ணழகை முந்துறப் பேசுகிறார். ஸ்ரீராமாயணத்தில் 'அஸிதேக்ஷணை' என்று பலகாலுஞ் சொல்லுகிறபடியே பிராட்டி இயற்கையாகவே கருங்கண்ணி; மையிட்டுக் கருமை ஸம்பாதிக்க வேண்டியதில்லை. ஆயினும் மங்களார்த்தமாகவே மையிடுகிறபடி.

கமல மலர்மேல் செய்யாள்— **पद्मे स्थितां पद्मवर्णाम्** —பத்மே ஸ்திதாம் பத்மவர்ணாம்* என்கிற ஸ்ரீஸூக்த வாக்யத்தை அப்படியே மொழி பெயர்த்தபடி காண்மின். தாமரைப் பூவிலிருந்தவள் * **पादारुन्तुदमेव पङ्कजरजः** பாதாருந்துதமேவ பங்கஜராஜ:* என்று ஸ்ரீகுணரத்ந கோசத்திலே பட்டர் அருளிச்செய்தபடியே அத்தாமரைப் பூவில் துகள் திருவடிக்கு உறுத்தினவாறே அதைவிட்டு எம்பெருமானுடைய திருமார்விலே சேரப் பெற்றாள்; அது சொல்லுகிறது திருமார்வினில் சேர் என்று. திருமாலே—*மாலாய்ப் பிறந்த நம்பியை மாலே செயயும் மணாளனை* என்று ஆண்டாளருளிச் செய்தபடியே, பிராட்டியாலே தான் பிச்சேறி, தான் அவளைப் பிச்சேற்றுமவனென்கை. இவ்வழகை யெல்லாங்காண ஆழ்வார் ஆசைப்படுகிறபடி.

கீழே பெரிய பிராட்டியாருடைய சேர்த்தியைச் சொன்னவுடனே திருவாழி திருச்சங்குகளின் சேர்த்தியை மூன்றாமடியிலேற் சொல்லுகையாலே இதிலிருந்துகண்ட ஒரு ரஸ விசேஷத்தை நம்பிள்ளை யருளச்செயகிறார் காண்மின்—"இவள் கையில் லீலாரவிந்தம் அவனுக்கு போக்யமாயிருக்குமாபோலே யாயிற்று அவன் கையில் திவ்யாயுதங்கள் இவளுக்கு இனிதாயிருக்குப்படி" என்று. இத்தால், பிராட்டி பூவேந்தி யிருக்குமாபோலே எம்பெருமான் ஆயுதவிசேஷங்களை ஏந்தியிருக்கிறபடி என்றதாயிற்று. ஏந்துங்கையா! என்கையாலே, வெறுந் திருக்கைகளையுமே வெறுந் திவ்யாயுதங்களையுமன்றிக்கே இரண்டுஞ் சேர்ந்த சேர்த்தியையே தாம் காணவாசைப் பட்டிருப்பது தெரிவிக்கப்பட்டதாயிற்று.

உன்னைக்காண—லக்ஷ்மீ ஸம்பந்தத்தோடும் திவ்யாயுதங்களோடும் திவ்ய விக்ரஹத்தோடுங் கூடியிருக்கிற வுன்னைக்காண என்றபடி. காண நாளுசைப்படுகிறே னென்னுமல் "என்கண் காணக்கருதும்" என்றது—"என்பசி கிடக்கட்டும்; ப்ரஜையின் பசியைப் போக்குவாய் தாயே!" என்று இரப்பாளர் சொல்லுமடைவிலே அமைந்துளது. ... ... (1)

கண்ணேயுன்னைக்காணக்கருதி*என்னெஞ்சம்
எண்ணேகொண்ட சிந்தையதாய்நின்றியம்பும்*
விண்ணோர்முனிவர்க்கென்றும் காண்பரியாயை*
நண்ணுதொழியேனென்று நானழைப்பனே. (2)

| | |
|---|---|
| கண்ணே! | எனக்குக் கண்ணானவனே! |
| என் நெஞ்சம் | எனது நெஞ்சானது |
| உன்னை காண கருதி | உன்னையே காண வாசைப்பட்டு |
| எண்ணே கொண்ட சிந்தையது ஆய் நின்று | பலபல மனோரதங்களைப் பண்ணி நின்று |
| இயம்பும் | அலற்று நிற்கும்; |

| | |
|---|---|
| நான் | நானோ வென்னில் |
| விண்ணோர் முனிவர்க்கு | தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் |
| என்றும் காண்பு அரியாயை | என்றுங் காணவரியனான உன்னை |
| நண்ணு தொழியேன் என்று அழைப்பன் | கிட்டாமல் விடுவதில்லையென்று உறுதி கொண்டு கூப்பிடா நின்றேன். |

***—கீழ்ப்பாட்டில் தம்முடைய கண்களுக்குண்டான நசையைப் பேசினார்; இப்பாட்டில் தமக்கும் தம்முடைய நெஞ்சுக்குமுண்டான சாபலத்தைச் சொல்லுகிறார். எம்பெருமானைக் கண்ணே! யென்று விளிக்கிறார். *चक्षुर्देवानामुत मर्त्यानाम्–சக்ஷுர் தேவாநாமுத மர்த்யாநாம்* என்று சுருதியும் எம்பெருமானைக் கண்ணாகச் சொல்லிற்று. எல்லாவற்றையுங் காண்பதற்குக் கண் ஸாதனமாயிருப்பதுபோல அவனைக் காண்பதற்கும் அவனே ஸாதனமாயிருத்தலால், அவனைக் கண்ணெனத் தகும். கண்ணிழந்தவர்கள் எதையும் காணமாட்டாததுபோல எம்பெருமானை யிழந்தவர்களும் எதையும் காணமாட்டாமையு முணர்க. "என்னெஞ்சம் உன்னைக் காணக் கருதி" என்று, தம்முடைய நெஞ்சு அவனைக் காணக் கருதுவதாகக் கூறுகிறார்; மநஸ் ஸஹகாரமுடைய கண்காண்பதையே இங்ஙனம் கூறினாரென்க. நாம் மனத்தை ஓரிடத்தே வைத்துவிட்டுக் கண்ணை மற்றோரிடத்தே செலுத்தினால் அக்கண்ணுக்கு ஒன்றும் புலப்படாதென்பது அநுபவஸித்தம். காண்கைக்குக் கண் கருவியானாலும் நெஞ்சுதான் முக்கியமான கருவியென்பது இதனால் பெறப்பட்டது. ஸம்ஸாரிகளுடைய நெஞ்சும் கண்ணும் விஷயாந்தரங்களிலே பரகுபரகென்று பரந்திருக்கும். ஆழ்வாருடைய நெஞ்சும் கண்ணும் *यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः–யஸ்யாம் ஜாக்ரதி பூதாநி ஸா நிசா பச்யதோ முநே:* என்று கீதையிலே சொன்ன கணக்கிலே வகுத்த விஷயமொன்றிலேயே ஏகாக்ரமாயிருக்கும். *चक्षुश्च द्रष्टव्यं च नारायणः, श्रोत्रं च श्रोतव्यं च नारायणः: சக்ஷுச்ச த்ரஷ்டவ்யஞ்ச நாராயண:, ச்ரோத்ரஞ்ச ச்ரோதவ்யஞ்ச நாராயண:* என்ற உபநிஷத்து ஆழ்வார் பக்கலிலேயே ஸமந்வயம் பெறுமென்க.

எண்ணேகொண்ட சிந்தையதாய் நின்று—'எண்கொண்ட' என்றது-பல எண்ணிக்கைகளைக் கொண்ட என்றபடி. 'குணவாந்' என்றால் பல குணங்களையுடையவனென்றும், 'தநவாந்' என்றால் பல தனங்களையுடையவனென்றும் பொருள்படுவதொக்கும். பலபல மனோரதங்களைப் பண்ணுநின்றதென்றபடி. ஸ்ரீவைகுண்ட கத்யத்தில் "कदा अहम्–கதா அஹம்" என்று தொடங்கி "आशां वर्धयित्वा–ஆசாம் வர்த்தயித்வா" என்னுமளவும் அருளிச்செய்யப்பட்டுள்ள மனோரத ப்ரகாரங்களை நினைப்பது.

நின்று இயம்பும்—நிரந்தரமாகக் கதறுகின்ற தென்றபடி. ஆக நெஞ்சு ஒன்றே சொல்லிற்றாயிற்று. இனி கண்ணின் செயலையும் வாக்கின் செயலையும் ஏறிட்டுக்கொண்டமை சொல்லுகிறார் விண்ணோர் என்று தொடங்கி. பிரமன் முதலிய தேவர் தம்முடைய செயலைச் சொல்லுகிறார் விண்ணோர் என்று தொடங்கி. பிரமன் முதலிய தேவர்கட்கும் ஸநக ஸநந்தநாதி மஹர்ஷிகளுக்குங்கூட நீ துர்லபனென்பதை நானறிவேன்; அவர்களுக்கு துர்லபனானால் எனக்கும் துர்லபனாக வேணுமென்று நிர்ப்பந்தமில்லையே; * மயர்வற மதிநலமருளப்பெற்ற ஏற்றம் எனக்குண்டே; ஆகவே நான் உன்னைக் கிட்டாதொழியேன், கிட்டியே தீருவேன் என்று திடமான அத்யவஸாயங் கொண்டு கூப்பிடா நின்றேன் என்றாராயிற்று. (2)

அழைக்கின்றவடிநாயேன் நாய்கூழைவாலால்*
குழைக்கின்றதுபோல என்னுள்ளம்குழையும்*
மழைக்கன்றுகுன்றமெடுத்து ஆநிரைகாத்தாய்*
பிழைக்கின்றதருளென்று பேதுறுவனே. (3)

| | | | |
|---|---|---|---|
| அழைக்கின்ற அடி நாயேன் என் உள்ளம் | கூப்பிடா நின்றுள்ளவனாய்த் திருவடிவாரத்தில் விழுந்து கிடக்கும் நீசனான என்னுடைய உள்ளமானது | மழைக்கு குன்றம் எடுத்து | பெருமழையைத் தடுக்கக் கோவர்த்தன மலையைக் குடையாக வெடுத்து |
| | | ஆ நிரை காத்தாய் | பசுக் கூட்டங்களை காத்தவனே! |
| நாய் கூழை வாலால் குழைக்கின்றது போல குழையும் | நாயானது குட்டை வாலை யசைத்துத் தன்னினைவைக் காட்டுமாபோலே காட்டா நிற்கும் | அருள் பிழைக்கின்றது என்று | உன்னருள் (என்பக்கலிலே) தடுமாறிப் போகின்றதே யென்று |
| அன்று | பாருக ... ல் | உறுவன் | கலங்கா ... ன். |

***—கீழ்ப்பாட்டிற்படியே கூப்பிடச்செய்தேயும் அவன் வந்தருளக் காணாமையாலே, ஆர்த்தியே செப்பேடாக வந்து ரக்ஷிக்குமவனான உன்னுடைய திருவருளுக்கு நான் புறம்பானேனோ?" என்கிறார்.

அழைக்கின்ற அடிநாயேன்=என்னுடைய தன்மையை நான் நன்கறிந்துள்ளேன்; ஊருண்கேணியிலே கள்ளியை வெட்டியெறிந்தால் அது எப்படி அவத்யமடையுமோ, அப்படியே நான் உன்னைக் கிட்டினால் உனக்கு அவத்யமாகுமென்பதை அறியாதிருக்கின்றேனல்லேன், நன்கறிந்தேயிருக்கின்றேன்; ஆனாலும் ருசி வெறுமனிருக்கவொட்டாமையாலே ஆர்த்தியாலே கூப்பிடாநின்றேன். உலகில் நாயானது தன்னுடைய தலைவனுக்குத் தன் ஆவலைத் தெரிவிப்பது தன் வாலினாலன்றோ; அந்த வால் குட்டையானால் தெரிவிக்கை அரிதாம்; ஐயோ தெரிவிக்க முடியவில்லையே யென்று நோவு பட்டுக் கிடக்கும்; அதுபோல என்னுள்ளமும் நோவுபட்டுக் கிடவா நின்றது என்கிறார்.

இங்குக் காட்டின த்ருஷ்டாந்தத்தினால் இரண்டுவகையான கருத்துத் தேறும்; ஆழ்வாருடைய திருவுள்ளத்திலோடுகிற கிலேசம் வாய்விட்டுத் தெரிவிக்க முடியாதது என்பதொன்று; நாய் ஸாதனமில்லாமல் கிலேசப்படுவதுபோல, தாமும் ஸாதனமில்லாமல் கிலேசப்படுவதாகச் சொல்லுதல் மற்றொன்று.

இப்படி சொல்லக்கேட்ட எம்பெருமான் 'கைம்முதலில்லையென்று தெரிந்து கொண்ட நீர் என்னை வடிம்பிடுவதேன்?' என்ன; பின்னடிகளால் அதற்கு மறுமாற்ற முரைக்கின்றார்; இந்திரன் பசிக்கோபத்தினால் ஏழுநாள் விடாமழை பெய்வித்தபோது குன்றமேந்திக் குளிர் மழை காத்த மஹா குணத்தையும் மஹா கருணையையும் நம்பியன்றோ நாங்களிருப்பது. அத்திருவருள் பசுக்களுக்குத்தான் என்று ஒரு நியதி யுண்டோ? என்போல்வாரிடத்தில் அது

*ப்ரஸரிக்கக் கூடியதுதானே! அக் குணத்திற்கு நான் புறம்பாகிறேனோவென்று கலங்கா நின்றேனென்கிறார்.* (3)

உறுவதிதுவென்று உனக்காட்பட்டு*நின்கண்
பெறுவதெதுகொலென்று பேதையேன்நெஞ்சம்*
மறுகல்செய்யும் வானவர்தானவர்க்கென்றும்*
அறிவதரிய அரியாயவம்மானே. (4)

| | | | |
|---|---|---|---|
| வானவர் தானவர்க்கு | அநுகூலர்க்கும் பிரதிகூலர்க்கும் வாசியற | நின் கண் பெறுவது எதுகொல் என்று | உன் பக்கலில் நான் பெறக்கூடிய பேறு எதுவோவென்று [நித்ய கைங்கரியமோ அல்லது ஸம்ஸாரந்தானோ வென்று] |
| என்றும் அறிவது அரிய | எப்போதும் அறிய வொண்ணாத | பேதையேன் நெஞ்சம் | அறிவிலியான என்னுடைய நெஞ்சானது |
| அரிய ஆய அம்மானே | நரஸிம்ஹ மூர்த்தியே | மறுகல் செய்யும் | கலங்கா நின்றது. |
| இது உறுவது என்று | 'இதுதான் ஸ்வரூபாநுரூபம்' என்றறுதியிட்டு | | |
| உனக்கு ஆள் பட்டு | உனக்கு சேஷ பூதனாகி | | |

*** —*தமக்குண்டானவொரு கலக்கத்தை விண்ணப்பஞ்செய்கிறார். 'எம்பெருமானுக்கு ஆட்படுவதுதான் ஸ்வரூபாநுரூபம்' என்று துணிந்து அவனுக்கு ஆட்பட்ட பின்பு கலங்குவதற்கு நியாயமில்லை; 'அப்பெருமான் நமக்குநன்மையே செய்தருள்வான்; என்கிற துணிவோ, அல்லது 'அவன் நமக்கு எதுசெய்தாலும் அது நமக்கு ப்ராப்யமே' என்கிற துணிவோ, இரண்டத்தொன்று இருந்து தீரவேண்டும்' *செய்த்தலை யெழுநாற்றுப்போல் அவன் செய்வன செய்துகொள்ள* என்று துணிந்து கவலையற்றிருக்கவேண்டியது ப்ராப்தமாயிருக்க, அந்தத்துணிவு தமக்கு உண்டாகாமல் 'நித்ய கைங்கர்யம் நேருமோ? அல்லது ஸம்ஸாரத்தில் இன்னமும் கிடந்துழல்வதேயாகுமோ?' என்கிற கலக்கமே உண்டாகியிருப்பதாக விண்ணப்பஞ் செய்கிறார்.*

உறுவது இதுவென்று—*மேலே 'ஆட்பட்டு' என்றிருக்கையாலே இதுவென்பதற்குப் பொருள் ஆட்படுகையேயாம். 'உண்டியே உடையே உகந்தோடுவது நமக்கு உற்றதன்று; எம்பிரானுக்கு ஆட்படுகைதான் உற்றதாகும்' என்று கொண்டு—என்றபடி.*

உனக்கு ஆட்பட்டு—*அவ்வுறுதி கொண்டவளவோடு நில்லாமல் அவ்வுறுதியை அநுஷ்டான பர்யந்தமாக்கி யென்றபடி. *விழிக்குங்கண்ணிலேன் நின்கண்மற்றல்லால் வேறொருவரோ டென்மனம்பற்றாது*என்றும், *உனக்குப்பணி செய்திருக்குந்தவமுடையேன் இனிப்போயொருவன் தனக்குப் பணிந்து கடைத்தலைநிற்கை நின்சாயை யழிவுகண்டாய்* என்றும், *எற்றைக்கு மேழேழ்பிறவிக்கு முன்றன்னோடுற்றோமேயாவோம் உனக்கே நாமாட்செய்வோம்* என்றும் கொண்டிருந்து என்றபடி.*

*இப்போது இதுசொல்லுகிறது எதற்காகவென்னில்; "நின்கண்பெறுவதெதுகொலென்று பேதையேன்னெஞ்சம் மறுகல்செய்யும்" என்று மேலே சொல்லப்படுகிறவிஷயம் இவ்வுறுதிக்குத் தகுந்ததாக இல்லையே! என்பதற்காகச் சொல்லுகிறது. இவ்வுறுதி எனக்கு உண்டாகாமலிருந்தால் நான் கவலைப்படலாம்; இவ்வுறுதியைப் பெற்றுவைத்தும் நான்கவலைப்படுவது தகுதியன்றே; தகாதது நேர்ந்திருக்கிறதே! என்று கிலேசிக்கிறார்.* நின்கண் பெறுவது எதுகொல்என்று—*செய்கிறோம் செய்கிறோமென்று தலைதுலுக்கிக்கொண்டிருந்து இன்னமும் மாறிமாறிப் பலபிறப்பும் பிறக்கவைக்கிறாயோ, அல்லது என்னுற்றாமையையறிந்து விரைந்துவந்து முகங்காட்டுகிறாயோவென்று நெஞ்சு தளும்பா நின்றதாம்.*

இதுகேட்ட எம்பெருமான் 'ஆழ்வீர்! நீரிப்படி கலங்குவதற்குக் காரணமென்?' என்றுகேட்க, அக்காரணமுரைக்கும் முகத்தால் எம்பெருமானை விளிக்கிறார் வானவர் தானவர்க்கென்று மறிவதரிய அரியாயவம்மானே! என்று. பிரதிகூலர்களான தானவர்க்குப் போல அநுகூலர்களான வானவர்க்கும் அறியவொண்ணாதவனாயிருந்தாயே, என்னையும் அவர்கள்கோடியிலே யாக்குகிறாயோ வென்று கலங்காநின்றேனென்றபடி. அரியாயவம்மானே! என்று நரஸிம்ஹனையுங்கூடச் சேர்த்துச் சொன்னதனால்—ஒரு சிறுக்கனுக்கு [ப்ரஹ்லாதனுக்கு] உன்னை உள்ளபடி அறியலாயிற்றே; அவனுடைய கோடியில்தான் என்னைச் சேர்க்கிறாயோ? என்று கேட்பதாகவும் தெரிகிறது. ... ... ... (4)

அரியாயவம்மானை அமரர்பிரானை*
பெரியானைப் பிரமனைமுன்படைத்தானை*
வரிவாளரவினணைப் பள்ளிகொள்கின்ற*
கரியான்கழல்காணக் கருதும்கருத்தே. (5)

| | | | |
|---|---|---|---|
| அரி ஆய அம்மானை | விரோதி நிரஸந சீலனான ஸ்வாமியாய் | வரி வாள் அரவு இன் அணை பள்ளி கொள்கின்ற | அழகிய ஆதிசேஷனாகிற பரமபோக்ய சயனத்திலே திருக்கண் வளர்ந்தருள்பவனான |
| அமரர் பிரானை | நித்ய ஸூரிகளுக்கு அநுபாவ்யனாய் | | |
| பெரியானை | அந்த நித்ய ஸூரிகளுக்கும் பரிச்சேதிக்கவொண்ணாத பெருமையையுடையவனாய் | கரியான் | கரிய பிரானுடைய |
| முன் பிரமனை படைத்தானை | முன்னம் நான்முகனை (உந்திக் கமலத்தில்) தோற்றுவித்தவனாய் | கழல் காண | திருவடிகளைக் காண்பதற்கு |
| | | கருத்து கருதும் | என்னுள்ளம் கருதாநின்றது. |

***—ஆழ்வார்தாம் தம்முடைய கலக்கத்தைக் கீழ்ப்பாட்டில் வெளியிட்டவாறே எம்பெருமான் 'ஆழ்வீர்! நாம் சிலர்க்கு அருமைப்பட்டிருக்கிறோமென்பது கிடக்கட்டும்; பத்துடையடியவர்க்கு எளியவன் என்பதை நீர் ஆதியிலேயே அறிந்துபேசினவரல்லீரோ? நான் பிறர்க்கு அரியனாயிருப்பது கொண்டு உமக்கென்ன வருத்தம்? உமக்கு எளியனே காணும்; உமக்கு வேண்டுவதென்ன? அதைச்சொல்லும்' என்றருளிச்செய்ய காண்கைதான் வேணுமென்கிறார்.

அரியாய — ஹரியாய என்றபடி. *हरिर्हरति पापानि दुष्टचित्तैरपि स्मृतः* *ஹரிர் ஹரதி பாபாநி துஷ்டசித்தைரபி ஸ்ம்ருத:* என்கிறபடியே நினைத்த வளவிலே ஸகல பாபங்களையும் ஹரிக்கவல்லவனை. அன்றியே, நரஹரியாய்த் தோன்றிச்சிறுக்கனுக்கு அருள் செய்தவனை. அமரர் பிரானை — நித்யஸூரிகளுக்குத் தன்னைக் காட்டிக் கொடுத்து அநுபவிப்பிக்கும் உபகாரகனை. பெரியானை — அந்த நித்யஸூரிகளுக்கு மெல்லைகாணவொண்ணாத பெருமை படைத்தவன். பிரமனை முன் படைத்தானை — நித்யவிபூதிநாதனாயிருக்கச் செய்தேயும் லீலாவிபூதிக்கும் விதைவிதைத்தவன். வரிவாளரவினணைப் பள்ளி கொள்கின்ற - லீலா விபூதியைப் படைத்தது மாத்திரமன்றிக்கே தத்ரக்ஷணத்திலும் தீக்ஷிதனாய் அரவணைமேல் உறங்குவான்போல் யோகுசெய்த பெருமானாயிருப்பவன் கரியான்— *एष नारायणः श्रीमान् क्षीरार्णवनिकेतनः। नागपर्यङ्कमुत्सृज्य ह्यागतो मधुरां पुरीम्॥ *ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதந:, நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்* என்கிறபடியே அவ்வரவணையை விட்டு வடமதுரையிலே வந்து *கண்ணனென்னுங் கருந்தெய்வமாய்ப் பிறந்தவன். அன்றியே, வெளுத்த நிறத்தையுடைய திருவனந்தாழ்வான் மேலே ஒரு காளமேகம் சாய்ந்தாற்போன்று பரபாகசோபை விளங்கக் கண்வளர்ந்தருளுமவன் என்னவுமாம். ஆக இப்படிப்பட்ட எம்பெருமானுடைய கழலைக் காணக்கருதுங் கருத்தே. படுக்கைக்-

குப் பரபாகமான வடிவையும், வடிவுக்குப் பரபாகமான திருவடிகளையுங் காண்கையி லுண்டான விருப்பத்தை வெளியிட்டாராயிற்று. ... ... ... (5)

கருத்தே உன்னைக்காணக்கருதி*என்னெஞ்சத்
திருத்தாகவிருத்தினேன் தேவர்கட்கெல்லாம்
விருத்தா*விளங்குஞ்சுடர்ச்சோதி உயரத்
தொருத்தா*உன்னையுள்ளு மென்னுள்ளமுகந்தே. (6)

| | | | |
|---|---|---|---|
| கருத்தே! | என் கருத்தாக வுள்ள பெருமானே! | தேவர்கட்கு எல்லாம் விருத்தா | உயர்ந்தவர்களுக் கெல்லாம் உயர்ந்தவனே! |
| உன்னை காண கருதி | உன்னைக் கண்டநுபவிக்க வேணுமென்று மநோரதங் கொண்டு | விளங்கும் சுடர் சோதி உயரத்து | அளவு கடந்த தேஜோமயமான உயர்ந்த நிலத்திலே [— பரம பதத்திலே] |
| என் நெஞ்சத்து | எனது நெஞ்சுக்குள்ளே | ஒருத்தா | அத்விதீயனாய் எழுந்தருளி யிருப்பவனே! |
| இருத்து ஆக | எழுந்திராத ஸ்திரப்ரதிஷ்டையாக | என் உள்ளம் | எனது நெஞ்சானது |
| இருத்தினேன் | இருத்திக் கொண்டேன்; | உன்னை உகந்து உள்ளும் | உன்னை ப்ரேமத்தோடு சிந்தனை செய்யா நின்றது. |

* * *—கீழ் ஐந்து பாட்டுக்களாலும் ஆழ்வார் வெளியிட்ட ஆர்த்தியைக்கண்ட எம்பெருமான் ஒருவாறு இவருடைய ஆர்த்தியைத் தீர்ப்போமென்று திருவுள்ளம் பற்றி ஆழ்வாருடைய திருவுள்ளத்திலே வந்து புகுந்தான்; அவ்வளவிலே தம்முடைய நெஞ்சு உகந்து அநுபவிக்கிறபடியைப் பேசுகிறாரிதில். எம்பெருமானைக் கருத்தே! என்று விளிக்கிறார்; நான் தளராதபடி எனக்கு வலிமையையூட்டிக் கொண்டு நடத்திக்கொண்டு போருமவனே! என்றபடி. "எனக்கு மிடுக்கானவனே!" என்பது வியாக்கியானம். உன்னைக் காணக்கருதி என்றது— காணவாசைப்பட்டவளவிலே யென்றபடி. அப்போதே நீ என்னெஞ்சிலே வந்து சேர்ந்த படியாலே யென்று கூட்டிக் கொள்வது. என்னெஞ்சத்து இருத்தாகவிருத்தினேன்—இனி யொரு காலும் போகாதபடி ஸ்தாவர ப்ரதிஷ்டையாக என்னெஞ்சிலே யிருத்தினேன்.

நீ ஸாமான்யமாக என்னெஞ்சிலே வந்திருக்கத் தக்கவனல்லையே, நீ பராத்பர னல்லையோ வென்கிறார் இரண்டு விளிகளால்.

தேவர்கட்கெல்லாம் விருத்தா— 'இவர்களுக்குமேல் உயர்ந்தவர்களில்லை' என்னும் படியாக வுயர்ந்தவர்களுக்கெல்லாம் மேம்பட்டவனே!. (வ்ருத்த:) என்கிற வடசொல் விருத்த னென்றாகி அது விளியுருபு ஏற்றுக் கிடக்கிறது.

விளங்குஞ்சுடர்ச்சோதியுயரத்து ஒருத்தா—பரமபதமானது "சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதி" என்னும்படியான விடமாகையாலே விளங்குஞ் சுடர்ச்சோதியென்றே அத்திருநாட்டை நிர்தேசிக்கிறபடி. உயரத்து—உயர்ந்த நிலத்திலே யென்கை. ஒருத்தன்— அத்விதீயன்; இணையில்லாதவன்.

என்னுள்ளம் உன்னை உகந்து உள்ளும்—நீ பரமபதத்திலே யெழுந்தருளியிருந்து விண்ணுட்டவர் மூதுவர்களை அநுபவிப்பிக்குமாபோலே என்னை யநுபவிப்பிக்கையாலே என்னெஞ்சு மகிழ்ச்சியின் எல்லையிலே நிற்கின்றது என்றபடி. ... ... (6)

உகந்தேயுன்னை உள்ளுமென்னுள்ளத்து*
அகம்பாலகந்தானமர்ந்தே இடங்கொண்டவமலா*
மிகுந்தானவன்மார்வகலம் இருகூறு
நகந்தாய்* நரசிங்கமதாயவுருவே. (7)

| | |
|---|---|
| அகம் தான் அமர்ந்து | உள்ளே பொருந்தி |
| இடம் கொண்ட அமலா | இடங்கொண்டிருக்கின்ற அமலனே! |
| மிகும் தானவன் மார்வு அகலம் இரு கூறு ஆ | மிடுக்குமிக்க இரணியாசுரனுடைய அகன்ற மார்வை இருபிளவாக்கவல்ல |
| நகந்தாய் | நகத்தை யுடையவனே! |
| நரசிங்கம் அது ஆய உருவே | நரசிங்க மூர்த்தியானவனே! |
| என் உள்ளத்து அகம்பால் | எனது ஹ்ருதயத்தின் மர்ம ஸ்தானமானது |
| உன்னை உகந்தே உள்ளும் | உன்னைப் பரமப்ரீதியோடு அநுபவிக்கின்றது. |

* * *—ஒருகால் தூணிலே வந்து தோன்றி ப்ரஹ்லாதாழ்வானுடைய ஆர்த்தியைத் தீர்த்தாப்போலே தம்முடைய ஆர்த்தியைத் தீர்த்தருளினதாக நினைத்து ஏத்துகிறார். "என்னுள்ளம் உன்னை உகந்தேயுள்ளும்" என்று கீழ்ப்பாட்டிற் பேசினவதுவே இப்பாட்டிலும் முக்கியமாகப் பேசப்படுகிறது. அநுபவசாஸ்த்ரத்தில் புநருக்தி தோஷம் சங்கிக்க வொண்ணாதே. ஆனந்தாநுபவத்தின் உறைப்பு இருக்கிறபடி. இங்கு ஈடு—'பிரிந்து க்லேசுத் தோடே தலைக்கட்டு முகப்பன்றிக்கே ஏகரூபமாக வுன்னை யநுபவிக்கும்படி" என்று. இதற்குப் பிறகு பிரிவாற்றாமை யுண்டாகிற தில்லையோவென்று சங்கிக்கலாகாது. இப்போதைய ஆனந்தம் எதிர்கால வருத்தத்தைக் கணிசிக்கமாட்டாதன்றே. நெஞ்சில் அவகாசமுள்ள விடமெங்கும் தானே யாம்படி. நிறைந்த ஒளியுருவனே!' உன்னை இல்லை செய்தது மாத்திரமன்றிக்கே உன் உயிர் நிலையிலே [ப்ரஹ்லாதனளவிலே] நலிவுசெய்த செருக்க னுடைய அகன்ற மார்வானது இரண்டு கூறும்படி பண்ணவல்ல திருவுகிர்களையுடையவனே!— என்று சொன்ன விதனால், அடியார் ப்ரதிஜ்ஞை செய்த அந்த க்ஷணத்திலேயே வந்து தோற்றினாப்போலே வந்து தோற்றி என்னெஞ்சு நிறையப் புகுந்து என்னை யநுபவிப்பித் தருளினாய் என்றதாயிற்று.

உகந்தே யுன்னையுள்ளுமென்று வினைமுற்றாக்கி விடாமல், உள்ளும் என்பதை என் என்பதிலே விசேஷணமாக அந்வயித்து, உகந்தே உன்னை உள்ளுகின்ற [சிந்திக்கின்ற] என்னுடைய அகம்பாலகந்தான் அமர்ந்தே யிடங்கொண்டவமலா! என்று முன்னடிக ளிரண்டையுஞ் சேர்த்து விளியாகக் கொள்வதும் பொருந்தும். அப்போது பாட்டு முழுவதும் விளியாக நிற்கும். வினைமுற்று கீழ்ப்பாட்டிலிருந்து கொண்டு கூட்டத்தக்கது.

ஈற்றடியின் முதலில், நகத்தாய்! என்றிருக்க வேண்டுவது எதுகையின்பம் நோக்கி 'நகந்தாய்' என்று கிடப்பதாக நம்பிள்ளை திருவுள்ளம். "வல்லொற்றை மெல்லொற்றாக்கிக் கிடக்கிறது" என்பது வியாக்கியானம். பன்னீராயிரவுரைகாரர், "நகம்—நகத்தை, தாய்—தாவும்படி பண்ணின" என்றுரைத்தனர். ... ... ... (7)

உருவாகிய ஆறுசமயங்கட்கெல்லாம்*
பொருவாகி நின்றானவன் எல்லாப்பொருட்கும்*
அருவாகியவாதியைத் தேவர்கட்கெல்லாம்*
கருவாகியகண்ணனைக் கண்டுகொண்டேனே. (8)

| | |
|---|---|
| உரு ஆகிய | மேலெழுந்த பார்வையில் ஒன்று போலே தோற்றுகிற |
| ஆறு சமயங்கட்கு எல்லாம் | புறமதங்களான ஆறு சமயங்களுக்கும் |
| பொரு ஆகி நின்றான் அவன் | தடையாகி நிற்பவனும் |
| எல்லா பொருட்கும் அரு ஆகிய ஆதியை | ஸகல பதார்த்தங்களுக்கும் உயிர் நிலையாய்க் கொண்டு முதல்வனும் |
| தேவர்கட்கு எல்லாம் கரு ஆகிய | எல்லாத் தேவர்களுக்கும் காரண பூதனுமான |
| கண்ணனை | கண்ணபிரானை |
| கண்டு கொண்டேனே | கண்டு அநுபவிக்கப் பெற்றேன். |

***—கீழிரண்டு பாட்டுக்களிலுண்டான களிப்பே இப்பாட்டிலும் தொடர்ந்து செல்லுகின்றது. ஆறுசமயங்கட்கேல்லாம் பொருவாகிநின்ற ளென்றதின் கருத்தை ஆறுயிரப்படியில் விவரித்தருளுகிறார்—"வேதபாஹ்யமான ஷட்ஸமயங்களில் நான் புகாதபடி பரிஹரித்து" என்று. அந்த பாஹ்யமதங்களினால் தன்னை இல்லைசெய்ய வொண்ணாதபடி நிற்பவன் என்பது நம்பிள்ளைகாட்டின கருத்து. பாஹ்யஸமயங்களினால் அசைக்க வொண்ணாதவ னென்றதாயிற்று. சார்வாக, பௌத்த, க்ஷபணக, வைசேஷிக, ஸாங்க்ய, பாசுபதங்களென்னுமிவை அறுசமயங்களெனப்படும். *அறுசமயச் செடியதனையடியறுத்தான் வாழியே* என்றதுங்காண்க. "உருவாகிய" என்ற விசேஷணத்தின் கருத்தாவது=ஒரு மதமென்று சொல்லக்கூடிய நிலையில்லாதிருக்கச் செய்தேயும் மேலெழுந்த பார்வையில் ஒரு மதம்போலே தோன்ற நிற்கிறவென்பதாம். இங்கு ஈட்டுஸ்ரீஸூக்தி="ஆபாதப்ரதீதியில் ஒன்றுபோலேயிருக்க, சிலவற்றைவிதிப்பது சிலவற்றை நிஷேதிப்பது, நிஷித்தபரிஹாரத்தைச் சொல்லுவதாய்க்கொண்டு உபதேசிப்பாரும் கேட்பாருமாய்ப் போருகிற பாஹ்ய ஸமயங்களெல்லாவற்றுலும்" என்று.

பொருவாகிநின்றான் = பொருவென்று தடைக்குப்பெயர்; அவற்றுக்கு ப்ரதிபடனென்றபடி. அவற்றால் தனக்கு ஒரு ஹானியும் நேரப்பெறாதவனென்கை. அருவாகிய—ரூபியான பொருளை உருவென்றும் அரூபியான பொருளை அருவென்றும் சொல்லக்கடவது. கண்ணுக்குப் புலப்படாததுவே அருவெனப்படும். தேஹம் புலப்படும் பொருளாய், ஆத்மா புலப்படாத பொருளாயிருக்கையாலே அருவென்று ஆத்மாவைச் சொன்னதாக முடிந்தது. ஸகலபதார்த்தங்களுக்கும் அந்தராத்மாவா யிருப்பவனென்றதாயிற்று. இங்கு ஆதியை என்றது—உள்ளேயிருந்து நியாமகனாயிருப்பதனாலான முதன்மையைப் பற்றவென்க. கருவாகிய—கருவென்று கர்ப்பம். காரணபூதனென்றபடி. காரணத்வத்தைச் சொன்னவுடனே கண்ணனை யென்கையாலே, இப்படி தான் ஸர்வகாரணபூதனாயிருக்கச் செய்தேயும் கார்யவஸ்துக்களிலே யொன்றுக்குத் தான் கார்யபூதனாயிருப்பவனென்கிற ஆச்சரியம் காட்டப்பட்டதாகும். இது அவனுடைய ஸங்கல்பவிசேஷப்ரயுக்தம். ஆக இப்படிப்பட்ட எம்பெருமானைக் கண்டு கொண்டேன்.

ஆழ்வார் க்ருஷ்ணாவதாரத்திற்குப் பிற்பட்டவராயிருக்க "கண்ணனைக் கண்டு கொண்டேனே" என்னக்கூடுமோ வென்கிற சங்கைக்கு நம்பிள்ளை பரிஹாரமருளிச்செய்கிறார் காண்மின்="ப்ரேமார்த்ர சித்தர்க்கு என்றுங் காணலாம்; அவதாரஸமகாலத்திலும் காணவொண்ணாது சிசுபாலாதிகளுக்கு" என்று. ... ... ... (8)

கண்டுகொண்டு என்கண்ணிணையாரக்களித்து*
பண்டைவினையாயின பற்றோடறுத்து*
தொண்டர்க்கமுதுண்ணச்சொல்மாலைகள் சொன்னேன்*
அண்டத்தமரர்பெருமான் அடியேனே. (9)

| | | | |
|---|---|---|---|
| என் கண் இணை ஆர கண்டு கொண்டு | என் கண்களிரண்டும் வயிறு நிறையும்படி கண்டு கொண்டு | அண்டத்து அமரர் பெருமான் அடியேன் | நித்யஸூரி நாதனுக்கு அடியேனான நான் |
| களித்து | ஆனந்தித்து | | |
| பண்டை வினை ஆயின | அநாதி விரோதிகளான எல்லாவற்றையும் | தொண்டர்க்கு அமுது உண்ண | பக்தாம்ருதமாக |
| பற்றோடு அறுத்து | வாஸனையோடே போக்கி | சொல் மாலைகள் சொன்னேன் | இத்திருவாய்மொழியை விண்ணப்பஞ் செய்யப்பெற்றேன். |

*** — தாம் அநுபவித்து ஆனந்திப்பதிற்காட்டிலும் பிறரையும் அநுபவிப்பித்து ஆனந்திப்பது ஒப்புயர்வற்ற ஆனந்தமாதலால் அவ்வானந்தமும் தமக்கு ப்ராப்தமானபடியை இப்பாட்டிலருளிச்செய்கிறார். "தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்ற மூன்றாமடி இப்பாட்டுக்கு உயிராயிருக்கும். தாம் கண்ணிணையாரக் கண்டுகொண்டு களித்ததும், பண்டைவினைகளையெல்லாம் பற்றோடறுத்ததும் ஒருபெரிய ஆனந்தமன்று. திருவாய்மொழி பாடினமுகத்தாலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கெல்லாம் உபகாரகராகப் பெற்றதுவன்றோ பிறர்க்குப் பெறவரிதான ஆனந்தம்.

இவ்வுலகில் கவிபாடினவர்கள் மற்றும்பலருமுண்டாகிலும், இப்படி "தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்று பெருங்களிச்சியாகப் பேசினவர் பிறாருமிலர். தம்முடைய திருவாய்மொழி திருப்புளியாழ்வாரடியிலே சுவறிப்போகாமல், காருள்ளளவும் கடல்நீருள்ளளவும் வேதமுள்ளளவும் வேதகீதனுள்ளளவும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அமுதமாய்ப் பரமபோக்யமாய் விளங்கப்போகிற தென்பதை ஆழ்வார்கண்டறிந்து அருளிச்செய்தது அதிசயிக்கத்தக்கது. திருவாய்மொழிக்குத் தனியனிடத்தொடங்கின ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங்கும்போதே *பக்தாம்ருதம்* என்றருளிச்செய்தது இந்தப் பாசுரத்தை யுட்கொண்டேயாம். முதலிலேயே (1–5–11) *பாலேய்தமிழரிசைகாரர் பத்தர் பரவுமாயிரம்* என்று அருளிச்செய்திருந்தாலும் *தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்* என்கிற இப்பாசுரம் இணையற்றது.

கீழ்ஏழாம்பத்தில்* என்றைக்குமென்னை யென்கிறபதிகத்தில், இத்திருவாய்மொழி பாடுகையில் தமக்கு அந்வயமில்லையென்றும் எம்பெருமானே *தூமுதல்பத்தர்க்குத்தான் தன்னைச்சொன்னதென்றும் அருளிச்செய்தார்; மேலே பத்தாம்பத்திலும் *பண்ணார்பாடலின் கவிகள்யானாய்த்தன்னைத்தான் பாடி* என்று அதனையே வற்புறுத்துகிறார்; இவற்றினிடையே "சொன்மாலைகள் சொன்னேன்" என்று உண்மையை வெளியிட்டுரைத்தவிது நம்போல்வாருடைய பரமபாக்யமேயன்றோ. (9)

அடியானிவனென்று எனக்காரருள்செய்யும்
நெடியானை *நிறைபுகழஞ் சிறைப்புள்ளின்
கொடியானை *குன்றாமல் உலகமளந்த
அடியானை *அடைந்தடியேனுய்ந்தவாறே. (10)

| | | | |
|---|---|---|---|
| இவன் அடியான் என்று | 'இச்சடகோபன் நமக்கு அடிமைப்பட்டவன்' என்று கொண்டு | குன்றாமல் உலகம் அளந்த அடியானை | ஒன்று விடாமல் உலகம் முழுவதையு மளந்து கொண்ட திருவடியை யுடையனாயிருக்கு மெம்பெருமானை |
| எனக்கு ஆர் அருள் செய்யும நெடியானை | என் விஷயத்தில் பேரருள் புரியும் ஸர்வேச்வரனாய் | | |
| நிறை புகழ் அம் சிறை புள்ளின கொடியானை | நிறைந்த புகழோடுகூடி அழகிய சிறகையுடைய கருடனைக் கொடியாகவுடையனாய் | அடியேன் அடைந்து உய்ந்த ஆறே | அடியேன் கிட்டி உஜ்ஜீவிக்கப் பெற்றவிதம் என்னே! |

***—தாம் உஜ்ஜீவிக்கப்பெற்ற படியைப் பேரானந்தம் பொலியப் பேசுகிறார். எம்பெருமான் ஆழ்வார் பக்கலிலே செய்த பரமக்ருபை நிர்ஹேதுகமென்று முதலடியில் காட்டப்படுகிறது. "அடியானிவன் என்று" என்றதனால், உண்மையில் தாம் அடியவரல்லரென்பதும், அடியவரென்று அவன் ஆரோபித்துக்கொண்டானென்பதும் தெரிவிக்கப்பட்டதாகிறது. 'ஆழ்வார் பக்கலிலே ஏன் அத்தனையருள் செய்தாய்?' என்று

யாரேனும் கேட்டால், 'அவர் எனக்கு அடியவராயிருந்தபடியினாலே' என்று அவர்களுக்கு ஒரு மறுமாற்றஞ் சொல்வதற்காக அடியானிவனென்று ஏறிட்டுக்கொண்டு அருள்செய்தா னென்கிறார். ஸ்தோத்ர ரத்னத்தில் "வாயஸஸ்ய ப்ரணத இதி தயாலு:" என்றவிடத்து (இதி) என்றதை ஈண்டு ஒப்புநோக்குக.

எனக்காரருள் செய்யும் நெடியானை = நெடியான் செய்கிறவருள் எப்படியிருக்கு மென் பதை நம்பிள்ளை காட்டுகிறார் காண்மின்—"கொள்ளுகிற என்னளவன்றிக்கே தன்னளவிலே உபகரித்த ஸர்வேச்வரனை" என்று. இது, சொல் நரம்பைப் பிடித்து ஆழ்ந்து அருளிச் செய்த சீரிய பொருள். உலகிலுள்ள மஹா தனிகர்கள் தானம் பண்ணுவதுண்டே; அவ்யப தேச்யர்கள் வந்து இரந்தால் அவர்களுக்கு அற்பம் கொடுப்பதும், சீரியர் வந்து கேட்டால் அவர்களுக்குச் சிறப்பாகக் கொடுப்பது மியல்வு. எம்பெருமானோவென்னில், கொள்ளுகிற வர்களின் சிறுமை பெருமைகளில் கண்வையாதே தன் பெருமைக்குத் தக்கவாறு கொடுப்ப வனும்; இப்பொருள் "அருள் செய்யும் நெடியானை" என்கிற சொற்சேர்க்கையாற்றலால் கிடைக்கும்.

இப்படியருள் செய்பவனென்பதற்கு இரண்டு உதாஹரணங்கள் காட்டுவார் போன்று இரண்டு விசேஷணங்களிடுகிறார்; நிறைபுகழஞ்சிறைப் புள்ளின் கோடியானை— *दासस्सखा वाहनमासनं ध्वजो यस्ते वितानं व्यजनं त्रयीमय:* தாஸஸ் ஸகா வாஹநமாஸநம் த்வஜோ யஸ்தே விதாநம் வ்யஜநம் த்ரயீமய: * என்று ஆளவந்தாரருளிச் செய்தபடியே, பெரிய திருவடியை அடியவனாகவும் நண்பனாகவும் ஊர்தியாகவும் ஆஸனமாகவும் கொடியாகவும் விதானமாகவும் விசிறியாகவும் கொள்ளுகைக்குரிய அருள்செய்தவனென்க: இதுவாயிற்று அவனுக்கு நிறை புகழ். குன்றாமல் உலகமளந்த வடியானை—உறங்குகிற ப்ரஜையைத் தானறிந்த ஸம்பந்தமே காரணமாகத் தாய் அணைத்துக்கொண்டு கிடந்து முலைகொடுத்துக் காக்குமாபோலே செய்த செயலன்றோவிது. 'எம்பெருமான் திருவடி நம் தலைக்கு அணி யாகவேணும்' என்கிற ப்ரார்த்தனையும், 'அது நமக்கு ப்ராப்தமாகிறது' என்கிற எண்ணமு மில்லாதார்க்கன்றோ இப் பேரருள் செய்தது. ஆக இப்படி எதிர்த்தலையைப் பாராமல் தன்னையே பார்த்து அருள்புரியும் ஸர்வேச்வரனை நான் அடிபணிந்து உஜ்ஜீவித்த வகை மற்றொருவர்க்கு நிலமோவென்று சொல்லித் தலைக்காட்டினாராயிற்று. ... (10)

ஆறுமதயானை அடர்த்தவன்தன்னை*
சேறார்வயல் தென்குருகூர்ச்சடகோபன்*
நூறேசொன்ன ஓராயிரத்துளிப்பத்தும்*
ஏறேதரும் வானவர்தமின்னுயிர்க்கே. (11)

| | | | |
|---|---|---|---|
| ஆறு மதம் யானை | ஒரு நாளும் மாறாத மதத்தை யுடைய குவலயாபீட யானையை | ஓர் ஆயிரத்துள் இப்பத்தும் | ஆயிரத்தினுள்ளே இப்பதிகமானது |
| அடர்த்தவன் தன்னை | பங்கப்படுத்தின பெருமானைக் குறித்து, | வானவர் தம் இன் உயிர்க்கு ஏறு | நித்ய ஸூரிகளின் இன்னுயிர்த் தலைவனான எம்பெருமானை |
| சேறு ஆர் வயல் தென் குருகூர் சடகோபன் | சேறு மிக்க வயலை யுடைத்தான தென் குருகூர்க்குத் தலைவரான ஆழ்வார் | தரும் | கொடுக்கும். [பகவத் ப்ராப்தியைப் பண்ணித்தருமென்றபடி]. |
| நூறே சொன்ன | நூறு நூறாக வருளிச்செய்த | | |

* * *—இப்பதிகம் வானவர்தமின்னுயிர்க்கு ஏறேதருமென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார், இதற்குப் பல படியாகப் பொருளுரைப்பர்; ஏறு என்று இடபத்திற்கு வாசகமாய் 'புருஷர்ஷப:, புருஷபுங்கவ:' என்னப்படுகிற ஸர்வேச்வரனைச் சொல்லிற்றாகி, அவனை இப் பதிகம் தரும்—அதாவது * ब्रह्मविदाप्नोति परम् — ப்ரஹ்மவிதாப்நோதி

பரம் * என்று உபநிஷத்து ஓதிய பலனைத் தருமென்றபடி. அன்றியே, ஏறு என்று புண் பாடு; நித்யஸூரிகளின் ஹ்ருதயத்தைத் தன்னுடைய ஒப்பற்ற போக்யதையாலே புண் படுத்தும்; அவர்களை (विद्ध) வித்த ராக்குமென்றவாறு. அன்றியே அவர்களினுள்ளத்திலே ஏறி நிற்கு மென்னவுமாம்.

ஆறுமதயானையடர்த்தவனென்று இங்குச் சொன்னது—அதுபோலே தமக்கு ப்ரதிபந்தக நிவ்ருத்தியைப் பண்ணிக்கொடுத்தமை சொன்னவாறு. சேறார்வயல் என்றது—எப்போதும் உழுது நடுவதாகிற வயலின் வளத்தைச் சொன்னபடி. அவ்வூர் ஸம்ஸாரிகளுக்கு அன்னமளிக்குமாபோலே அவ்வூர்த் தலைவரான ஆழ்வார் முமுக்ஷுக்களுக்கு அன்னமளிக்கிறபடி.

ஆசார்ய ஹ்ருதயத்தில் (215) "நூறே சொன்ன பத்து நூறு ஓராயிர மென்றதும் ஸாபிப்ராயம்" என்றது இங்கே அநுஸந்தேயம். ஒவ்வொரு பாட்டுக்கும் ஒரு கருத்திருப்பதுபோலவும், ஒவ்வொரு பதிகத்திற்குமொரு கருத்திருப்பதுபோலவும், ஒவ்வொரு நூறுக்கும் ஒவ்வொரு கருத்துண்டாகையாலே "நூறே சொன்ன" என்கிறது. முதல் நூறுக்குப் பரத்வத்திலே நோக்கு; இரண்டாவது நூறுக்குக் காரணத்வத்திலே நோக்கு; மூன்றாவது நூறுக்கு வ்யாபகத்வத்திலே நோக்கு; நான்காவது நூறுக்கு நியந்த்ருத்வத்திலே நோக்கு; ஐந்தாவது நூறுக்குக் காருணிகத்வத்திலே நோக்கு; ஆறாவது நூறுக்கு சரண்யத்வத்திலே நோக்கு; ஏழாவது நூறுக்கு சக்தத்வத்திலே நோக்கு; எட்டாவது நூறுக்கு ஸத்யகாமத்வத்திலே நோக்கு; ஒன்பதாவது நூறுக்கு ஆபத்ஸகத்வத்திலே நோக்கு; பத்தாம் பத்துக்கு ஆர்த்திஹரத்வத்திலேநோக்கு—என்றிப்படி நிதானமறிந்து வகுப்பர்கள் நம் ஆசாரியர்கள். ... ... ... 11

**திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையுரையில்**

ஒன்பதாம்பத்து நான்காந் திருவாய்மொழி

முற்றிற்று.

நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஐந்தாந் திருவாய்மொழி—இன்னுயிர்ச் சேவலும்.

—(o)—

உரையவதாரிகை:—கீழ் * பண்டை நாளாலே * என்கிற பதிகத்திலே ஆழ்வார்க்கு ஒரு கிலேசம் நிகழ்ந்தது அதை ஒருவாறு ஸமாதானப்படுத்தப் புகுந்த ஸர்வேச்வரன் 'ஆழ்வீர்! நான் நாராயணனன்றோ; உமக்கு எல்லா வுறவின் காரியமும் குறையறச் செய்து தருவேன்' என்று சொல்ல, அவனுடைய சீலத்தில் கால் தாழ்ந்து ஒரு படியாய்ச் சென்றது மூன்றும் பதிகம். *தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொல்லும்படி உம்மை யாக்கினேனே, இது உமக்கு ஸாமான்யமாகக் கிடைக்கக்கூடியபேறோ? என்று எம்பெருமான் இதனை நினைப்பூட்ட அதனால் ஒருவாறு களிப்படைந்து தரித்து நின்றார் கீழ்ப் பதிகத்திலே.

அங்கு "தேவர்கட்கெல்லாங் கருவாகிய கண்ணனைக் கண்டுகொண்டேனே" என்றருளிச்செய்தவர்க்கு பாஹ்யஸம்ச்லேஷத்திலே அபேக்ஷை பிறந்தது. "இவர்க்கு இன்னமும் விடாயைப் பிறப்பித்து முகங் காட்டவேணும்" என்று எம்பெருமானிருக்கையாலே அவன் தாமதிக்கிறான். ஆழ்வார்க்கோ தளர்ச்சி மிகுகிறது. தளர்ந்தவர்கள் தரிப்பதற்குப் பல வழிகளுண்டே; லௌகிக பதார்த்தங்களிலே நெஞ்சைச்செல்லவிட்டு அந்த அந்ய பரதையாலே ஒருவாறு தரிப்போம் என்றும், அவனோடு போலியான பொருள்களைக் கண்டாகிலும் தரிப்போமென்றும் நினைத்து லௌகிக பதார்த்தங்களிலே கண்வைத்தார். ஒருவாறு தரிப்பதற்குச் செய்த அச் செயல் ஆச்வாஸஹேதுவாகாமல் ஸ்மாரகமாய் பாதிக்கத் தொடங்கிற்று. உலகில் எந்தப் பொருளைக் கண்டாலும், அவனுயிருக்கிற படியை நினைத்தோ, அவனோடு ஸம்பந்தம் பெறிருக்கிறபடியை நினைத்தோ, அவனுக்குப் போலியாயிருக்கிறபடியை நினைத்தோ தளருமவரன்றோ ஆழ்வார். கீழ் நாலாம்பத்தில் * மண்ணை யிருந்து துழாவி * என்னும் பதிகத்திலே பட்டபாடு தெரியுமே. ஆக, லௌகிக பதார்த்தங்கள், அவனை நினைப்பூட்டி நலிய அவற்றால் நோவுபடுகிற படியை அந்யாபதேசத்தாலே யருளிச்செய்வது இப்பதிகம்.

எம்பெருமானோடே கலந்து பிரிந்த வொரு பிராட்டி, தன்னாற்றாமையாலே அவனோடு போலியான பதார்த்தங்களைக் கண்டாகிலும் தரிப்போமென்று கொண்டு ஒரு பூஞ்சோலைக்குப் புறப்பட, அங்குண்டான குயில் மயில் முதலானவை அவனுடைய பேச்சையும் வடிவையும் நினைப்பூட்டி நலிய, 'இவை தாமாக நலிகின்றனவல்ல; நம்மை முடிக்கவேணுமென்று பார்த்த எம்பெருமானாலே ஏவப்பட்டு நலிகின்றன வித்தனை' என்றெண்ணி, அக்குயில் முதலானவற்றை நோக்கி 'உங்களுக்கு என்னை நலிய நினைவாகில் இவ்வளவு பாரிப்பு வேணுமோ? என்னுயிரை நானே கொடுக்கச் சித்தமாயிருக்கின்றேனே' என்று சொல்லியும், அவனுடைய திருக்குணங்களை ஒருவாறு நினைத்துத் தரித்தும் போருகிறது இத்திருவாய்மொழி. ... ... ... *

இன்னுயிர்ச்சேவலும் நீருங்கூவிக்கொண்டிங்கேத்தனை*
என்னுயிர்நோவமிழற்றேன்மின் குயிற்பேடைகாள்*
என்னுயிர்க்கண்ணபிரானை நீர்வரக்கூவகிலீர்*
என்னுயிர்கூவிக்கொடுப்பார்க்கும் இத்தனைவேண்டுமோ. (1)

| | | | |
|---|---|---|---|
| குயில் பேடைகாள் | பெண் குயில்களே! | என் உயிர் கண்ணபிரானை வர | எனக்கு உயிரான கண்ணபிரான் இங்கு வந்துசேரும்படி |
| இன் உயிர் சேவலும் நீரும் | உங்களுடைய உயிர் போன்ற சேவல்களும் நீங்களும் | நீர் கூவகிலீர் | நீங்கள் அழைக்க மாட்டீர்கள்; |
| கூவிக் கொண்டு | (கலவிக்காகப்) பரஸ்பரம் கூவிக் கொண்டு | என் உயிர் கூவி கொடுப்பார்க்கு | என்னுயிரை வாங்கி அவன் கையிலே கொடுக்க நினைத்திருக்கு முங்களுக்கு |
| இங்கு | என் கண் வட்டத்திலே | | |
| எத்தனை | மிகவும் | | |
| என் உயிர் நோவ மிழற்றேல்மின் | என் பிராணன் நோவுபடும்படி தொனியைச் செய்யவேண்டா; | இத்தனையும் வேண்டுமோ | இவ்வளவு பாரிப்புத்தான் வேணுமோ? |

***—சில குயிற் பேடைகளை நோக்கி நீங்கள் என்னை முடிக்க வேண்டினால் அதற்கு இத்தனை பாரிப்பு வேணுமோ? *கோழி வெண் முட்டைக்கு என் செய்வதெந்தாய் குறுந்தடி* [கோழி முட்டையை யடிப்பதற்குச் சிறு தடிதான் வேணுமோ?] என்றாப்போலே, அபலையாய் அற்றுக்கிடக்கிற வென்னை முடிக்கைக்கு இவ்வளவு ஸம்ப்ரமங்கள் வேண்டியிருந்ததோவுங்களுக்கு? என்கிறாள். இன்னுயிர்ச் சேவலும் நீரும்=குயிற் பேடைகளே! உங்களுக்கு நற்சீவனான சேவலும், சேவலுக்கு நற்சீவனான நீங்களுமாய்க் கூடியிருந்து. இப்படி சேர்த்தியைக் காட்டி நலிகிறதுக்கு மேலே; கூவிக்கொண்டு—பேச்சாலும் நலிய வேண்டுமோ?

விரஹிகளுக்குக் கூடியிருப்பாரைக் காண்பதும் அஸஹ்யம்; அவர்கள் பரஸ்பரம் பேசும் பேச்சுக்களைக் கேட்பதும் அஸஹ்யம். இவ்விரண்டையுங் காட்டுகிறது இங்கு.

இங்கு எத்தனை என்னுயிர் நோவ மிழற்றேல்மின் = ஏற்கெனவே அற்றுக்கிடக்கிற என்னுயிர் இன்னமும் படுகொலைப்படும்படி உங்களுடைய கூக்குரலை வெளிப்படுத்த வேண்டா வென்கிறாள். பிரிவிலே தளர்ந்திருக்கிற என்னுயிர் சிதிலமாம்படி மிகவும் ப்ரணயகூஜிதத்தைப் பண்ணாதே யிருங்களென்கிறாள். 'என்னுயிர் நோவ' என்கிற விதில் ஒரு விசேஷப் பொருள் தொனிக்கும். உங்கள் கூக்குரலைக் கேட்டால் அவனுயிர் தளிர்க்கும்; அவனருகே போய்க் கூவுங்கோள்; என்னருகே கூவினால் என்னுயிர் அங்ஙனம் தளிர்க்காது, சிதிலமாகும்; ஆகவே இங்கு மிழற்றேல்மின் என்பதாக.

இங்ஙனம் சொல்லக்கேட்ட குயிற் பேடைகள் 'எங்களுடைய ஜாதிக்குக் கூவுகை தானே இயல்பு; அதனைத் தவிர்ந்திருக்க முடியுமோ?' என்ன; அதற்குச் சொல்லுகிறாள் என்னுயிர்க் கண்ணபிரானை நீர்வரக் கூவகிலீர் என்று. உங்களுக்குக் கூவுகையே பணியானால், என் ரான ரான் ங்கே வந்து சேருமாறு அவனைக் கூவலாகாதோ? அது செய்யாதே யிருக்கிறீர்களே யென்கிறாள். என்னுயிரை மாய்ப்பதற்காகவே நீங்கள் கூவுகிறீர்கள்; அந்தோ இதற்கு இத்தனை ஸம்பிரமம் வேண்டியிருந்ததோ? என்னுயிரை வாங்கி அவன் கையிலே கொடுக்க நினைத்த வுங்களுக்கு இத்தனை முயற்சி வேணுமோ? என்னுயிரை நானே கூவிக் கொடுக்க ஸித்தமாயிருக்க, உங்களுக்கு இத்தனை பாரிப்பு வேணுமோ? என்றுமாம். ... ... (1)

இத்தனைவேண்டுவதன்றந்தோ அன்றிற்பேடைகாள்*
எத்தனைநீரும்நுஞ்சேவலும் கரைந்தேங்குதிர்*
வித்தகன்கோவிந்தன் மெய்யனல்லனொருவர்க்கும்*
அத்தனையாமினி யென்னுயிரவன்கையதே. (2)

| | | | |
|---|---|---|---|
| அன்றில் பேடைகாள் | பெண்ணன்றிற் பறவைகளே ! | வித்தகன் கோவிந்தன் | மாயக் கோபாலன் |
| நீரும் நும் சேவலும் | நீங்களும் உங்கள் சேவல்களும் | ஒருவர்க்கும் மெய்யன் அல்லன் | நல்லார் தீயாரென்கிற வாசியின்றிக்கே அனைவர்க்கும் பொய்யனே ; |
| எத்தனை கரைந்து எங் ேர் | எவ்வளவோ கரைந்து வருந்துகிறீர்களே ; | | ஆன பின்பு |
| டுவது அன்று | என்னைக் கொலை செய்ய இத்தனை பாரிப்பு வேண்டியதில்லையே !; | என் உயிர் | என் பிராணன் |
| அந்தோ | ஐயோ, எதுக்கு இவ்வளவு பாரிப்பு? | அவன் கையதே ஆம் அத்தனை | அவன் கைப்பட்டதேயன்றோ. |

***—சில அன்றிற் பேடைகளை நோக்கி நீங்கள் உங்களுடைய ஆண்களோடே கூடிக்கொண்டு இனிமையான கூஜிதங்களைச் செய்து அதனாலே என்னை நலிகின்றீர்களே! இது நியாயமா? இப்படி நலிய வேண்டா—என்று இரக்கிறாள். அன்றில் என்பது ஒரு பறவை; க்ரௌஞ்சீ என்று வடமொழியிற் கூறப்படும்; க்ரௌஞ்ச மென்னவும் படும். அது பெரும்பாலும் பனைமரத்தில் வாழும். அது எப்பொழுதும் ஆணும் பெண்ணும் இணை பிரியாது நிற்கும்; கணப்பொழுது ஒன்றை ஒன்று விட்டுப் பிரிந்தாலும் அத்துயரத்தைப் பொறுக்க கில்லாமல் ஒன்றை ஒன்று இரண்டு மூன்று தரம் கதறிக் கூவி, அதன் பின்பும் தன் துணையைக் கூடாவிடின் உடனே இறந்துபடும். ஆணும் பெண்ணுமான அந்த அன்றிற் பறவை இணை பிரியாமல் நெருங்கி ஒன்றோடொன்று வாயலகைக் கோத்துக் கொண்டு உறங்கும் பொழுது அவ்வுறக்கத்தில் வாயலகு தன்னில் நெகிழ்ந்த வளவிலே துயிலுணர்ந்து அப்பிரிவைப் பொறாமல் மெலிந்து

பெருந்தொனியாக மிக இரங்கத்தக்க சிறு குரல் செய்து விரஹிஜனங்களின் செவியில் விழுந்தால் பொறுக்க முடியாத துன்பமாகும். பெரிய திருமடலில் "பெண்ணைமேல் பின்னுமவ்வன்றில் பெடைவாய்ச் சிறு குரலும், என்னுடைய நெஞ்சுக்கோ ரீர்வாளா மென் செய்கேன்!" என்றதுங் காண்க. பெரிய திருமொழியிலும் "காவார் மடற் பெண்ணை யன்றிலரி குரலும், ஏவாயினூடியங்கு மெஃகில் கொடிதாலோ" என்றாற் போன்ற பாசுரங்கள் பலகால் வருவது காண்க.

அன்றிற் பேடைகாள்! இத்தனை வேண்டுவதன்று=என்னை முடிக்கைக்கு இத்தனை வேண்டுவதில்லையே. குயில்களின் தொனியிலேயே உயிரை இழந்து கொண்டிருக்கிற என்மேல் அன்றில்களான நீங்கள் உங்களுடைய தொனியையும் செலுத்திப் பிரயாசப்பட வேண்டுமோ? பூசல் செய்து கொள்ளை கொள்ளும் கள்ளர் காலிலே விழுந்து ஐயோ! என்பாரைப்போல இங்கு ஆழ்வார் அந்தோ! என்கிறார். சரணம் என்ற வாயை அம்பாலே நிறைக்கலாமோ? என்பது இதன் கருத்தாம்.

இப்படி சொல்லக்கேட்ட அன்றில் பேடைகள் 'நாங்கள் என் செய்தோம்?' என்ன; எத்தனை நீரும் நுஞ்சேவலும் கரைந்தேங்குதிர் என்கிறாள். சேவலின் கருத்தறிந்து நடக்கிற நீங்களும், உங்கள் கருத்தறிந்து பரிமாறுகிற உங்கள் சேவலும் ஸம்ச்லேஷ ரஸத்தாலே உள்ளழிந்து கூக்குரலிடுகிறீர்களே! இதைக் காட்டிலும் வேறு நலிவு உண்டோ வென்கிறாள். எத்தனை யென்றது—மிகவு மென்றபடி.

இப்படி சொல்லக்கேட்ட அன்றிற் பேடைகள் 'அம்மா பராங்குச நாயகி! உன்னோடு கலவியே தாரகமாயிருக்கிற வெம்பெருமான் ஒரு கணப்பொழுது பிரியுமளவில் அவனை எங்களை யிட்டு நலிவிக்கிறானாக இங்ஙனே கொடுமை சொல்ல வேணுமோ? இது தகுமோ? சற்றுப்போது பொறுத்திருந்தால் அவன் தானே வருகிறான்' என்று சொல்ல; அதற்குச் சொல்லுகின்றாள் வித்தகன் கோவிந்தன் மெய்யனல்ல னொருவர்க்கும் இத்யாதி. வித்தகன்—இதுவரையில் பத்துடை யடியவர்க்கு எளியவன் பிறர்களுக்கு அரிய வித்தகன்* என்றிருந்தோம்; இப்போது பத்துடை யடியவர்க்கு அரியனான வித்தகன் என்று முடிவு செய்தோம் என்பதாகத் தெரிகிறது. இங்கே ஈடு;—["வித்தகன்] விஸ்மயநீயன். இப்போது அநுகூலர்க்கு அரிய வித்தகன். [கோவிந்தன்] ஸர்வரக்ஷகன். இத்தால்—ரக்ஷகரைப்போலே யிருந்து பாதகனுமவன். ரக்ஷகனென்று பற்றப் போகாது." என்று.

மெய்யனல்லன் ஒருவர்க்கும்—"மெய்யர்க்கே மெய்யனாகும்—பொய்யர்க்கே பொய்யனாகும்" (திருமாலை) என்றார் ஓராழ்வார்; இவர், ஒருவர்க்கும் மெய்யனல்ல னென்கிறார். "ராமாவதாரத்தில் மெய்யும் க்ருஷ்ணாவதாரத்தில் பொய்யுமிறே ஆச்ரிதர்க்குத் தஞ்சம்" என்றாயிற்று நம் ஆசாரியர்களின் உறுதி. "அத்தனையாமினி என்னுயிரவன்கையதே" என்றது "இனி என்னுயிர் அவன் கையதே யாமத்தனை" என்றபடி. 'என்னுயிர் நோவ மிழற்றேன்மின்" என்று வேண்டிச்செய்தேயும் அவை கூவுகை தவிராமையாலே, இனி நான் முடிந்தேனத்தனை யென்றாளாயிற்று. (2)

அவன்கையதேயெனதாருயிர் அன்றிற்பேடைகாள்*
எவஞ்சொல்லிநீர்குடைந்தாடுதிர் புடைசூழவே*
தவஞ்செய்திலா வினையாட்டியேனுயிர் இங்குண்டோ?
எவஞ்சொல்லிநீற்றும் நும்மேங்குகூக்குரல்கேட்டுமே. (3)

| | | | |
|---|---|---|---|
| அன்றில் பேடைகாள் | பெண்ணன்றிற் பறவைகளே | நீர் எவம் சொல்லி | நீங்கள் ஏதேதோ உக்திகளைப் பேசிக்கொண்டு |
| எனது ஆர் உயிர் அவன் கையதே | எனது அருமையானவுயிர் அவன் கைபபட்டதே; | குடைந்து | ஸம்ச்லேஷித்து |
| | | புடை சூழவே | என் கண் வட்டத்திலேயே திரிகள்; |

| | | | |
|---|---|---|---|
| தவம் செ தில்லா | அவனைப்போலே பிரிவுக்கு ஆறியிருக்கும்படியான பாக்கியம் ப | இங்கு உண்டோ | (அங்கே போனபடியாலே) இங்கு இல்லையே; |
| | | எங்கு கூக் குரல் கேட்டும் | உங்களுடைய ப்ரேம கனமான தொனியைக் கேட்டும் |
| வினையாட்டி யேன் உயிர் | பாவியான என்னுடைய பிராணன் | எவம் சொல்லி | எத்தைச் சொல்லித் தரிப்பது; |

***—மீண்டு மிப்பாட்டிலும் அவ்வன்றிற் பேடைகளையே யிரக்கின்றாள். அவன் கையதே யெனதாருயிர்—அவனுடைய உயிர் என் கைப்பட்டதாயிருந்த நிலை கழிந்து என்னுடைய உயிர் அவன் கைப்பட்டதாம்படியான நிலையாயிற்று. கீழ் நாலாம்பத்தில் "உன்னதென்னதாவியும் என்னதுன்னதாவியும்" என்றாரே. ஒரு காலத்தில் இவருடைய உயிர் அவனதாயிருப்பதும், மற்றொரு காலத்தில் அவனுடைய உயிர் இவரதாயிருப்பது முண்டே. அன்றிற் பேடைகாள்?=நீங்கள் இப்போது கூடியிருந்து ரஸமநுபவிக்கிறீர்கள்; இந்த ரஸமறிந்த நீங்கள் பிரிந்தார் படும் துயரமும் அறிய வேண்டாவோ? அஃதறிந்தால், பிரிந்த வென்னை இப்படி கூக்குரலாலே நோவு படுத்துவீர்களோ? எவஞ் சொல்லி நீர் குடைந்தாடுதிர்=நீங்கள் எத்தனை உக்தி விசேஷங்களைச் சொல்லி நிபிட ஸம்ச்லேஷம் பண்ணிப் பரிமாறுகின்றீர்கள்! உங்களுடைய பேச்சும் காதால் கேட்கப்போகிறதில்லை; உங்களுடைய செயலும் கண்ணால் காண முடிகிறதில்லையே! என்கிறாள். அவ்வன்றிற் பேடைகளின் அநக்ஷரரஸமான பேச்சுக்களைத் தன் வாயால் அநுவாதஞ் செய்யவும் கூசின படியாலே எவஞ் சொல்லி என்கிறாள். எத்தெத்தையோ சொல்லுகிறீர்களே!; உங்களுடைய குசால் உங்கள் பேச்சிலன்றோ தெரிகிறது என்கை. விரஹிகளுக்கு உத்தீபகமான தொனி யன்றோ அது.

புடை சூழவே—தொனி மாத்திரமன்றே என்னை யழிக்கிறது; நீங்கள் உந்தம் சேவலுடனே சுற்றிச்சுற்றி ஸஞ்சரியா நின்றீர்களே! இந்த உங்கள் கொந்தளிப்பைக் கண் கொண்டு காண முடிய வில்லையே; செவியைப் புதைத்துப் பிழைப்பேனோ? கண்ணைப் புதைத்துப் பிழைப்பேனோ? என்கிறாள்.

தவஞ்செய்திலாவினையாட்டியேனுயிர் இங்குண்டோ?=தவமாவது பாக்கியம்; பாக்ய ஹீனையான வினையாட்டியேன் என்று இத்தலைவி தன்னை நிந்தித்துக் கொள்வதற்கு இருவகையான கருத்துக் கூறுவர்கள்; "உயிரை இங்கே வைத்து உபகரிக்கபாக்யம் பண்ணிற்றிலேன்" என்பது ஒரு கருத்து; அதாவது, என்னுயிர் நீடித்திருந்ததாகில் என்னை நீங்களும் நீடித்து நலிய நேரும்; இவ்வழியாலே உங்களுக்கு ஒருபகாரம் பண்ணினேனாவேன்; உயிர் சென்றுகொண்டேயிருக்கையாலே இவ்வுபகாரம் செய்ய பாக்யம் பண்ணாதவளாயினேன் என்பதாம். மற்றொரு கருத்தாவது="அவனைப்போலே பிரிவுக்குச் சிளையாதபடி பாக்யம் பண்ணப் பெற்றிலேன்" என்று பிள்ளான் பணிப்பராம். பிரிவு என்பது வ்யக்தித்வய நிஷ்டமாகையாலே, எம்பெருமானை நான் பிரிந்திருப்பதுபோல என்னை அவன் பிரிந்திருப்பது முண்டே; ஆனால் அவன் இப்பிரிவுக்குச் சிறிதும் வருந்துகிறானல்லன்; நானும் அப்படி வருந்தாதிருக்கலாமே; அதற்கு பாக்கியம் பண்ணிற்றிலேன் என்கை. இப்படிப்பட்ட தௌர்ப்பாக்ய சாலினியான என்னுடைய, உயிர் இங்கு உண்டோ?=கொள்ளை கொள்ள வீட்டினுள்ளே புகுந்தவர்களுக்கு வீட்டுக்குடையார் விளக்கேற்றிக் காட்டி இங்கு ஏதேனும் ஒரு சரக்காவது இருக்கின்றதா பார்த்துக்கொள்ளுங்கள்' என்று காட்டுமாபோலே காட்டுகிறாளாம் பராங்குச நாயகி. உயிர் இருந்தாலன்றோ நீங்கள் நலியலாம்; இங்கு உயிரில்லையே, நீங்கள் நலிந்து என் பயன்? என்கிறாளாயிற்று. உயிர் இல்லாவிடில் இப்பேச்சு எங்ஙனே பேசுகிறாளென்று கேட்க வேண்டா; உயிர் போகுந் தருவாயிலிருக்கிறது
உயிரிங்குண்டோ? என்றதன் கருத்து.

நும் எங்கு கூக்குரல் கேட்டும் எவஞ்சோல்லி நிற்றும்—கேட்டாரை முடிக்கவல்லதான உங்கள் தொனியைக் கேட்டுங்கூட நான் தரித்திருக்க முடியுமோ? (3)

கூக்குரல்கேட்டும் நங்கண்ணன்மாயன்வெளிப்படான்*
மேற்கிளைக்கொள்ளேன்மின் நீருஞ்சேவலுங்கோழிகாள்!*
வாக்கும்மனமுங் கருமமும்நமக்காங்கதே*
ஆக்கையுமாவியும் அந்தரம்நின்றுழலுமே. (4)

| | |
|---|---|
| கோழிகாள் | மயில்களே! |
| கூக்குரல் கேட்டும் | நீங்கள் பரஸ்பரம் அழைத்துக் கொள்ளுகிற தொனியைக் கேட்டும் |
| நம் மாயன் கண்ணன் | நமது மாயக்கண்ணன் |
| வெளிப்படான் | வந்து தோன்றுகின்றிலன்; |
| நீரும் சேவலும் மேல் கிளை கொள்ளேன்மின் | நீங்கள் ஆணும் பெண்ணுமாயிருந்து உயரக் கூவ வேண்டா: |

| | |
|---|---|
| நமக்கு | என்னுடைய |
| வாக்கும் மனமும் கருமமும் | காணத்ரய வ்ருத்தியும் |
| ஆங்கதே | அப்பெருமான் பக்கலிலேயாயிற்று; |
| ஆக்கையும் ஆவியும் | உடலும் உயிரும் |
| அந்தரம் நின்று உழலும் | நடுவே நின்று தத்தளிக்கின்றன. |

* * *—சில மயில்களைக் குறித்து, நீங்கள் உயரக்கூவி என்னுயிரை முடிக்கப் பார்க்கிறீர்களே! இது நீதியோ வென்கிறாள். கூக்குரல் கேட்டும் நங்கண்ணன் மாயன் வெளிப்படான்=உங்களுடைய கூச்சல் கேளாதவிடமுண்டோ? எங்கும் கேட்குமே; திருநாட்டிலுங் கேட்குமே; அது கேட்டு இங்கு நான் படுகிற பாட்டை அங்கு அவனும் படநேருமே; அப்படியிருந்தும் அவன் பதறியோடி வாராதே கிடக்கிறானே! இஃது என்னேவென்கிறாள். இத்தால் தன்னுடைய ஆற்றாமைமிகுதியைக் காட்டினாளாயிற்று. இங்ஙனே சொல்லச் செய்தேயும் அவை முன்னிலும் உயர்ந்த தொனியைச் செய்தன; செய்யவே, மேற்கிளைக் கொள்ளேன்மின் நீருஞ் சேவலும் கோழிகாள்! என்கிறாள். இங்குக் கோழியென்றது மயிலை. கிளையாவது தொனி; மேலான கிளை—உச்சத்வநி. உங்கள் ஜாதிக்குத் தக்கதாய் ப்ரணயப்ரயுக்தமான உச்சத்வநியைப் பண்ணவேண்டா வென்றபடி.

இங்ஙனே சொல்லச் செய்தேயும் அவை உச்சத்வனியையே செய்ய; என்னுடைய ஸர்வகரணங்களையும் முடித்தே விடுவதாக ஸங்கல்பித்து வந்தன்றோ நீங்கள் இப்படி உச்சத்வனியைப் பண்ணா நின்றீர்கள்; என்னுடைய கரணக்ராமங்களில் ஒன்றும் இங்கில்லையே; [வாக்கும் மனமும் கருமமும் நமக்கு ஆங்கதே] என்னுடைய ஸகல கரணங்களும் அவன் பக்கலிலே சென்று சேர்ந்தனவே; அங்கே சென்று சுத்துங்கோள் என்றாளாயிற்று. 'உம்முடைய வாக்கும் மனமும் கருமமும் அங்கே சென்றற்றனவாகில் இங்கே நீர் பேசுகிறபடி எங்ஙனே?' என்று அவை கேட்பதாகக் கொண்டு, ஆக்கையுமாவியும் அந்தரம் நின்றுழலுமே என்கிறாள்; உடலும் உயிரும் ஏதோ நடுவே நின்று அனர்த்தப் படுகின்றன வத்தனை; தரித்து நிற்பதாக நினைக்க வேண்டா என்றபடி. (4)

அந்தரநின்றுழல்கின்ற யானுடைப்பூவைகாள்!*
நுந்திறத்தேதுமிடையில்லை குழறேன்மினோ*
இந்திரஞாலங்கள்காட்டி யிவ்வேழுலகுங்கொண்ட*
நந்திருமார்பன் நம்மாவியுண்ணநன்கெண்ணினான். (5)

| | | | |
|---|---|---|---|
| அந்தரம் நின்று உழல்கின்ற | நடுவே வீணாகப் பரிச்ரமப்படுகிற | இவ் ஏழ் உலகும் கொண்ட | இவ்வேழுலகங்களையும் ஆக்ரமித்துக் கொண்டாப்போலே என்னையும் கொள்ளை கொண்ட |
| யானுடைய பூவைகாள் | என்னுடையபூவைகளே!, | | |
| நும் திறத்து ஏதும் இடை இல்லை | உங்கள் உத்யோகத்திற்குச் சிறிதும் அவகாசமில்லை; | நம் திருமார்பன் | நமது திருமால் |
| குழறேன்மின் | உங்கள் தொனியைக்காட்டி நலிய வேண்டா; | நம் ஆவி உண்ண | நம்முயிரையும் கொள்ளை கொள்ள |
| இந்திர ஞாலங்கள் காட்டி | (பண்டுமாவலியிடத்து) மாயா விநோதங்கள்காட்டி | நன்கு எண்ணினான் | நன்றாக ஸங்கல்பித்தான். |

* * *—இப்பாட்டின் முன்னடிகள் பூவைகளை நோக்கிச் சொல்லுவது; பின்னடிகள் தன்னிலே தான் சொல்லிக் கொள்வது. அந்தரம் நின்றுழல்கின்ற பூவைகளே! என்றது—நிஷ்ப்பலமாக நின்று சிரமப்படுகிற பூவைகளே! என்றபடி. இங்கு ஏதாவது பசை யிருந்தால் நலியலாம்; அப்படி யொரு பசையின்றிக்கே யிருக்க, வீணாக ஆயாஸப்படுவது எதற்காக? என்றவாறு. யானுடைய பூவைகாளென்றது என்னுடைப் பூவைகளே! என்றபடி. நீங்கள் நான் வளர்த்த பூவைகளாயிருந்துவைத்து என்னை இபபடி நலியலாமோ? என்பது கருத்து. என்னுடைய பூவைகளானபடியினாலேயே நலிகின்றீர்கள் போலும்; அவனும் என்னுடைய வனாகையாலேயே யன்றோ நலிகின்றான். நலிகைக்கு என்னுடைமையே ஹேது போலும்—என்பதுமொரு கருத்து.

நுந்திறத்து ஏது மிடையில்லை குழறேன்மினோ=என்னைக் கொலை செய்வதற்கு உங்களிடத்தே ஓரவகாச மில்லை; அநக்ஷரரஸமான பேச்சைக் காட்டி யென்னை ஹிம்ஸிக்கவேண்டா வென்றபடி. என்னைக் கொலை பண்ணுவதற்கென்று கங்கணங் கட்டிக்கொண்டிரா நின்ற எம்பெருமான் தன்னுடைய அக்காரியத்தில் தான் ஜாகரூகனாயிருக்க, உங்களுக்கு எதுக்கு வீண் பரிச்ரமம்? என்னை நலிவதில் அவன் கைவாங்கினா லன்றோ நீங்கள் அதை நிறைவேற்ற வேண்டும்; அவன் உங்களுக்கு அவகாசம் வைத்திலனே என்றாளாயிற்று.

இனி, பின்னடிகளுக்கு ஆறாயிரப்படி ஸ்ரீஸூக்தி காண்மின்;— "பண்டு இந்த லோகத்தைத் தனக்காக்கிக் கொள்ளுகைக்குச் சில பொய் செய்தாப்போலே—என்னோடே கலந்து பரிமாறுகிறானாகத் தோற்றும்படி சில பொய்களைச் செய்து அகன்று போனவது என்னை முடிக்கைக்கு நல்ல விரகு பார்த்தான்; என்ன சதுரனோ! என்று தன்னிலே நொந்து சொல்லுகிறாள்." என்று. இந்திர ஜாலங்கள்போலே த்ருஷ்டி சித்தாபஹாரியான வடிவழகையும் சீலத்தையும் சேஷ்டிதத்தையும் காட்டி வாய்மாளப் பண்ணி, ஆஸுரப்ரக்ருதியான மஹாபலி என்னதென்றிருந்த லோகத்தைத் தன்னதாக்கிக் கொண்டாபபோலே, என்னையும் ஸௌந்தர்ய சீலாதிகளைக் காட்டி வாய்மாளப்பண்ணி, நான் என்னதென்றிருந்த ஆத்மாவைத் தன்னதாக்கிக் கொண்டவவன் இப்போது என்னை முடிக்கைக்கு நல்லுபாயம் பார்த்தான்; ஸர்வசக்தன் உத்யோகித்த காரியத்திலே குறை கிடக்குமோ?

பின்னடிகளும் பூவைகளை நோக்கியே சொல்லுகிறதெனினும் குறையில்லை. (5)

நன்கெண்ணிநான்வளர்த்த சிறுகிளிப்பைதலே !*
இன்குரல்நீமிழற்றேல் என்னாருயிர்க்காகுத்தன்*
நின்செய்யவாயொக்கும்வாயன் கண்ணன்கைகாலினன்*
நின்பசுஞ்சாமநிறத்தன் கூட்டுண்டுநீங்கினான். (6)

நன்கு எண்ணி — எனக்கு ஆபத்திலே உதவுவா யென்று நன்மையை நினைத்து

நான் வளர்த்த — நான் போஷித்து வந்த

சிறு கிளி பைதலே — சிறிய கிளிக் குட்டியே!

இன் குரல் நீ மிழற்றேல் — இனிய குரலைக் கொண்டு நீ தொனி செய்யாதே; (ஏனென்னில்;)

நின் செய்ய வாய் ஒக்கும் வாயன் — உனது சிவந்த வாயையொத்த வாயை யுடையவனும்

கண்ணன் கை காலினன் — (உனது கண் கை காலோடொத்த) திருக்கண் திருக்கை திருவடிகளை யுடையவனும்

நின் பசும் சாமம் நிறத்தன் — உன்னுடைய பசுமை யழியாத சாமநிறம்போன்ற நிறத்தை யுடையனும்

என் ஆர் உயிர் காகுத்தன் — என்னுடைய அருமையான உயிர் போன்றவனுமான இராமபிரான்

கூட்டுண்டு நீங்கினான் — என்னோடே கலந்து பிரிந்தான்.

* * *—'இந்த நிலைமையில் நாம் திருநாமத்தைச் சொல்லலாகாது' என்றறியாதே திருநாமத்தைச் சொல்லி நலிகிற கிளிப் பிள்ளையைக் குறித்து எனக்கு அஸஹ்யமான தசையிலே இப்படிச் சொல்லி நலியவோ உன்னை நான் வளர்த்தது! என்று சொல்லி அத்தை நிவர்த்திப்பிக்கிறாள். நன்கெண்ணி நான் வளர்த்த—வளர்த்தலாவது திருநாமங் கற்பித்தல்; எந்த ஸமயத்தில் திருநாமம் சொன்னால் ஸாத்மிக்கும்; எந்த ஸமயத்தில் அது சொன்னால் பாதகமாகும்—என்பதை யறிந்து ஸமயம் பார்த்துச் சொல்லுவாயென்று உனக்கு நான் கற்பித்து வைத்திருக்க, இங்ஙனே பாதகமான நிலைமையிலே திருநாமத்தைச் சொல்லிக் கொலை பண்ணுவது முண்டோ! என்று கிளிப் பிள்ளையை நோக்கி நோகிறாள். இன் குரல் நீ மிழற்றேல்—இன் குரல் என்றது கூரியவேல் என்னுமாபோலே யென்பர் நம்பிள்ளை. கிளியே! உன்னுடைய குரலாகிற கூர்வேலை யிட்டுக் கொலை பண்ணாதே யென்றபடி. "நிரம்பா மென் சொல்லால் என்னை முடியாதேகொள்; மாத்ருவதத்திலேயும் ப்ரவர்த்திப்பாருண்டோ!" என்பது ஈடு.

இப்போது எம்பெருமான் என்னோடு கூடியிருந்தானாகில், நீ திருநாமஞ் சொல்லுவது எனக்குப் பரம போக்யமாகவேயிருக்கும்; அவனோ பிரிந்து போயினான். ஆன பின்பு, அவன் வடிவுபோலே யிருக்கும் உன் வடிவைக் காட்டி, அதற்கு மேலும் அவன் திருநாமங்களையுஞ் சொல்லி என்னை நோவு படுத்தாதே யென்றாளாயிற்று. (6)

கூட்டுண்டுநீங்கிய கோலத்தாமரைக்கட்சேவ்வாய்*
வாட்டமிலென்கருமாணிக்கம் கண்ணன்மாயன்போல்*
கோட்டியவில்லொடு மின்னுமேகக்குழாங்கள்காள்*
காட்டேன்மின்நும்முரு என்னுயிர்க்கதுகாலனே. (7)

கூட்டுண்டு நீங்கிய — என்னோடு கலந்து பிரிந்த

கோலம் தாமரை கண் செம் வாய் — அழகிய தாமரை போன்ற கண்களையும் சிவந்த அதரத்தையு முடையனாய்

வாட்டம் இல் என் கரு மாணிக்கம் — இடைவிடாமல் என்னினைவிலேயே யிருக்கிற நீலரத்னம் போன்ற வடிவை யுடையனான

மாயன் கண்ணன் போல் — மாயக கண்ணனைப்போல யிருக்கிற

கோட்டிய வில்லொடு மின்னும் மேகம் குழாங்கள்காள்! — வளைக்கப்பட்ட வில்லோடு கூடி மின்னுகிற மேகத்திரள்களே!

நும் உரு காட்டேன்மின் — உங்கள் வடிவத்தை காட்டாதே மறைத்துக்கொள்ளுங்கோள்;

அது என் உயிர்க்கு காலன் — அந்த உங்கள் வடிவம் என் பிராணனுக்கு மிருத்யு.

* * *—எம்பெருமானது வடிவுக்குப் போலியான மேக பங்க்திகளைக் கண்டு, உங்கள் வடிவைக் காட்டி என்னை முடியாதேகொள்ளுங்கோளென்கிறாள். எம்பெருமான் ஆழ்வாரோடே கலந்து பிரிந்துபோன பிறகு ஸௌந்தர்ய லாவண்யாதிகள் அதிசயிக்கப்பெற்றான் போலும்; அதனைச் சொல்லுகிறது முன்னிரண்டடிகள். இங்கு நம்பிள்ளை இரண்டுபடியாக அருளிச் செய்வர்; "ஏகதத்வ மென்னும்படி கலந்து பிரிந்த பின்பு அவனுடைய அவயவ சோபை யிருந்தபடி யென்னுதல்; இவளோட்டைக் கலவியால் வந்த சோபை யென்னுதல்;" என்று. அதாவது, அவனோடு கலந்து நான் பிரிந்தேன், என்னோடு கலந்து அவன் பிரிந்தான்; இப்படி இருவர்க்கும் பிரிவு ஒத்திருக்கச் செய்தேயும் அவனைப் பிரிந்த நான் *சங்கம் சரிந்தன சாயிழந்தேன் தடமுலை பொன்னிறமாய்த் தளர்ந்தேன்* என்றும், *சாயலொடு மணிமாமை தளர்ந்தேன் நான்* என்றும் சொல்லும்படி மேனி நிறமழிந்து கிடக்கிறேன்; என்னைப் பிரிந்த அவனோ வென்னில், பிரிவுக்குச் சிளையாதபடி கண்ணும் வாயும் விகாஸம் பெற்றுப் பொலியா நின்றான் என்பது முதற்கருத்து; இந்தப் பொலிவு பிரிவினாலென்று கொள்ளவேண்டா; என்னோடு கலந்ததனாலேயே யென்று கொள்ளலா மென்பது இரண்டாவது கருத்து.

மின்னு மேகக் குழாங்கள்காள்! என்று மேகங்களை விளிக்கின்ற இத்தலைவி அந்த மேகங்களுக்கு எம்பெருமானை உவமை கூறுகின்றாள். கீழே எட்டாம்பத்தில்* ஒக்குமம் மானுருவமென்று உள்ளங் குழைந்து நாணாளும், தொக்க மேகப் பல் குழாங்கள் காணுந் தோறும் தொலைவன் நான்* என்றதை இங்கு நினைப்பது. மேகம் வில்லோடுகூடி விளங்கும் போது *வேலிக்கோல் வெட்டி விளையாடு வில்லேந்தி யிருக்கும் கண்ணனுடைய நினைவு வாராமலிராது; மேகம் மின்னும்போது ஸ்ரீகௌஸ்துபம் முதலிய திருவாபரணங்களினால் மின்னா நின்றுள்ள கண்ணபிரானுடைய நினைவு வாராமலிராது. அதையிட்டு "என் கருமாணிக்கங் கண்ணன் மாயன்போல் கோட்டிய வில்லொடு மின்னு மேகக் குழாங்கள்காள்!" என்றது.

காட்டேன்மின் நும்முரு=ம்ருத்யு வென்னலாம்படியான உங்கள் வடிவைக்காட்டி என்னைக் கொலை செய்ய வேண்டா வென்றபடி. என்னுயிர்க்கு அது காலனே— பண்டே விரஹம் தின்ற என்னுயிர்க்கு அது யமனன்றோ. இங்கு மேகக் குழாங்கள்காள்! என்று, முன்னிலையாக விளித்து, நும்முரு என்றுஞ் சொல்லிவைத்து இது என்ன வேண்டியிருக்க அது என்று பரோக்ஷம்போலச் சொல்லி யிருக்கையாலே, கண்கொண்டு காண மாட்டாமை முகத்தை மாற வைத்துச் சொல்லுகிறாளென்பது போதரும்.

இப்பாட்டில் 'குழாங்கள் காள்!' என்ற பிரயோகம் வட மொழி வைதிகப் பிரயோகம் போலே நிர்வஹிக்கத் தக்கது. எட்டாம் பத்திலும் *இடையில்லை யான்வளர்த்த கிளிகாள் பூவைகள்காள்* என்றுள்ள பிரயோகம் இத்தோடு ஒப்பிடத்தக்கது. மேல் பத்தாம் பாட்டிலும் *நாரைக் குழாங்கள் காள்* என்பர். ... ... (7)

உயிர்க்கதுகாலனென்று உம்மையானிரந்தேற்கு*நீர்
குயில்பைதல்காள் கண்ணன்நாமமேகுழறிக்கோன்றீர்*
தயிர்ப்பழஞ்சோற்றேடு பாலடிசிலும்தந்து*சொல்
பயிற்றியநல்வளமூட்டினீர் பண்புடையீரே. (8)

| | | | |
|---|---|---|---|
| குயில் பைதல் காள் | குயிற் குட்டிகளே!, | உமமை யான் இரக்தேற்கு | (அந்த க்ருஷ்ண நாமத்தைச் சொல்ல வேண்டாவென்று) உங்களை வேண்டிக் கொண்ட என்னை |
| அது உயிர்க்கு காலன்என்று | (கண்ணனுடைய நாமமாகிற) அது என்னுயிர்க்கு ம்ருத்யு வென்று சொல்லி | | |

| | | | |
|---|---|---|---|
| கண்ணன் நாமமே குழறி கொன்றீர் | அந்தக் கண்ணன்நாமங்களையே அகஷரமதுரமாகச் சொல்லிக் கொலை செய்கிறீர்கள் ; | சொல் பயிற்றிய | அவனது திருநாமங்களாகிற சொற்களைக் கற்பித்ததற்குக் கைம்மாறாக |
| தயிர் பழஞ் சோற்றேடு | தயிரையும் பழைய சோற்றையும் | நல் வளம் ஊட்டினீர் | (இப்படி யென்னைக் கொலை செய்கையாகிற) நல்ல காரியம் செய்தீர்கள் ; |
| பால் அடிசிலும் தந்து | பாலையும் வெஞ்சோற்றையுமூட்டி | பண்பு உடையீரே | நீங்கள் நல்ல தாமிஷ்டர்களே. |

* * *—இந்த நிலைமையில் பகவந்நாம ஸங்கீர்த்தனமும் அஸஹ்யமாயிருக்கிறபடியை அந்யாபதேசத்தாலே தெரிவிக்கிற பாசுரமிது. ஆழ்வார் தாம் வளர்த்த குயில்களுக்கு ராமநாமங்களையும் கிருஷ்ண நாமங்களையும் கற்பித்து வைத்திருப்பதுண்டு; ராமநாமம் ம்ருதஸஞ்ஜீவனமாகையாலே, உயிர் தொலையும்படியாயிருக்கும் நிலைமையிலே ராமநாமங்களையே சொல்ல வேண்டுமென்றும், கிருஷ்ண நாம ப்ரஸ்தாவமும் செய்யலாகாதென்றும் திட்டம் செய்திருந்தது முண்டு. இப்போது உயிர் தொலையுந்தருணமாகையாலே, ராமநாமத்தையே சொல்லுங்கள், கிருஷ்ண நாமத்தைச் சொல்லவேண்டா வென்று விசேஷித்துக் கட்டளையிட்டிருந்தும் அவை க்ருஷ்ண நாமத்தையே சொல்ல, ஓ படுகொலை! படுகொலை! படுகொலை! என்கிருள் பராங்குச நாயகி.

குயிற் பைதல்காள்! உயிர்க்கு அது காலனென்று உம்மை யானிரந்தேற்கு=குயிற் குட்டிகளே! அந்த க்ருஷ்ண நாமமானது ராமநாமம்போலே ம்ருதஸஞ்ஜீவநியாய்ப்போன வுயிரை மீட்டுக்கொண்டு வந்து கொடுக்க வல்லதன்று; *வெற்ற வெறிதே பெற்ற தாய் வேம்பேயாக வளர்த்தாளே* (நாச்சியார் திருமொழி 13—7.) என்கிறபடியே இருக்கிற வுயிரையும் கொண்டுபோய் முடிக்க வல்லது; அப்படிப்பட்ட நாமத்தை இப்போது என் செவியிலே வீழ்த்த வேண்டா வென்று நான் பலகாலம் பிரார்த்தித்திருந்தும் அந்தோ! சாணுகத காதகரானீர்களே! கண்ணன் நாமமே குழறிக்கோன்றீர்—நெஞ்சைப் புண்படுத்தி வைக்கும் கிருஷ்ண நாமத்தையே அவ்யக்தமதுரமாகச் சொல்லிச் சொல்லி என்னைக் கொலை செய்கிறீர்களே! ம்ருதஸஞ்ஜீவநியான ராம நாமங்களையும் சேர்த்துச் சொன்னுலாகாதோ? உபகாரம் பண்ணினுர்க்கு இப்படி அபகாரம் பண்ணுகை நீதியோ? என்ன; என்ன வுபகாரம் நீ பண்ணிற்று? என்று அவைகேட்க;

தயிர்ப் பழஞ்சோற்றேடு பாலடிசிலும் தந்து சொல்பயிற்றிய நல்வளம் எ பஞ்சாமிருதமளித்தன்றோ உங்களை நான் வளர்த்தது. தயிரென்ன பழமென்ன சோறென்ன பாலென்ன அடிசிலென்ன ஆகிய இவ்வைந்தையும் தந்து என்பதாகக்கொள்ளலாம்; சோறு என்றாலும் அடிசில் என்றாலும் ஒன்றேயாயிருக்க இரண்டுபடச் சொல்லுவானேன்? என்னில், வெறுஞ்சோற்றைச் சோறென்கிறது; விசேஷ மிச்ரமான சோற்றை அடிசிலென்கிறது—என்று கொள்ளலாம். இப்படி கொள்ளுமளவில் ஐந்து பதார்த்தங்கள் தேறுகையாலே பஞ்சாமிருதம்போன்ற அர்த்த பஞ்சகத்தையுமுபதேசித்து சிஷ்யர்களைப் போஷித்தமை ஸ்வாபதேசார்த்தமாக விளங்கும். அன்றியே, பழஞ்சோறு என்றவிடத்து பழமும் சோறும் என்று இரண்டாகக் கொள்ளாமல் பழைய சோறு என்று ஒன்றேயாகக் கொள்வதுதான் முன்னோர்களின் வியாக்கியானங்களிலுள்ளது. "தயிரும் பழஞ்சோறும் பாலும் வெஞ்சோறும் அவ்வவ காலங்களிலே தந்து" என்பது ஈடு. இவையிட்டு நான் உங்களை வளர்த்துப் போந்ததற்கு நல்ல கைம்மாறு செய்தீர்கள்! இவ்வளவு இரக்கங்கெட்டவர்களா நீங்கள்! என்றதாயிற்று. (8)

பண்புடைவண்டொடுதும்பிகாள் பண்மிழற்றேல்மின்*
புண்புரைவேல்கொடு குத்தாலொக்கும்நும்மின்குரல்*
தண்பெருநீர்த்தடந்தாமரை மலர்ந்தாலொக்குங்
கண்பெருங்கண்ணன்* நம்மாவியுண்டெழநண்ணினான். (9)

| | | | |
|---|---|---|---|
| பண்புடை வண்டொடு தும்பிகாள் | பாட்டின் சீர்மையை யுடைய வண்டுகளோடு கூடின தும்பிகளே !, | பண் மிழற்றேன்மின் | பண்பாடுதலைத் தவிருங்கள் ; |
| நும் இன் குரல் | உங்களுடைய இனிய குரலானது | தண் பெரு நீர் தடம் | குளிர்ந்து நிரம்பின நீரை யுடைய தடாகம் |
| புண் புரை வேல் கொடு குத்தால் ஒக்கும் | புண்ணின் புரையிலே வேலைக் கொண்டு குத்தினாற்போலே யிரா நின்றது ; | தாமரை மலர்ந்தால் ஒக்கும் | தாமரை மலரப் பெற்றாற் போலேயாய் |
| | (ஆதலால்) | பெரு கண் கண்ணன் | மிகப் பெரிய கண்களை யுடையனான க்ருஷ்ணன் |
| | | நம் ஆவி உண்டு | நமது உயிரைக் கவர்ந்து |
| | | எழ நண்ணினான் | அகன்று போயினன். |

* * *—மதுவைப் பருகிக் களித்துப் பாடுகிற சில வண்டுகளையும் தும்பிகளையுங் குறித்து 'உங்கள் த்வனி என்னால் பொறுக்கப்போகிறதில்லையே; பாடாதேகொள்ளுங்கோள்' என்கிறாள். பண்புடை வண்டொடு தும்பிகாள்! பண்மிழற்றேன்மின்=நான் வளர்த்த குயில் போலே நீங்கள் நன்றி கெட்டவர்களன்றே; நீங்கள் சிறந்த தார்மிகர்களல்லவா? என்று, இரக்கம் பிறக்கும்படி கொண்டாடிப் பேசுகிறாள் பண்புடை வண்டென்று. பண்பாவது நீதி; நீங்கள் நீதி தவறாதவர்களாகையாலே உங்களுக்கு நான் அதிகம் சொல்ல வேண்டாவென்றபடி. பண்மிழற்றுகையாவது ஆலாபனை செய்கை. சொற்கள் நன்கு விளங்கும்படி பாடுவதைக் காட்டிலும் சொல் தெரியாமலே ஆலாபனை செய்வதுதான் நெஞ்சை அதிகமாகக் கவர்வது; அங்ஙனே பண்மிழற்றுதல் வேண்டாவென்று இரக்கிறாள். 'பண்புடை' என்று பாடமல்லாமல் 'பண்புரை' என்று பாடமிருப்பதாகவும் நம்பிள்ளை காட்டுகின்றனர்; அப்போது பண்பு உரை என்றாகி அழகிய முரலுகையையுடைய வண்டுகளென்றபடியாம்.

புண்புரைவேல்கொடு குத்தாலொக்கும் நும் இன்குரல்=பண்டே குயில் மயில் முதலானவற்றின் த்வனியாலே புண்பட்டிருக்கிற வுயிரிலே வேலைக்கொண்டு குத்தினாற்போலே யிரா நின்றது உங்களுடைய இனிமையான குரல்; ஆதலால் பண்மிழற்றேன்மின் என்று கூட்டுக. இங்ஙனே சொலக்கேட்ட வண்டுகளும் தும்பிகளும் "நாங்கள் எம்பெருமானது திருநாமங்களைத்தானே பாடுகிறோம்; இது உனக்கு உத்தேச்யந்தானே; அஸஹ்யமாவதென்?" என்ன; அதற்குச் சொல்லுவன பின்னடிகள். 'எம்பெருமானும் நானும் கூடியிருந்து கேட்க வேண்டிய பாட்டைப் பிரிந்திருந்து கேட்க முடியுமோ? அவன் தன்னழகைக் காட்டி என்னை மாய்த்துப் போனானே! இந்நிலையிலே எனக்கு உங்கள் பாட்டு எப்படி ஸஹ்யமாகும்' என்கிறாள். தண் பெருநீர்த்தடந்தாமரை மலர்ந்தாலொக்குங் கண் பெருங் கண்ணன்=குளிர்ந்து அகாதமான நீரையுடைய பொய்கையிலே தாமரைப்பூ அலர்ந்தாற்போலேயாய் அவ்வளவேயன்றியே எல்லைகாண வொண்ணாத பெருமையை யுடையனவான கண்களையுடைய கண்ணபிரான், நம்மாவியுண்டு எழ நண்ணினான்=அவ்வடிவழகைக் காட்டி என்னை முடித்துப் பிரிந்து போனானே; இந்த ஸமயத்திலா நீங்கள் இன்குரல மிழற்றுவது!. (9)

எழநண்ணிநாமும் நம்வானநாடனோடொன்றினோம்*
பழனநன்னாரைக்குழாங்கள்காள் பயின்றென்னினி*
இழைநல்லவாக்கையும் பையவேபுயக்கற்றது*
தழைநல்லவின்பந்தலைப்பெய்து எங்குந்தழைக்கவே. (10)

| | | | |
|---|---|---|---|
| பழனம் நல் நாரை குழாங்கள்காள் | நீர்நிலங்களிலே திரிகிற நல்ல நாரைத்திரள்களே! | இழை நல்ல ஆக்கையும் | ஆபரணப்ராமமான சரீரமும் |
| நாமும் எழ நண்ணி | நாம் இவ்விபூதியை விட்டெழுந்து | பையவே | நாளடைவிலே |
| நம் வானநாடனோடு ஒன்றினோம் | நம் பரமபதநாதனோடே சேர்ந்து பொருந்தி விட்டோம்; | புயக்கற்றது | பசையற்றதாயிற்று; |
| இனி பயின்று என் | (இனி நீங்கள் என்னை முடிக்கத் திரளவிருந்து) ஆலோசிப்பதில் என்ன லாபம்? | எங்கும் | உலகமெல்லாம் |
| | | தழை நல்ல இன்பம் தலைப்பெய்து | விஸ்தீர்ணமாய் நன்றான ஸுகத்தைப் பெற்று |
| | | தழைக்க | வாழ்ந்திடுக. |

* * *—சில நாரைக் குழாங்கள் அருகே யிருந்து மந்த்ராலோசனை செய்யுமாபோலே தென்பட்டன; தன்னை முடிப்பதற்கு அவை ஆலோசிப்பதாகக் கொண்டு, அந்தோ! நான் முடிந்தேன்; இனி நீங்கள் திரண்டு பயனென்கொல்? என்கிறாள். பழன நன்னாரைக் குழாங்கள்காள்! இனி பயின்று என்?=பழனமாவது நீர்நிலம்; நீர் நிலங்களிலே உலாவுகின்ற நல்ல நாரைக் கூட்டங்களே! நீங்கள் ஒன்று கூடி ஆலோசிப்பதில் இனி என்ன பயன்? இதற்கு முன்பு ஏதேனும் பயனிருந்தாலும் இருக்கக்கூடும்; இதுகாறும் ஜீவித்திருக்க நசையிருந்தபடியாலே உங்களுடைய உத்யோகத்திற்கு ஏதேனும் பயன் ஸம்பாவிதமாகலாம்; இனி ஜீவித்திருக்குமாசையில்லை; நாமும் எழநண்ணி நம் வான நாடனோடு ஒன்றினோம்=நாமும் போக்கிலே யொருப்பட்டு *அயர்வறு மமரர்களதிபதியோடே ஒன்று சேர்ந்தோமானோம்; நாம் ஜீவிக்க வெண்ணி யிருந்தகாலம்போய் முடிகையிலே துணிந்தோம். ஆன பின்பு இனி நீங்கள் திரண்டு பிரயோஜனமில்லை.

இப்படி சொல்லக் கேட்ட நாரைகள் "நீர் யே திருப்புளியாழ்வாரடியிலேயே எழுந்தருளி யிருப்பது காண்கிறோமே; *எழ நாமும் நம் வான நாடனோடொன்றினோ மென்றது பொய்யுரையாகவன்றோ வுள்ளது என்று சொல்ல; அதற்கு மறுமொழி கூறுவது மூன்றாமடி;-[இழை நல்ல வாக்கையும் பையவே புயக்கற்றது.] உடல் ஒன்றே இங்குள்ளது; அதுவும் இதோ போய்க்கொண்டே யிருக்கிறது என்றபடி. இழை நல்ல ஆக்கை=இழையென்று ஆபரணத்திற்குப் பெயராதலால், ஆபரணங்களினாலே அழகியதான சரீரம் என்றபடி. அன்றியே, அவனுக்கு ஆபரணம்போலே ஸ்ப்ருஹணீயமான சரீரம் என்றுமாம். பையவே என்றது இன்று நாளையிலே யென்றபடி. புயக்கற்றது—பசையற்றது. தொலையப் போகிறது என்பது கருத்து.

தழை நல்ல இன்பம் தலைப்பெய்து எங்குந் தழைக்கவே=இதற்கு மூன்று ஆசிரியர்கள் மூன்று வகையாகக் கருத்துக் கூறினராம்; பெரியவர்களாயிருப்பார் பரமபத மெழுந்தருளும்போது *லோகாஸ் ஸமஸ்தாஸ் ஸுகிநோ பவந்து* என்றும் 'நாடு வாழ்க' வென்றும் மங்களாசாஸனம் செய்துகொண்டு போவார்களாதலால் ஆழ்வாரும் அப்படியே மங்களாசாஸனம் செய்து போவதாக ஆளவந்தார் நிர்வஹிப்பராம். அங்ஙனன்றிக்கே எம்பெருமானார் நிர்வஹிப்பதாவது, 'நான் பிறந்து பகவத் விஷயத்திலீடுபட்டுப் படாதபாடுகளும் பட்டேன்; இதோ நான் முடிகிறேன்; நான் பட்டபாடு பிறரொருவரும் பட வேண்டா' என்பதாக. இதிற் காட்டிலும் விலக்ஷணமாக பட்டர் நிர்வஹிப்பராம்—இதுவரையில் ஆழ்வார் படும்பாடுகளைக் கண்டு, ஐயோ! இவர் இவ்வளவு ஆர்த்திகளை யடைந்து வருந்துகிறாரே! நமக்கும் கண்டு பொறுக்க முடியாத ஆர்த்தியாயிருக்கிறதே! இவரை எம்பெருமான் விரைவாகத் திருவடி சேர்த்துக் கொள்ளலாகாதா? என்று பலர் நினைத்திருந்தார்களாம்; அப்படிப்பட்டவர்களை நோக்கி, இதோ நான் என் ஆர்த்தியெல்லாம் தீர்ந்து முடிந்து போகின்றேன்; என்

ஆர்த்தி கண்டு நோவுபட வேண்டாவினி நீங்கள்; ஆனந்தமாக இருங்கள்—என்கிறார்—என்பதாக. ... .... ... .... (10)

இன்பந்தலைப்பெய்தெங்குந்தழைத்த பல்லூழிக்கு *
தன்புகழேத்தத் தனக்கருள்செய்தமாயனை*
தென்குருகூர்ச்சடகோபன் சொல்லாயிரத்துள்ளிவை*
ஒன்பதோடொன்றுக்கும் மூவுலகுமுருகுமே, (11)

| | | | |
|---|---|---|---|
| இன்பம் தலைப் பெய்து | பேரின்பத்தை விளைவித்துக் கொண்டு | மாயனை | ஆச்சரிய குணசீலனான எம்பெருமானைக் குறித்து |
| எங்கும் தழைக்த | எங்கும் வியாபித்திருக்கின்ற | தென் குருகூர் சடகோபன் சொல் | ஆழ்வாரருளிச் செய்த |
| தன் புகழ் | எம்பெருமான்றனது கீர்த்திகளை | ஆயிரத்துள் | ஆயிரத்தினுள்ளே |
| பல் ஊழிக்கு ஏத்த | ஊழிதோறூழியோவாமல் துதிக்கும்படியாக | இவை ஒன்பதொடு ஒன்றுக்கு | இப்பதிகத்திற்கு |
| தனக்கு அருள் செய்த | தமக்குப் பரம கிருபை பண்ணின | மூ உலகும் உருகும் | மூவுலகத்தவரும் உருகுவார்கள். |

* * *—இப்பதிகத்திற் பாசுரம் நெஞ்சிலே பட்டால், ஆரேனுமாகிலும் உருகியே நிற்பார்கள் என்கிறார். கீழே ஆறும்பத்தில் *பொன்னுலகாளீரோ என்கிற பதிகத்திற்குப் பயனுரைத்த பாசுரத்தில் "ஊற்றின்கண் நுண்மணல்போலுருகா நிற்பர் நீராயே" என்றருளிச் செய்ததுமிங்குக் காண்க.

முதலடியை இரண்டுபடியாக அந்வயிக்கலாம்; எங்குந் தழைத்த இன்பம் தலைப் பெய்து—லோகமெல்லாம் வெள்ளமிட்ட அளவுகடந்த ப்ரீதியை யுடையராய்க் கொண்டு என்றபடி. அன்றியே, இன்பந் தலைப்பெய்து எங்குந் தழைத்த தன்புகழைப் பல்லூழிக்கு ஏத்த அருள் செய்த மாயனை என்றும் அந்வயிக்கலாம். இன்பத்தை யுண்டாக்கா நின்று கொண்டு எங்கும் வியாபித்திருக்கின்ற தன்னுடைய திருப்புகழ்களைக் காலதத்துவமுள்ளளவும் ஏத்தும்படியாகத் தமக்கு அருள் செய்த எம்பெருமானைக் குறித்து ஆழ்வாரருளிச் செய்த ஆயிர மென்க. "அநுபவிதாக்களுக்கு நிரவதிக ஸுகாவஹமாய் லோகமெல்லாம் நிறைந்த தன்புகழை ஸர்வகாலமும் ஏத்தும்படி தனக்கு அருள் செய்த மாயனை" என்பது ஆறாயிரப்படியருளிச் செயல். மாயனைக் குறித்து அருளிச்செய்த ஆயிரத்துள் இப்பதிகத்தில் முதலிட்டு ஒன்பது பாட்டும் ஒரு தட்டாய், பத்தாம் பாட்டு மாத்திரம் பரமவிலக்ஷணமாயிருக்கையாலே *ஒன்பதோடொன்றுக்கும்* என்னப்பட்டது. அப்படிப்பட்ட இப்பதிகத்திற்கு மூவுலகும் உருக வேண்டாவோ வென்கிறார்.

பலனுரைத்துத் தலைக்கட்டுகிற பாசுரத்தில் ஒருபலன் சொல்லாதே இங்ஙனே சொல்லலாமோ வென்னில்; இதுவும் பயனுரைத்தபடியேயாம்; ஒன்றுக்கும் கரையாதே உருகாதே கல்லாயிருப்பவர்களையும் உருகச் செய்வது ஒரு பலனன்றோ. (11)

**திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையுரையில்**

ஒன்பதாம்பத்து ஐந்தாந் திருவாய்மொழி

முற்றிற்று.

நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஆறாந்திருவாய்மொழி—உருகுமால்நெஞ்சம்.

உரையவதாரிகை:— கீழ்ப்பதிகத்தின் முடிவிலே *எழுநண்ணிநாமும் நம்வானநாடனோடொன்றினோம்* என்றருளிச்செய்த பாசுரத்தைக் காணுமிடத்து ஆழ்வார் அந்தப் பாசுரத்தோடு திருவாய்மொழியைத் தலைக்கட்டி விட்டதாகவும், இனிப்பாசுரங்களருளிச்செய்ய ஆழ்வார் இந்நிலத்தில் இல்லையாகவும் தோன்ற நின்றது. ஆனாலும் ஆழ்வார் இன்னமும் இந்நிலத்திலேயே திருப்புளியாழ்வாரடியிலேயே யெழுந்தருளியிருந்து மேலே பாசுரங்களருளிச்செய்ய ப்ராப்தமாகிறது. எம்பெருமான் வந்து முகங்காட்டி ஆழ்வாரைத் தரிக்கச் செய்தானோ? அதனால் தரித்து நின்று பேசுகிறாரோவென்னில்; இல்லை; எம்பெருமான் வந்து முகங்காட்டி இவரைப் பெறுவது, இல்லையாகில் இழப்பது என்னும்படியான நிலைமையாயிருக்கச் செய்தேயும் அவன் வந்து முகங்காட்டாமலே ஒருவிரகு செய்தானாயிற்று; அந்த விரகுதான் ஏதென்னில்; கீழ் எட்டாம்பத்தில் *இருத்தும் வியந்தென்னை* என்கிற பதிகத்திலே ஒரு விலக்ஷணமான ஸம்ச்லேஷம் நடந்திருந்ததே; அதை நினைப்பூட்டி ஒருவாறு தரிக்கச்செய்தானாயிற்று எம்பெருமான்; அதுதான் அவன் செய்த விரகு. அதனால் ஆழ்வார் ஒருவாறு தரித்திருந்து இப்பதிகமருளிச் செய்கிறபடி.

இதற்கு மூன்றுவிதமான காரணங்களை நம்பிள்ளை யருளிச்செய்கிறார்;—

(1) ஆழ்வார் முதற்பதிகமே தொடங்கி *குருகூர்ச்சடகோபன்சொல்—ஆயிரம்* என்று, எம்பெருமானுக்கு ஒரு ஆயிரம் பாசுரம்பேசித் தலைக்கட்டவேணுமென்று ஸங்கல்பித்துக் கொண்டாராகையாலே அப்படி அவர் தாம் அதிகரித்த கைங்கரியத்தை முற்றமுடிய நடத்துகைக்கீடான அத்ருஷ்டத்தையுடையராயிருந்தார்.

(2) ஆழ்வாருடைய ஈரச்சொற்களை இன்னமுங் கேட்கவேணுமென்று பாரித்துக் கொண்டிருக்கிற எம்பெருமானுடைய பாக்கியமுமொன்றுண்டு.

(3). *தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்* என்று ஆழ்வார்தாமே பணித்தபடி இப்பாசுரங்கொண்டு போதுபோக்கவிருக்கிற ஸம்ஸாரி சேதநர்களின் பாக்கியமுமொன்றுண்டே.

ஆக இம்மூன்று காரணங்களினாலும் ஆழ்வார் இன்னமும் இந்நிலத்தில் தரித்துநிற்க ப்ராப்தமாகி, போனவுயிர் மீளும்படி *இருத்தும்வியந்தென்கிற வொருபதிகத்திலே நடந்த கலவி நினைவுக்கு விஷயமாயிற்று.

அசோகவனத்திலே திருவடிசென்று கிட்டினபோது முன்பு நெடுநாள்பட்ட க்லேசமெல்லாம் கிடக்கச்செய்தே. பெருமாளும் வந்து முகங்காட்டாதிருக்கச் செய்தேயும், வனவாஸத்திற்கு முன்பு திருவயோத்யையிலே பன்னிரண்டாண்டு பெருமாளும் தானும் ஏகபோகமாகவிருந்து பேரின்பம் நுகர்ந்த நுகர்ச்சி நினைவுக்கு விஷயமாகி *ஸமா த்வாதச தத்ராஹம் ராகவஸ்ய நிவேசநே, புஞ்ஜாநா அமாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ* என்று அதைச்சொல்லிப் போதுபோக்கினாப்போலே, *இருத்தும்வியந்துபதிகத்திலே "மூவுலகும் தன்னெறியாவயிற்றிற் கொண்டு—சிறியேனுடைச்சிந்தையுள்—நின்றொழிந்தான்" என்னும்படி முறைகெடப்பரிமாறின பரிமாற்றம் நினைவுக்கு விஷயமாகி, அது கேவலம் ஸ்ம்ருதி மாத்திரமேயல்லாமல் இப்போதைய அநுபவமேயென்றே கொள்ளலாம்படியாக அந்த சீல குணத்தைப் பேசி சிதிலராகிறார்.

இப்படி பழையகலவியை நினைப்பூட்டி ஒருவாறு தரித்து நிற்கச்செய்து பேசுவிக்கிறவன் திருக்காட்கரை யெம்பெருமான் போலும். ஆகவே திருக்காட் கரைப்பெருமான் விஷயமாக அவதரிக்கின்றது இப்பதிகம். மலைநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றாயிற்று=திருக்காட்கரை யென்னும் தலம்.

உருகுமால்நெஞ்சம் உயிரின்பரமன்றி*
பெருகுமால்வேட்கையும் என்செய்கேன்தொண்டனேன்*
தெருவெல்லாங்காவிகமழ் திருக்காட்கரை
மருவியமாயன்றன் மாயம்நினைதொறே.

(1)

| | | | |
|---|---|---|---|
| தெரு எல்லாம் காவி கமழ் | தெருவுகள் தோறும் செங்கழுநீர்ப்பூ வாஸிக்கப்பெற்ற | நெஞ்சம் உருகும் | நெஞ்சு கட்டுக்குலைந்து உருகாநின்றது; |
| திருக் காட்கரை | திருக்காட்கரையென்னுந் திருப்பதியிலே | உயிரின் பரம் அன்றி | ஆத்மாவுக்குத் தாங்கக்கூடிய அளவல்லாமல் |
| மருவிய | பொருந்திவர்த்திக்கிற | வேட்கை பெருகும் | ஆசை கரைபுரண்டு செல்லாநின்றது; |
| மாயன் தன் மாயம் | எம்பெருமானுடையஆச்சரியமான ஸௌந்தர்யசீலாதிகளை | தொண்டனேன் என் செய்கேன் | சபலனான நான் என்ன செய்யக் கடவேன்? |
| நினைதொறு | நினைக்கிறபோதெல்லாம் | | |

***—திருக்காட்கரை யெம்பெருமானுடைய ஆச்சரியமான பரிமாற்றங்களை நினைக்கும் போதெல்லாம் நெஞ்சு நீர்ப்பண்டமாகின்றதே யென்கிறார். நெஞ்சம் உருகுமால்=அநுபவத்திற்கு முதன்மையான கருவி நெஞ்சன்றோ; அதுவாயிற்று சிதிலமாகின்றது. அநுபவிக்கைக்கும் அநுபவித்துக் களிக்கைக்கும் முந்துறமுன்னம் நெஞ்சுவேணுமே; அது சிதிலமாயொழிந்தால் என்ன வுண்டு? பெருக்காற்றிலே நீஞ்சப் புகுந்தவனுக்கு முதலடியிலேயே தெப்பம் ஒழுகத் தொடங்கினால் என்செய்வது? ப்ராதாநோபகரணமான நெஞ்சு அழிகின்றதே! வேட்கையும் உயிரின் பரமன்றிப் பெருகுமால்—ஆத்மாவால் தாங்க வொண்ணாதபடி அபிநிவேசம் பெருகுகின்றதே!. ஆற்றுப் பெருக்குப்போலே மேன்மேலும் பெருகி வருகின்ற காதல் அணுபரிமாணமான ஆத்ம வஸ்துவின் அளவிதன்றே!. அடிதோறும் ஆல்! ஆல்! என்று விஷாதஸூசனம்.

என் செய்கேன் தொண்டனேன்! = நெஞ்சு உருகாதபடி செய்யவும் வேட்கை பெருகாதபடி செய்யவும் ஒருபாயமறிகின்றிலேன். அவனுடைய திருக்குணங்களைத் தவிர்த்தாலன்றோ இவை செய்யலாவது. நெஞ்சு உருகுகைக்கும் வேட்கை பெருகுகைக்கும் ஹேது சொல்லுகிறது மேல் தெருவெல்லாங் காவிகமழென்று தொடங்கி. குறுந்தெருவோடு நெடுந்தெருவோடு வாசியற எங்கும் செங்கழுநீரின் நறுமணம் கமழப்பெற்றது திருக்காட்கரை; வெளியே இப்படிபரிமளமானால் உள்ளே *ஸர்வகந்தஃ* என்னும்படியானவனுடைய பரிமளம் வாசாமகோசரம். அவனே மாயன்—ஸௌந்தர்யம் ஸௌசீல்யம் முதலிய குணங்களினால் பிறரைப் பிச்சேற்றவல்லவன். அப்படிப் பட்டவனுடைய மாயம்—கிட்டினபோது தாழநின்று பரிமாறின சில குணம்; அதனை நினைதொறும் உருகுமால் நெஞ்சம்—என்று முதலடியோடே அந்வயிப்பது.

நினைதோறும் சொல்லுந்தோறும் நெஞ்சிடிந்துகும்*
வினைகொள்சீர்பாடிலும் வேமெனதாருயிர்*
சுனைகொள்பூஞ்சோலைத் தென்காட்கரையென்னப்பா*
நினைகிலேன் நானுனக்காட்செய்யும்நீர்மையே.

(2)

| | |
|---|---|
| சுனை கொள் பூஞ்சோலை | தடாகங்களையுடைய பூஞ்சோலைகளையுடைத்தான |
| தென் காட்கரை | திருக்காட்கரை யிலெழுந்தருளியிருக்கிற |
| என் அப்பா | எம்பெருமானே! |
| வினை கொள் சீர் | பாபங்களை க கொள்ளை கொள்ளுமதான (உனது) திருக்குணங்களை |
| நினைதொறும் | நினைக்கிற போதெல்லாம் |
| நெஞ்சு இடிந்து | நெஞ்சானது சிதிலமாகி |
| சொல்லுந் தொறும் உகும் | (அக்குணங்களைச்) சொல்லத் தொடங்கின போதெல்லாம (அந்தநெஞ்சானது) நீராயுருகாநின்றது; |
| பாடிலும் | (அக்குணங்களைப்) பாடத் தொடங்கினாலோ |
| எனது ஆர் உயிர் வேம் | என்னுடைய அருமையான ஆத்ம வஸ்துவானது வேவாநின்றது; |
| நான் | இப்படியாகப் பெற்ற நான் |
| உனக்கு ஆள் செய்யும் நீர்மை நினைகிலேன் | உனக்குக் கைங்கரியம்பண்ணும் விதத்தை அறிகின்றிலேன். |

***—திருக்காட்கரை யெம்பெருமானை நோக்கி 'உன்னோடு நான் கலந்து பரிமாறின பரிமாற்றத்தை நினைக்க சக்தனாகின்றிலேன்!' என்கிறார். நினைதொறும் நெஞ்சு இடிந்து உகும்=குண சேஷ்டிதங்களை நினைப்பதாகத் தொடங்கினால் அந்நினைவு மாறாதே செல்ல முடியாதபடி பலஹானி மிகும். ஆனாலும் மறக்கமாட்டார்; மறுபடியும் நினைக்கத் தொடங்குவர்; அந்த நினைவும் நெடுகச் சென்று தலைக்கட்டாது. இப்படி எத்தனை காலம் நினைக்கப் புக்கது! எத்தனை காலம் மீண்டது!. இது தோன்ற நினைதோறும் என்கிறார். [சொல்லுந்தோறும்] நெஞ்சால் நினைக்கவே முடியாத விஷயம் வாயாற் சொல்லவொண்ணாதென்பது சொல்லவேணுமோ? மநஸ் ஸஹகாரமின்றிக்கே யிருந்தாலும் அஹ்ருதயமாகவே சொல்லிக் கொண்டிருப்பரே ஆழ்வார். [இவர் பேசுகிறாரல்லர்; இவருடைய வாக்கும் பேசிக்கொண்டே யிருக்குமென்க.] அப்படி பேசும்போது அப்பேச்சு செவி வழியாலே உள்ளே புகுந்து ஊற்றிருந்து குணாதிக விஷயமாகையாலே நெஞ்சையழிக்கும்; நெஞ்சு இடிந்து உகும்—நெஞ்சுகட்டுக் குலைந்து நீராகாநின்றது. இங்கே ஈடு—பெருக்காற்றின் கரை யிடிந்து பின் நீராய்க் கரைந்து போமாபோலே ஓரவயவியாகக்காண வொண்ணாதபடி உக்குப் போகாநின்றது."

வினைகோள் சீர்பாடிலும் வேம் எனதாருயிர்= 'வினைகொள்' என்பதற்கு இரண்டு படியாகப் பொருள் கொள்வர்; வினையென்று தீவினைகளைச் சொல்லிற்றாகக் கொண்டு பாபஹரமான கல்யாண குணமென்பது ஒருபொருள். வினையென்று பொதுவாகக் காரியத்தைச் சொல்லுகிற சொல்லாகையாலே எம்பெருமானுடைய சேஷ்டிதத்தைச் சொல்லுவதாக இங்குக் கொள்ளலாம். குண ஸாமாந்யபரமான சீர் என்னுஞ்சொல் இங்கு சில குணத்தைச் சொல்லுகிறது. சேஷ்டிதத்தைக் கொண்ட சில குணமாவது—தாழ நின்று பரிமாறிக் காட்டின சில குணம் என்பது மற்றொரு பொருள். அதைப் பாடினாலும் எனதாருயிர் வேம்—அதாஹ்யமன்று கீதையில் சொல்லப்பட்ட ஆத்ம வஸ்துவும் தஹிக்கப்பட்டதாகிறது. எல்லாவற்றுக்கும் குளிர்ச்சியைப் பண்ணக் கடவதான பனி தாமரையை மாத்திரம் கருகப்பண்ணுமாபோலே ஸகலர்க்கும் ஆர்த்தி ஹரமான குணங்கள் எனக்கு ஆர்த்தியை விளைவிக்கின்றன என்றாராயிற்று. ஆகவே நினைகிலேன் நானுனக்காட் செய்யும் நீர்மை—நீ என்னிடம் தாழ நின்று ஆட்செய்து காட்டின சில குணத்தை நெஞ்சாலும் நினைக்கமாட்டுகின்றிலேன் என்றபடி. நீயெனக்காட் செய்யும் நீர்மை யென்ன வேண்டுமிடத்து 'நானுனக்காட் செய்யும் நீர்மை யென்றது எம்பெருமானுடைய உக்தியின் அநுகாரமிருக்கிறபடி. எம்பெருமானே! நீ என்னிடம் தாழ நின்று 'நான் உமக்கு ஆட்செய்கிறேன்காணும்' என்று சொல்லுகிறாயே! இந்தச் சொல்லும் மருமத்தைப் பிளக்கின்றதே! என்றாராயிற்று. ... (2)

நீர்மையால்நெஞ்சம் வஞ்சித்துப்புகுந்து*என்னை
ஈர்மைசெய்து என்னுயிராயென்னுயிருண்டான்*
சீர்மல்குசோலைத் தென்காட்கரையென்னப்பன்*
கார்முகில்வண்ணன்றன் கள்வமறிகிலேன். (3)

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சம் வஞ்சித்து புகுந்து | ஏதோ வஞ்சனையினால் என்னெஞ்சினுள்ளே புகுந்து | சீர்மல்கு சோலை தென் காட்கரை என் அப்பன் | அழகு நிரம்பிய சோலைகளால் சூழப்பட்ட திருக்காட்கரையிலெழுந்தருளியிருக்கும் பெருமானும் |
| நீர்மையால் என்னை ஈர்மை செய்து | முறைகெடப் பரிமாறும் சீல குணத்தினால் என்னை நலிந்து | கார்முகில் வண்ணன் தன் | காளமேக வண்ணனுமானபரம புருஷனுடைய |
| என் உயிர் ஆய் என் உயிர் உண்டான் | எனக்குத் தாரகனுயிருப்பவன் போல என்னை யழித்தவனும் | கள்வம் | க்ருத்ரிமத்தை |
| | | அறிகிலேன் | தெரிந்து கொள்ள மாட்டாதவனுயிருக்கிறேன். |

***—கீழ்ப்பாட்டின் ஈற்றடிக்கு வியாக்கியானமாயிருக்கிறது இப்பாட்டெல்லாம். அடிமை கொளுவதாக ஒரு வியாஜமிட்டு உள்ளே புகுந்து தன் படிகளைக் காட்டி ஸர்வஸ்வாபஹாரம் பண்ணின வாற்றை அந்தோ! நினைக்க மாட்டிற்றிலேனென்கிறார். "வஞ்சித்து நெஞ்சம் புகுந்து என்னை நீர்மையால் ஈர்மை செய்து" என்று அந்வயித்துப் பொருள் கொள்வது சுவைமிக்கது. வஞ்சித்து நெஞ்சம் புகுகையாவது—தான் சேஷியும் நான் சேஷனுமான முறை தவறாது பரிமாறுவதாகவே சொல்லி நெஞ்சை இசையப்பண்ணிப் புகுகை. முறை கேடாகப் பரிமாறப்போகிறேனென்று முன்னமே சொன்னால் இவர்தாம் இசைய மாட்டாரென்று எண்ணி முறை கெடாது பரிமாறுவதாகப் பொய் சொல்லி உள்ளே புகுந்தானாயிற்று. புகுந்தபின் நீர்மையைக் காட்டத் தொடங்கினான்; அதாவது, தான் தாழ நின்று பரிமாறத் தொடங்கினானென்கை. அதனால் நெஞ்சை யீடுபடுத்தினானாயிற்று. ஈர்மை செய்து என்றது ஈருந்தன்மைகளைச் செய்து என்றபடி; இருபிளவாக்கி, ஈடுபடுத்தியென்க. நீராம்படி பண்ணி யென்பது பரமதாற்பரியம். என்னுயிராயென்னுயிருண்டான்—எனக்குத் தாரகனைப் போலே புகுந்து என்னையழித்தானென்கை. எனக்குத் தன்னாலல்லது செல்லாதபடி பண்ணி என்னைப் புஜிப்பதுஞ் செய்தான் என்றுமாம்.

இப்படிச் செய்தவன் யாவனென்ன; சீர்மல்கு சோலைத் தென்காட்கரையென்னப்பன் கார்முகில் வண்ணன் = என்னோடு கலந்து என்னுடைய நீர்மையையும் கொள்ளை கொண்டதனால் கடலைக் கழுத்தளவாகப் பருகின காளமேகம்போலே புகர்படைத்து விளங்குகின்ற திருக்காட்கரையப்பன். அவனுடைய கள்வமறிகிலேன் = ஸர்வஸ்மாத்பரனானவன் இங்ஙனே தாழநின்று பரிமாறுகை அஸம்பாவிதம்; நான் மருண்டு பேசுகிறேனோ! என்கிறார். ... .. (3)

அறிகிலேன்தன்னுள் அனைத்துலகும் நிற்க*
நெறிமையால்தானும் அவற்றுள் நிற்கும்பிரான்*
வெறிகமழ்சோலைத் தென்காட்கரையென்னப்பன்*
சிறியவென்னாருயிருண்ட திருவருளே. (4)

| | | | |
|---|---|---|---|
| தன் உள் | தனது ஸங்கல்பத்திலே | நெறிமையால் | சரீராத்மபாவ ஸம்பந்த மடியான சேஷ சேஷி பாவமாகிற முறைமை தவறாமல் |
| அனைத்து உலகும் நிற்க | ஸமஸ்த லோக பதார்த்தங்களும் தரிப்புற்றிருக்க, | | |
| தானும் | இப்படி அவற்றை யெல்லாம் தரித்திருக்கிற தானும் | அவற்றுள் நிற்கும் பிரான் | அவற்றுக்குள்ளே நிற்கும் உபகாரகனாய், |

| | | | |
|---|---|---|---|
| வெறி கமழ் சோலை | பரிமளம் மிக்க சோலைகளை யுடைய | ஆர் உயிர் | ஆத்ம வஸ்துவை |
| | | உண்ட | மேல் விழுந்து அநுபவித்த |
| தென் காட்கரை என் அப்பன்—; | | திரு அருள் | வியாமோஹத்தை |
| சிறிய என் | மிகவும் க்ஷுத்ரனை என்னுடைய | அறிகிலேன் | அறிகின்றிலேன். |

***—தான் சேஷியாயும் ஜகத்தெல்லாம் சேஷபூதமாயும் முறைதப்பாமல் எல்லாரோடுங் கலக்கிறவன் * நீசனேன்நிறைவொன்றுமிலேனென்ன நின்ற அதிக்ஷுத்ரனை என் பக்கலிலே காட்டும் வியாமோஹம் இன்னதென்று என்னால் சொல்லமுடிகிறதில்லையே யென்று தடுமாறுகிறார். "சிறிய வென்னாருயிருண்ட திருவருளை அறிகிலேன்" என்று அந்வயித்துப் பொருள் கொள்ளுகிறவிதமொன்று கிடக்க, அறிகிலேன் என்று பாட்டினடியிலேயுள்ளதைத் தனிப்பட அந்வயிப்பது மொருபுடையுண்டு; "உகப்பாலே செய்தானோ? இவ்வஸ்துவை யழிக்கைக்குச் செய்தானோ? அறிகிறிலேன்" என்பர் நம்பிள்ளை. இப்படி வினைமுற்றை தனியே அந்வயித்து விட்டால் "சிறிய வென்னாருயிருண்ட திருவருளே" என்றதற்கு வினைமுற்று ஏது? என்னில்; வினைமுற்று வேண்டாவே; திருவருளே! என்று ஈடுபாடாக முடிகிறபடி.

தன்னுள் அனைத்துலகும் நிற்க தானும் நெறிமையால் அவற்றுள்நிற்கும் பிரான்=உலகங்களெல்லாம் தன்னுடைய ஸங்கல்பத்தைப் பற்றிக்கிடக்க, தான் அவற்றினுள்ளே தன் சேஷித்வமுறை தப்பாதபடி நிற்குமவன். இப்படிப்பட்டவன் வெறிகமழ் சோலைத் தென் காட்கரை யென்னப்பனாயிருந்து கொண்டு சிறியேனை என்னுடைய நற்சீவனைக் கபளீகரித்த வியாமோஹம் என்னே!. ... ... ... (4)

திருவருள்செய்பவன்போல என்னுள்புகுந்து*
உருவமுமாருயிரும் உடனேயுண்டான்*
திருவளர்சோலைத் தேன்காட்கரையென்னப்பன்*
கருவளர்மேனி என்கண்ணன்கள்வங்களே. (5)

| | | | |
|---|---|---|---|
| திரு அருள்செய்பவன் போல | என்னிடமிருந்து அடிமை கொள்ளுகையாகிற திருவருளைச் செய்பவன் போல அபிநயம் காட்டி | திரு வளர் சோலை | அழகு மிகுந்த சோலைகளை யுடைய |
| | | தென் காட்கரை என் அப்பன்—; | |
| என் உள் புகுந்து | என் நெஞ்சிலே புகுந்து... | கரு வளர் மேனி | சாமநிறம் விஞ்சின திருமேனியை யுடையவனாய்க் கொண்டு |
| உருவமும் ஆர் உயிரும் | உடலையு முயிரையும் | என் கண்ணன் | எனக்கு விதேயனாயிருந்த அப்பெருமானுடைய |
| உடனே உண்டான் | ஹேய உபாதேய விபாக மில்லாதபடி ஏகரீதியாக அனுபவித்தான்; | கள்வங்களே | வஞ்சனை யிருக்கிறபடி என்னே!. |

***—எம்பெருமான் என்னை யடிமை கொள்வான்போலே புகுந்து என்சரீரத்தையும் ஆத்மாவையும் ஒக்க புஜியா நின்றானே! இது என்ன வியாமோஹம்! என்று வியக்கிறார். திருவருள் செய்பவன்போல என்னுள் புகுந்து—அடிமை கொள்ளுகையையே திருவருள் செய்கையாக ஆழ்வார் திருவுள்ளம் பற்றியிருப்பது. என்னிடத்தில் கைங்கர்ய வ்ருத்தி கொள்ளுகையாகிற திருவருளைச் செய்பவன்போல உள்ளே புகுந்து அருளைத்தான் செய்கையன்றிக்கே தான் பெற்றானாயிரா நின்றான். *வழுவிலாவடிமை செய்ய வேண்டும் நாம்* என்று நான் பார்த்தவத்தனை; அவன் இங்ஙனே பாரித்துப் பேறு தலைக்கட்டப் பெற்றான். அதாவதென்னென்னில்; [உருவமும் ஆருயிரும் உடனே யுண்டான்.] திருவிருத்த முதற் பாட்டிலே "அழுக்குடம்பு" என்று தாம் வெறுத்ததை அவன் விரும்பப்புகுந்தான். இங்கே நம்பிள்ளை

வீடு வியக்கத்தக்கது;—"அவனங்கீகாரத்துக்கு முன்பு இவர் தேஹத்தையே விரும்பிப் போந்தார்; அவன் இவரை யங்கீகரித்த பின்பு இவர் தம் தேஹத்தை வெறுக்க அவன் இவருடைய தேஹத்தை விரும்பப் புக்கான்; இவர்க்கு அவனோட்டை ஸஹவாஸம் ஸ்வரூப ஜ்ஞானத்துக்கு உடலாய்த்து; அவனுக்கு இவரோட்டை ஸஹவாஸம் தேஹாத்மாபிமாநத்துக்கு உடலாய்து" என்று. ஆருயிரும் உடனே யுண்டானென்கையாலே—தேஹமென்று ஹேயதாபுத்தியும் ஆத்மாவென்று உபாதேயதாபுத்தியு மில்லாமல் இரண்டிலும் துல்யமான ப்ரதிபத்தியைஃய கொண்டானென்பது விளங்கும்.

இப்படி உண்டவன் யாவனென்ன, திருவளர்சோலைத் தென்காட்கரை யென்னப்பன் என்கிறது. ஆழ்வாரை புஜித்து அவன் செழிப்புக் கொண்டமை அவனளவிலே நில்லாமல் அவனுறையு மூரிலுள்ள சோலைகளிலும் ஏறிப்பாய்ந்தது போலும். (5)

என்கண்ணன்கள்வம் எனக்குச்செம்மாய்நிற்கும்*
அங்கண்ணனுண்ட என்னாருயிர்க்கோதிது*
புன்கண்மையெய்திப் புலம்பியிராப்பகல்*
என்கண்ணனென்று அவன்காட்கரையேத்துமே. (6)

| | | | |
|---|---|---|---|
| என்கண்ணன் | என் பக்கல் பிச்சேறின கண்ணனுடைய | என் ஆர் உயிர் இது | இந்த என்னாத்மாவானது |
| கள்வம் | வஞ்சனைகளானவை | புன் கண்மை எய்தி | தைன்யத்தையடைந்ததாகி |
| எனக்கு | கள்ளங்கவடறியாத வெனக்கு | | |
| செம் ஆய நிற்கும் | செம்மையாகவே ஆர்ஜவமென்றே தோன்றா நிற்கும்; | என் கண்ணன் என்று இராபகல் புலம்பி | எனக்கு விதேயனானவனே! யென்று இரவும் பகலும் கதறியழுது |
| அங்கண்ணன் | அவன் வியாமோஹத்தாலே மிகவும் சபலனாய்க் கொண்டு | அவன் காட்கரை ஏத்தும் | அவனுடைய திருக்காட்கரைப் பதியையே சொல்லா நின்றது. |
| உண்ட | புஜிக்கப்பெற்ற | | |
| கோது | (அதனாலே) நிஸ்ஸாரமான | | |

* * *—ஒருவனைக் கள்ளனென்றறிந்தால் அவனுடைய ஸஹவாஸத்தை விட்டுவிலகுதல் போல, எம்பெருமானுடைய வஞ்சகங்களை யறிந்த நீர் அவனை விட்டு அகல வேண்டாவோ வென்ன; என் செய்வேன்? அவனைக் கண்டவாறே அவனது வஞ்சனைகளை மெய்யென்று கொள்ளும்படி நேர்ந்து விடுகிறதே யென்கிறார். என் கண்ணன் கள்வம் எனக்குச் செம்மாய் நிற்கும்—என்னோடு கலக்கிறபோது எனக்கே அற்றுத் தீர்ந்தவனாகக் காணப்படுகின்ற அவனுடைய வஞ்சனங்களானவை எனக்கு ருஜுவாயே தோற்றுகின்றன. ஒருநாள் அவன் கண்ணிலே யகப்பட்டால் பின்னை மீளமாட்டேன்; அவன் முகத்திலே விழித்தவாறே அவன் செய்யுமவையெல்லாம் மெய்யாகவே தோற்று மெனக்கு. "எனக்குச் செம்மாய் நிற்கு மென்றத்தை எனக்குச் சேமமாயிருக்கு மென்று ஒரு தமிழன் நிர்வஹித்தான்" என்பது ஈடு. கீழ்ப்பாட்டின் முடிவு 'நங்கண்ணன் கள்வங்களே' என்றிருக்கையாலே இப்பாட்டின் தொடக்கமும் அந்தாதித் தொடைக்குச் சேர அப்படியே யிருக்க வேண்டாவோ வென்று சங்கித்து அதனால் குறையொன்றுமில்லை; பொருளிசை யந்தாதியாயிருக்கும்—என்று ஒரு ஸமாதான மருளிச் செய்து, இரண்டிடங்களிலும் ஒரே பாடமாகவுமாம் என்றுமருளிச் செய்வர் நம்பிள்ளை.

என் ஆருயிர் அங்கண்ணனுண்ட கோது—இந்த என் ஆத்மாவானது வ்யாமோஹத்தினெல்லையிலே நின்ற அவனால் புஜிக்கப்பட்டு நிஸ்ஸாரமாயிற்று என்றபடி. அங்கண்ணன் என்றதற்கு அதிசபலன் என்று பொருள். "அதிப்ரவணரை அங்கண்ணர் என்னக்கடவதிறே" என்பர் நம்பிள்ளை.

இப்படி என்னுருயிர் கோதாய்ப்போனாலும் "உள்ளம் புகுந்து என்னை நைவித்து நாளுமுயிர்ப்பெய்து கூத்தாட்டுக் காணும்" என்று ஆண்டாளருளிச் செய்த கணக்கிலே பின்னையும் உயிர்க்குச் சிறிது ஸாரங்கொடுத்துப் பரிமாறத் தொடங்கவே, புன்கண்மை யெய்தி—தைந்யத்தை யடைந்ததாயிற்று இவ்வாத்மா. அதனாலே, என் கண்ணனென்று இராப்பகல் புலம்பி அவன் காட்கரை யேத்தும்—முன்பு எனக்கு விதேயனாயிருந்தவனென்று சொல்லி இரவும் பகலும் கூப்பிட்டு அவனுறையுமிடமான திருக்காட்கரைத் திருப்பதியைக் கொண்டாடா நின்றது. பசித்தவன் பழங்கணக்குப் பார்க்கிற ரீதிபோலும். ... (6)

காட்கரையேத்தும் அதனுள்கண்ணாவென்னும்*
வேட்கைநோய்கூர நினைந்துகரைந்துகும்*
ஆட்கொள்வானொத்து என்னுயிருண்டமாயனால்*
கோட்குறைபட்டது என்னாருயிர்கோளுண்டே. (7)

| | | | |
|---|---|---|---|
| ஆள் கொள்வான் ஒத்து | அடிமை கொள்வாரைப் போலே (புகுந்து) | காட்கரை ஏத்தும் | அவனுறையுமிடமான திருக் காட்கரையைப் புகழா நின்றது; |
| என் உயிர் உண்ட மாயனால் | என்னாத்மாவைக் கொள்ளை கொண்ட மாயப்பெருமானாலே | அதனுள் கண்ணா என்னும் | அத் திருப்பதியிலே நிற்கிற கண்ணா வென்று அழையா நின்றது; (அவ்வளவுமன்றிக்கே) |
| கோள் உண்டே | புஜித்துக் கொள்ளப்படச்செய்தேயும் | வேட்கை நோய் கூர | காதல் நோய் மிகப்பெற்று |
| கோள் குறை பட்டது | போகம் மிச்சப்பட்டிருக்கிறதென்னலாம்படியிருக்கிற | நினைந்து கரைந்து உகும் | (அவனுடைய பரிமாற்றங்களை) நினைத்து உருகி சிதிலமாகா நின்றது. |
| என் ஆருயிர் | என்னாத்மாவானது | | |

***—என்னை யடிமை கொள்வாரைப்போலே வந்து புகுந்து என்னுயிரை மாளப் புஜித்து, பின்னையும் புஜியாதான்போலே கிடந்து படாநின்றானென்கிறார். காட்கரையேத்தும்—அவனைக் காட்டிலும் அவனிருக்குமூரிலே ஆசை மிகுந்து அவ்வூரையே யேத்தாநின்றது என்னுருயிர். ஊருக்கு அவனாலே யேற்றமாய், அவனுக்கு ஊராலே யேற்றமா யிருக்கையாலே ஊரையுஞ் சொல்லி அவனையுஞ் சொல்ல வேண்டி யிருத்தலால் அதனுள் கண்ணா வென்னும்—திருக்காட்கரைப் பெருமானே! என்று அவ்வூரின் ஸம்பந்தத்தை யிட்டு அவனையு மேத்தாநின்றது. பரமபதநாதனென்றால் ஏற்றமில்லையே; அவ்விடத்திலும் இவ்விடத்தில் வாஸத்தாலே ஏற்றம் பெறுவோமென்று வந்து இங்கே நின்று ஏற்றம் பெற்றனனாதலால்.

வேட்கை நோய்கூர நினைந்து கரைந்து உகும்—அவ்வூரையும் அவ்வூர்ப் பெருமானையும் நினைத்த மாத்திரத்திலேயே காதல் நோய் அதிகரிக்கும்; அதனால் த்ரவீபாவமும் சைதில்யமும் விளையும். இப்படியெல்லாமாகைக்கு அடியேதென்னில்; பின்னடிகளால் அது சொல்லுகிறது. "கீழ் திருவருள் என்று மறைத்துச் சொன்னதை வெளியிடுகிறார்" என்பர் நம்பிள்ளை. அடிமை கொள்வாரைப்போலே புகுந்து என்னை சூன்யமாக்கின ஆச்சர்ய பூதனாலே என்னுருயிர் கோளுண்டே கோள் குறைபட்டது—என்னாத்மா நிச்சேஷமாக புஜிக்கப்படா நிற்கச்செய்தேயும் இத்தலையிலே சிறிது சேஷித்தது. இங்ஙனே சொல்லுகைக்குக் கருத்தென்? என்னில்; இன்னமுமிருந்து கிலேசப்படக் காண்கையாலே சிறிது சேஷமிருந்தாக வேண்டுமே; அது கொண்டு சொல்லுகிறது. ... ... (7)

கோளுண்டானன்றிவந்து என்னுயிர்தானுண்டான்*
நாளுநாள் வந்து என்னைமுற்றவுந்தானுண்டான்*
காளநீர்மேகத் தென்காட்கரையென்னப்பற்கு*
ஆளன்றேபட்டது என்னாருயிர்பட்டதே. (8)

| | | | |
|---|---|---|---|
| கோள் உண்டான் அன்றி வந்து | என்பக்கல் ஒருபகாரம் கொண்டல்லாமல் நிர்ஹேதுகமாக வந்து | காளம் நீர் மேகம் | கறுத்து நீர் கொண்டெழுந்த மேகம் போன்ற வடிவையுடைய |
| என்உயிர் தான் உண்டான் | என்னாத்மாவை யநுபவித்தான்; (அவ்வளவேயன்றியே) | தென் காட்கரை என் அப்பற்கு | திருக்காட்கரை யெம்பெருமானுக்கு |
| நாள் நாளும்வந்து | நாள் தோறும் வந்து | ஆள் பட்டது அன்றே | நான் அடிமைப் பட்டவத்தனையே யன்றோ; |
| என்னை முற்றவும் தான் உண்டான் | என்னைச் சிறிதும் சேஷியாதபடி பூர்த்தியாக புஜித்தான்; | என் ஆருயிர் பட்டதே | என்னை இங்ஙனே படுத்த வேணுமோ? |

***—எம்பெருமானை யநுபவிக்குமாழ்வார்க்கு "எப்பொழுதும் நாள் திங்களாண்டூழி யூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமே" என்னும்படி நித்யாபூர்வமாயிருக்கிறாப்போலே எம்பெருமான்றனக்கும் ஆழ்வாருடைய அநுபவம் நித்யாபூர்வமாயிருக்கும்படி சொல்லுகிறது இப்பாட்டில். நாள்தோறும் என்னை புஜியாநின்றாலும் பெறாப்பேறு பெற்றாப்போலே வந்து புஜியாநின்ற இப்பெருமானுடைய குணத்தை என்னென்பேன்! என்கிறார். முதலடிக்கு மூன்றுவகையாகப் பொருளருளிச் செய்வர்; [கோளுண்டானன்றிவந்து என்னுயிர் தானுண்டான்] (1) என்னிடத்தில் ஓர் உபகாரமுங் கொள்ளாமலே நிர்ஹேதுகமாக என் ஆத்ம வஸ்துவை யநுபவித்தான். (2) இதற்கு முன்பு இப்படிப்பட்டதொரு சரக்குக் கொண்டறியாதவன்போல் என் பக்கலிலே அபிநிவேசங்கொண்டான். (3) என்னாலே தான் கொள்ளப்படாதிருக்க, தான் என்னைக் கைக் கொண்டான். இம்மூன்றும் ஒன்றுக்கொன்று வாசியின்றியே மிகச் சிறக்கும். இவற்றுள் முதற்பொருளும் மூன்றாம் பொருளும் தாற்பரியத்தில் விசேஷ பேதமின்றி யிருந்தாலும் சப்தார்த்தம் கொள்ளும் வகையில் வாசி பெற்றிருக்கும்.

நாளுநாள் வந்து=ஒருநாள் புஜித்து 'இது நாம் புஜித்ததேயன்றோ' என்று பழமை தோன்றி அருசியோடிருப்பானல்லன். "அவனுடைய *அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமிருக்கிறபடி" என்பர் நம்பிள்ளை. என்னை முற்றவுந் தானுண்டான்='என்னை' என்பது அஹமர்த்தமான ஆத்மவஸ்துவைத்தானே; அது அணுபரிமாணமாயன்றோ விருப்பது; முற்றவும் என்று சொல்லுவதற்கு விஷயமில்லையே யென்று சங்கித்துக்கொண்டு நம்பிள்ளை யருளிச் செய்வது காணீர்—"அணுபரிமாணமான இவ்வஸ்துவை விபுவான தான் விளாக்குலை கொண்டு அநுபவித்தானென்கிற விது தனக்கு ஏற்ற மாம்படி கௌரவியாநின்றான்" என்று. இந்த ஸ்ரீஸூக்திகளின் பரமதாற்பரியம் யாதெனில்; ஆழ்வாருடைய ஆத்மவஸ்து அணுவாயிருந்தாலுங்கூட அளவு கடந்த பாரிப்புக்கொண்ட ஸர்வேச்வரன் அநுபவிக்குமிடத்து இவ்வணுவஸ்துவையும் பெரியதாக்கிக்கொண்டு அநுபவிப்பதாக ஆழ்வாருடைய திருவுள்ளம் என்பதாம் இதற்கு ஒருதாஹரணம் காட்டலாம்; கண்ணபிரான் விதுரர் திருமாளிகைக்கெழுந்தருளின போது விதுரர் கண்ணனுக்கு அன்னமிட்டாரென்பதைச் சொன்ன முனிவர் "விதுர: அந்நமுபாஹரத்" என்றார்; அந்த அன்னத்தைக் கண்ணனமுது செய்ததைச் சொல்லுமிடத்து அந்தமுனிவர்தாமே "விதுராந்நாநி புபுஜே சுசீநி குணவந்தி ச" என்றார். விதுரரிட்ட அன்னத்தை ஏகவசனத்தாலே சொல்லி, கண்ண

னமுது செய்த அந்த அன்னத்தையே பஹுவசநத்தாலே நிர்தேசித்திருப்பதில் ஒரு விசேஷார்த்தம் தோன்றுமே; அதுவே மீண்டு நினைக்கத்தக்கது.

இப்படி யென்னை யநுபவிப்பவனை திருக்காட்கரையப்பனுக்கு, ஆளன்றே பட்டது என்னுருயிர் பட்டதே—அடிமை புக்கதாக நினைத்திருப்பதத்தனையே; ஆத்மா படும்பாடு வாசாமகோசரம் என்றபடி. எம்பெருமானோடு எதிரம்பு கோப்பவர்கள் உடம்பையிழப்பதோ, புண்பட்டதுக்கு மருந்து வைத்து ஆற்றுவதோ இத்தனையே செய்வது; உயிர் நோவுபடுவதென்பது அவர்களுக்கில்லை; இது ஆழ்வார்க்கே. அம்பு படுத்தும் பாட்டுக்கும் திருக்குணம் படுத்தும் பாட்டுக்கும் நெடுவாசியுண்டே. .... ... (8)

ஆருயிர்பட்டது எனதுயிர்பட்டது*
பேரிதழ்த்தாமரைக்கண் கனிவாயதோர்*
காரெழில்மேகத் தென்காட்கரைகோயில்கோள்*
சீரெழில்நால்தடந்தோள் தெய்வவாரிக்கே. (9)

| | | | |
|---|---|---|---|
| பேர் இதழ் தாமரை கண் | பெரிய விதழையுடைய தாமரை போன்ற திருக்கண்களையும் | சீர் எழில் நால் தட தோள் | அழகுமிக்க நான்கு திருத தோள்களை யுடையனுப |
| கனி வாயது ஓர் | கனிபோற் சிவந்த வாயையுமுடைத்தாயிருப்பதொரு | தெய்வம் வாரிக்கு | தெய்வங்களுக்குக் கடல்போன்றவனை பெருமானுக்கு |
| கார் எழில் மேகம் | கறுத்தழகிய மேகம் போன்ற வடிவையுடையவனைக் கொண்டு | எனது உயிர் பட்டது | என்னாத்மா பட்டபாடு |
| தென்காட்கரை கோயில்கொள் | திருக்காட்கரையை உறைவிடமாகக் கொண்ட | ஆர் உயிர் பட்டது | வேறு யாருடைய ஆத்மா பட்டது? (நான் பகவத் விஷயத்தில் பட்டபாடு ஒருவரும் படவில்லை யென்கை) |

* * *—கீழ்ப்பாட்டில் "ஆளன்றே பட்டது என்னுருயிர் பட்டது" என்றார்; எம்பெருமானுடைய திருக்குணங்களில் ஈடுபட்டவர்களான எல்லார்க்குமே இது ஸஹஜந்தானே; உமக்கு மாத்திரம் அஸாதாரணமோ! என்று சிலர் கேட்பதாகக்கொண்டு நான் பட்டது யாரும் பட்டிலரென்கிறாரிப்பாட்டில். எனதுயிர் பட்டது ஆருயிர் பட்டது?=நான் பட்ட பாடடை நித்யஸூரிகளிலேதான் பட்டாருண்டோ? குணாநுபவமே யாத்ரையான நித்யஸூரிகளும் இப்பாடு பட்டிலரே. "இங்கு எனதுயிர் பட்டது அங்கு ஆருயிர் பட்டது" என்று எம்பெருமானாருளிச் செய்வராம். ஆழ்வாருடைய உயிர் அழிந்தற்கு ஹேதுக்களைச் சொல்லுகிறது மேல்; [பேரிதழ்த் தாமரைக்கண் கனிவாயதோர்] திருக்கண்களும் திருவதரமும் படுத்தினபாடு. [காரெழில்மேகத் தென்காட்கரை கோயில் கோள்] வடிவுபடுத்தின பாடும் கோயில் படுத்தின பாடும். [சீரெழில் நாற்றடந்தோள்] *கற்பகக் காவன நற்பல தோள்கள் படுத்தின பாடு.

தெய்வவாரி—எம்பெருமானுக்கு ஆழ்வாரிட்ட திருநாமங்களுள் இதுவுமொன்று; வாரி யென்னும் வடசொல் ஜலத்தைச் சொல்லுமதானாலும் ஜலநிதியான கடலைக் குறிக்குமிங்கு. தைவங்கள் படுங் கடல்; தைவங்களுக்கு உத்பாதகனென்றபடி. "தெய்வவாரிக்கு எனதுயிர் பட்டது ஆருயிர் பட்டது" என்று அந்வயம். ... (9)

வாரிககோண்டு உன்னைவிழுங்குவன்காணிலென்று*
ஆர்வுற்றவென்னையொழிய என்னில்முன்னம்
பாரித்து*தானென்னை முற்றப்பருகினன்*
காரொக்கும் காட்கரையப்பன்கடியனே. (10)

| | | | |
|---|---|---|---|
| உன்னை காணில் | உன்னைக் காணப்பெறில் | தான் என்னை முற்ற பருகி ஞன் | என்னை நிச்சேஷமாகக் கபளீ கரித்தவனை |
| வாரிக் கொண்டு விழுங்குவன் என்று | கபளீகரிப்பேனென்று | கார் ஒக்கும் காட்கரை அப் பன் | காளமேகம் போன்ற திருக் காட்கரையப்பன் |
| ஆர்வு உற்ற | ஆசைகொண்ட | கடியன் | ஸ்வகார்யத்தில் பதற்ற முள்ள வன். |
| என்னை ஒழிய | என்னளவன்றியே | | |
| என்னில் முன் னம் பாரித்து | (இப்படி செய்யவேணு மென்று) எனக்கு முன்னமே மனோரதித்து | | |

***—திருவாய்மொழி யாயிரத்திலுள்ளும் இப்பாட்டு உயிரானதென்னலாம். ஈச்வர லாபம் சேதநர்களுக்குப் புருஷார்த்தமா? சேதநலாபம் ஈச்வரனுக்குப் புருஷார்த்தமா? என்றொரு விசாரம் ஸம்ப்ரதாய ரஸிகர்கள் *செய்வதுண்டு; சேதநலாபந்தான் ஈச்வரனுக்குப் புருஷார்த்தம் என்பதே ஸித்தாந்தம். எம்பெருமான் ஸ்ருஷ்டியவதாராதிமுகத்தாலே க்ருஷி பண்ணுவதெல்லாம் ஒரு சேதநன் நமக்குக் கிடைப்பனோவென்கிற நப்பாசையினாலன்றோ. கீதையிலே *ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்று கண்ணீர் பெருக நின்று சொல்லுகிற வார்த்தை யன்றோ. *வாஸுதேவஸ் ஸர்வ மென்றிருக்கிற மஹாத்மா எனக்குக் கிடைக்க வில்லையே! என்றன்றோ சொல்லுகிறான். பாடுபட்டுத் தேடிப்பார்த்தும் கிடையாமையாலே வருந்திச் சொல்லுகிற வார்த்தை இது என்று நன்கு தெரிகிறதன்றோ. எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யத்தில் *அநாவ்ருத்தி ஸூத்ர பாஷ்யத்தில் (அதாவது ஸ்ரீபாஷ்யத்தின் முடிவில்) *நச பரமபுருஷஸ் ஸத்யஸங்கல்ப: அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா கதாசித் ஆவர்த்தயிஷ்யதி* என்பதில் "ஜ்ஞாநிநம் லப்த்வா" என்கிற அற்புதமான ஸ்ரீஸூக்தியினால் இப்பரமார்த்தத்தை ப்ரகாசிப் பித்தருளினார். இப்பரமார்த்தந்தன்னை ஆழ்வார் ஸ்வாநுபவ முகத்தாலே இப்பாட்டில்தெளிய வைத்தருளுகிறார்.

இப்பாட்டில் "என்னில் முன்னம் பாரித்துத் தானென்னை முற்றப் பருகினான்" என்றது ஸத்ஸம்ப்ரதாய ரஸிகர்களின் நெஞ்சை யுருக்கும் வார்த்தை. 'உன்னைக்காணில் வாரிக்கொண்டு விழுங்குவேன்' என்று தாம் ஆசைப்பட்டிருந்ததாகவும், தமக்கு முன்னே நெடுநாளாக எம்பெருமான் தம் விஷயத்தில் இங்ஙனே பாரித்திருந்து தன்னுடைய மனோ ரதமே தலைக்கட்டப் பெற்றான்-என்றருளிச் செய்தவிதனால்-ஸ்வகத ஸ்வீகாரத்திலுங்காட்டில் பரகத ஸ்வீகாரமே வலிதென்றும், அதுதான் முற்பட்டதாயிருந்து கார்யகரமாகின்ற தென்றும் சொலிற்றாயிற்று.

கீழ்ப்பாட்டுக்களில் "என்னுயிருண்ட மாயன்" என்றும், "என்னுயிர் தானுண்டான்" என்றும் "என்னைமுற்றவுந் தானுண்டான்" என்றும் எம்பெருமான் உண்டபடியைச் சொன்னார்; உண்டவனுக்குத் தண்ணீரும் அபேக்ஷிதமாயிருக்குமே; தண்ணீர் குடித்தபடி சொல்லிற்று இபபாட்டில் தானென்னை முற்றப் பருகினான்" என்று. இவருடைய *உண்ணுஞ் சோறு பருகுநீர் அவன்; அவனுடைய *உண்ணுஞ்சோறு பருகுநீர் இவர். (10)

கடியனைக் கஞ்சனைக்கொன்றபிரான்றன்னை*
கொடிமதிள்தென்குருகூர்ச் சடகோபன்சொல்*
வடிவமையாயிரத்து இப்பத்தினால்சன்மம்
முடிவெய்தி*நாசங்கண்டீர்களெங்கானலே. (11)

| | | | |
|---|---|---|---|
| கடியன் ஆய் கஞ்சனை கொன்ற பிரான் தன்னை | விரைந்து கம்ஸனைக் கொன்ற கண்ணபிரான் விஷயமாக | இ பத்தினால் | இப்பதிகத்தினால் |
| கொடி மதிள் தென் குருகூர் சடகோபன் சொல் | ஆழ்வாரருளிச்செய்த | எம் சன்மம் முடிவு எய்தி | நம்முடைய ஜன்ம பரம்பரைகள் முடிவு பெற்று |
| வடிவுஅமை ஆயிரத்து | சொற்பொருளழகு பொலிந்த ஆயிரத்தினுள்ளும் | கானல் | கானலென்னும்படியான ஸம்ஸாரம் |
| | | நாசம் கண்டீர்கள் | நாசமடைந்தொழியு மென்பது திண்ணம். |

***—இந்தத் திருவாய்மொழி கற்றார்க்குப் பிறவி முடிந்து அதுக்கடியான ஸம்ஸாரமும் நசிக்குமென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். கீழ்ப்பாட்டின் முடிவில் "காட்கரையப்பன் கடியனே" என்றார்: இப்பாட்டின் தொடக்கத்தில் "கடியனாய்" என்கிறார்; சொல் ஒன்றாயிருந்தாலும் பொருள் வேறுபட்டிருக்கும். "காட்கரையப்பன் கடியன்" என்றவிடம்—தம்மை யநுபவிப்பதில் விரைவு கொண்டவன் என்றபடி. "காற்றிற் கடியனாய்" என்றதுபோல. இங்கே, *கடியனாய்க் கஞ்சனைக் கொன்ற பிரானென்றது—கோபத்தையேறிட்டுக்கொண்டவனாய்க் கம்ஸனை முடித்தவனென்றபடி.

கஞ்சனைக் கொன்ற பிரானென்றவுடனே "கொடிமதிள் தென்குருகூர்" என்கையாலே இந்த ஸமபிவ்யாஹாரத்திற்குச் சேர நம்பிள்ளை யருளிச் செய்வது பாரீர்—"கம்ஸ விஜயத்துக்குக் கொடி கட்டிற்று திருநகரியிலேயாய்த்து. ஸ்வாமி விஜயத்துக்கு உரியவடியாரிருந்தவிடத்தேயிறே கொடி கட்டுவது" என்று.

வடிவு அமை ஆயிரம்=எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகள் யாவும் அழகாக அமையப் பெற்றவாயிரம் என்றபடி. அதில், இப்பத்தினால் சன்மம் முடிவெய்தி=கீதையில் *ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்வத:, த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந.* என்று தன்னுடைய அவதார சேஷ்டிதங்களை யநுஸந்திப்பார்க்குச்சொன்ன பலனைப்பெற்று. எங்கானல் நாசங்கண்டீர்கள்-கானலாவது ம்ருகத்ருஷ்ணிகை; ஒன்றுமின்றிக்கே வீணாசையைப் பிறப்பிக்குமது கானலெனப்படும்; அப்படிப்பட்டதான இந்த ஸம்ஸாரத்திற்குக் கானலெனும் பெயர் மிகப் பொருந்தும். ... ... ... (11)

**திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையுரையில்**

ஒன்பதாம்பத்து ஆறாந் திருவாய்மொழி

முற்றிற்று.

நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஏழாந்திருவாய்மொழி—எங்கானலகங்கழிவாய்.

---

உரையவதாரிகை—கீழ்த்திருவாய்மொழியில், ஒருவாறு குணஸ்மரணத்தாலே தரிக்கும்படி செய்துவைத்தானெம்பெருமான்; குணங்களை ஸ்மரிக்கஸ்மரிக்க, அப்பெருமானை நேரேகாணவேண்டும்படியான விடாய்மிக்கது, அதனாலே தூதுவிடுவதாயிற்று இப்பதிகம். திருவாய்மொழியாயிரத்திலும் தூதுவிடும் பதிகங்கள் நான்கு; (1) * அஞ்சிறைய மடநாராய். (2) * வைகல் பூங்கழிவாய். (3) * பொன்னுலகாளீரோ. (4) இத்திருவாய்மொழி. * அஞ்சிறைய மடநாரையில் அபராதஸஹத்வமாகிற க்ஷமாகுணம் பற்றாசாக வ்யூஹத்திலே தூது விட்டார். * வைகல்பூங்கழிவாயில் ஆச்ரித ஜநரக்ஷண தீக்ஷிதத்வம் பற்றாசாக விபவத்திலே தூது விட்டார்; *பொன்னுலகாளீரில் ஐச்வர்யம் பற்றாசாகப் பரத்வத்திலும் அந்தர்யாமித்வத்திலும் தூது விட்டார். இனி இத்திருவாய்மொழியில், அவனுடைய வடிவழகு பற்றாசாக அர்ச்சையிலே தூது விடுகிறார்.

மேலிரண்டாம்பாட்டில் "திருமூழிக்களத்து—நமரோடு அங்குறைவார்க்கு" என்கையாலே, *பின்னானார் வணங்குஞ் சோதியான திருமூழிக்களத்தில் தம் பரிஜந பரிவாரங்களோடே கூடிக் குலாவாநின்றாரவர்; அதனாலே நம்மை மறந்தார் போலும்; *செங்கமலத்தலர்போலுங் கண்கைகால் செங்கனிவாய் அக்கமலத்திலைபோலுந் திருமேனியழகை நினைப்பூட்டி "இப்படிப்பட்ட வடிவழகிலே யீடுபட்ட பராங்குசநாயகி உம்மைப்பிரிந்து தரித்திருக்கவல்லளோ வென்று சொல்லுங்கோள்" என்று சில பறவைகளைக் குறித்துக் கூறித் தூது விடுவதாய்ச் செல்லுகிறது இத்திருவாய்மொழி. ... ... ... *

எங்கானலகங்கழிவாய் இரைதேர்ந்திங்கினிதமரும்*
செங்காலமடநாராய் திருமூழிக்களத்துறையும்*
கொங்கார்பூந்துழாய்முடி யெங்குடக்கூத்தர்க்கென்தூதாய்*
நுங்கால்களைஎன்தலைமேல் கெழுமீரோநுமரோடே. (1)

| | | | |
|---|---|---|---|
| எம் கானல் அகம் கழிவாய் | எங்கள் உத்யானத்தில் உள்ளிருக்கிற கழியிலே | எம் குடக்கூத்தற்கு | குடக்கூத்தாடும் எம்பெருமானுக்கு |
| இரை தேர்ந்து | இரைதேடி | என் தூது ஆய் | என் தூதாய்ச்சென்று |
| இங்கு இனிது அமரும் | இங்கே பொருந்தி வர்த்திக்கிற | | (திரும்பிவந்து) |
| செம் கால மட நாராய் | சிவந்த காலையுடைய அழகிய நாரையே! | நுமரோடே | உன்னைச் சேர்ந்தவர்களோடுங் கூட |
| திருமூழிக் களத்து உறையும் | திருமூழிக்களத்திலே நித்யவாஸம் பண்ணுமவனாய் | நும் கால்கள் | (எனக்காக வழிநடந்த) உங்களுடைய கால்களை |
| | | என் தலை மேல் | எனது தலைமீது |
| கொங்கு ஆர் பூந்துழாய் முடி | தேன் மிகுந்த திருத்துழாயை முடியிலே அணிந்தவனை | கெழுமீரோ | சேர்க்கிறீர்களா? [சேர்க்க வேணும்]. |

* * *—பறவைகளைத் தூதுவிடுகிற பதிகமானாலும், ஆசாரியர்களே இங்குப் பறவைகளாகக் கருதப்படுகிறார்களென்பதை இம் முதற் பாட்டில் தெளிய வைத்தருளுகிறாராழ்வார். "நுங்கால்களைஎன் தலைமேல் கெழுமீரோ நுமரோடே" என்னுமீற்றடி அமைந்த அழகை என் சொல்வோம்!. முதற் பிரபந்தமான திருவிருத்தத்தில் தூது போகைக்கு வண்டுகளையழைக்கும்போதே "எம்மீசர் விண்ணோர் பிரானார் மாசில் மலரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும்

வணடுகளே !" என்றார். எம்பெருமானுடைய திருவடியிணையின்கீழ்த் தம்மைச் சேர்ப்பிக்க வல்ல ஆற்றல்வாய்ந்த ஆசாரியர்களையே தூதர்களாகக் கொண்டதாய் நன்கு காட்டியருளினார். அப்படிப்பட்ட ஆசாரியர்கள் ஸபரிவாரராகத் தம் தலைமீது திருவடிகளை வைக்கப் பெறுவதே பெறும்பேறு என்னுமிடத்தை முடிவான இத்தூதுபதிகத்திலே உயிராகவைத்து அருளிச் செய்கிறாராயிற்று.

எங்கானல்—என்ற விடத்து நம்பிள்ளை யீடு பரமபோக்யமானது;—'பகவத் விஷயத்தில் உபகாரகரோடு ஐகரஸ்யம் ப்ராப்தமாயிருக்க, எம் என்றது—ஒன்றைத் தம்ம தாக்கிக் கொடுத்தல்லது தரிக்கமாட்டாத உபகாரஸ்ம்ருதியாலே சொல்லுகிறது, பிறர்க்கு உபகரிக்கைக்காக வரும் மமகாரம் உத்தேச்யமாயிருக்குமிறே. தன்னை பகவத் விஷயத்துக்கு ஆக்கினவன்றே தன்னதடங்கலும் அங்குத்தைக்கு சேஷமாயிருக்க, உபகாரஸ்ம்ருதியிறே இப்படி சொல்லுவித்தது. ஆத்ம ஸமர்ப்பணத்துக்கும் அடி இதுவிறே" என்று, 'எம் கானல்' என்று மமகாரம் தோற்றச் சொல்லுவது ஸ்வரூபவிருத்தமல்லவாவென்று சங்கை; ஏதாவதொன்றை ஸ்வகீயமாக்கி அத்தலைக்குக் கிஞ்சித்கரித்ததாகவேண்டுமென்கிற ஆசையடியாக இங்ஙனே சொன்னதாகையாலே குற்றமில்லையென்று பரிஹாரம்.

அகங்கழிவாய் இரை தேர்ந்து என்றது—அந்தரங்கமாய் வந்து வர்த்திக்கிறபடியைச் சொன்னவாறு. தூதனுப்ப உங்களைத் தேடிப்பிடிக்க வேண்டாதபடி அருகே வந்து வர்த்திக்கப்பெற்ற பாக்கியம் என்னே! என்று உள்குழைந்து சொல்லுகிறபடி. ஸ்வாபதேசத்தில் ஆசாரியர்களைத் தூது விடுவதாகச் சொல்லுகையாலே, எம்பெருமானார் திருமாளிகையிலேயே வந்திருந்து ப்ரவசநம் செய்தருளின பெரிய நம்பியைப் போன்ற ஆசாரியர்களை இங்குக் கருதுவதாகக் கொள்ளலாம். செங்கால மடநாராய்! என்று கால்களை விசேஷித்துச் சொல்லுகையாலே ஆசாரியன் திருவடிகளே தஞ்சமென்கிற அர்த்தமும் காட்டப்படுகிறது .... (1)

நமரோடும்பிரியாதே நீரும்நும்சேவலுமாய்*
அமர்காதல்குருகினங்காள் அணிமுழிக்களத்துறையும்*
எமராலும்பழிப்புண்டு இங்கென் ? தம்மாலிழிப்புண்டு*
தமரோடங்குறைவார்க்குத் தக்கிலமேகேளீரே. (2)

| | | | |
|---|---|---|---|
| நமரோடும் பிரியாதே | உங்களினத்தார்களை விட்டுப் பிரியாமல் | எமராலும் பழிப் | எம்மைச் சேர்ந்தவர்களாலும் பழிக்கப்பட்டு |
| நீரும் நும் சேவலும்ஆய் | தம்பதிகளாய்க்கொண்டு | ங்கு என் | இருக்குமிவ்விருப்பில்என்ன ப்ரயோஜனம்? (இப்படியிருப்பதைவிட முடிந்துபோவதே நன்றல்லவா ?) |
| அமர்காதல் குருகு இனங்காள் | கூடிக் களித்துவர்த்திக்கும் படியான ப்ரணயத்தையுடைய குருகினங்களே ! | தமரோடு அங்கு உறைவார்க்கு | தம்முடைய அஸாதாரண பரிஜனத்தோடே அங்கே நித்ய வாஸம் பண்ணுகிறவர்க்கு |
| அணிமுழிக்களத்து உறையும் | திருமூழிக்களத்திலே நித்ய வாஸம் பண்ணுகிற | | நாம் தகுந்திருக்கமாட்டோமோ? (அவருடைய அநுபவம் நமக்குத்தகா |
| தம்மால் இழிப்புண்டு | தம்மால் உபேக்ஷிக்கப்பட்டு (அது காரணமாக) | கேளீர் | கேளுங்கள். |

* * *—திருமூழிக்களத்திலே தாமும் தாமுகந்த அடியார்களுமாயெழுந்தருளியிருக்குமிருப்பிலே நானும் வந்து அடிமை செய்யப் பெறலாகாதோ? அந்த கோஷ்டியிலே அந்வயிக்கைக்கு நான் அயோக்யனோ வென்று கேளுங்கோளென்று சில குருகினங்களைக் குறித்துச் சொல்லுகிறாள். [நமரோடும் பிரியாதே] மேலே எம்பெருமானைச் சொல்லுமிடத்து "தமரோடு

அங்குறைவார்க்கு” என்று சொல்லுகையாலே அவன் தமரோடு கூடி வாழுகிறுப்போலே நீங்கள் நமரோடுகூடி வாழப்பெறுகிறீர்கள், அவனுடைய ஸாம்யாபத்தி உங்கள் திறத்திலே பலித்திருப்பதுபோலே என் திறத்திலும் பலிக்கவேண்டாவோ? அவன் தன் அபிமதர்களோடே கூடி வாழுகிறுப்போலவும்; நீங்கள் உங்களபிமதர்களோடே கூடிவாழுகிறுப்போலவும் நானும் என்னபிமதனோடே கூடிவாழும்படி செய்யவேண்டாவோ? என்பது குறிப்பு. “குறைவாளர்காரியம் குறைவற்றார்க்குத் தீர்க்கவேண்டாவோ? உண்டார்க்கு; பட்டினி கிடந்தார்பசி பரிஹரிக்க ப்ராப்தமிறே” என்பது ஈடு.

மூன்றாமடியை—“அணிமூழிக்களத்துறையும் தம்மாலிழிப்புண்டு எமராலும் பழிப்புண்டு இங்கு என்?” என்று அந்வயித்துப் பொருள் கொள்ளவேணும். திருமூழிக்களத்து நாயனார் யாத்ருச்சிகமாக ஒருகால் கலந்து கைவிட்டார்; அதுவே ஹேதுவாக பந்துக்களும் கைவிட்டார்களென்னே? இப்படி அத்தலைவர்க்குமாகாதே உற்றாருறவினர்க்குமாகாதே கைவல்யம்போலே யிருக்கிற இவ்விருப்புக்கு என்ன ப்ரயோஜனமுண்டு? என்றபடி.

தமரோடு அங்குறைவார்க்கு=எம்பெருமான் என்னையுபேக்ஷிப்பதற்கு ஹேதுவில்லை; ஆனாலும் திருமூழிக்களத்திலே தன்னை யுகந்த பாகவதர்களோடு கூடி வாழப்பெற்ற இனிமையாலே என்னை மறந்திருக்கின்றவத்தனை என்று காட்டுவதும் இங்கு விவக்ஷிதம். அந்தத் தமரோடே நானும் ஒருவனாகத் திருவுள்ளம்பற்ற ப்ராப்தியில்லையோ வென்று கேளுங்கள் என்றாராயிற்று. ... ... ... ... (2)

தக்கிலமேகேளீர்கள் தடம்புனல்வாயிரைதேரும்*
கொக்கினங்காள்குருகினங்காள் குளிர்மூழிக்களத்துறையும்*
செக்கமலத்தலர்போலும் கண்கைகால்செங்கனிவாய்*
அக்கமலத்திலைபோலும் திருமேனியடிகளுக்கே. (3)

| | |
|---|---|
| தட புனல் வாய் | பெரிய ஜலாசயத்திலே |
| இரை தேரும் | இரை தேடித்திரிகின்ற |
| கொக்கு இனங்காள் குருகு இனங்காள்!—; | |
| குளிர் மூழிக் களத்துஉறையும் | குளிர்ந்த திருமூழிக்களத்திலே நித்ய வாஸம் பண்ணுமவராய் |
| செம் கமலத்து அலர் போலும் கண் கை கால் | செந்தாமரைப் பூப்போன்ற திருக்கண் திருக்கை திருவடிகளை யுடையராய் |
| செம் கனி வாய் | சிவந்து கனிந்த திருப்பவளத்தையுடையராய் |
| அக் கமலத்து இலை போலும் திருமேனி | அந்தத்தாமரையின் யொத்த திருமேனியையுமுடையரான |
| | ஸ்வாமிக்கு |
| தக்கிலமே | நாங்கள் தகுந்திருக்கமாட்டோமாவென்று கேளுங்கள். |

* * *—திருவாய்மொழியாயிரத்தினுள் தூது விடுகிற பதிகங்கள் நான்கென்று சொன்னோமே; அவற்றுள் ஒவ்வொரு பாட்டு உயிராக வைக்கப்படுகிறது. இப்பதிகத்திற்கு உயிரான பாட்டு இது; கீழ்ப்பாட்டில் * தமரோடு அங்குறைவார்க்கு * என்று சொன்னபடி தம்மை யுகந்த பாகவதர்களோடுண்டான சேர்த்தியில் இனிமையாலே, பிரிந்தார்க்கு உயிர்தரித்திருக்க வொண்ணாதபடியான தம்முடைய வடிவழகை மறந்து நம்மை நினையாதிருக்கின்றாரத்தனை; இவ்வடிவழகைப் பிரிந்தார் தரிப்பரோவென்று அவ்வழகையறிவித்து விட்டால் வாராதிருக்கமாட்டாரென்று கொண்டு *செக்கமலத்தலர்போலுங் கண்கைகால் செங்கனிவாய் அக்கமலத்திலைபோலுந் தக்கிலமே கேளீர்கள்* என்றும், *பூந்துழாய் முடியார்க்குப் பொன்னாழிக்கையாருக்கு — தாம் தம்மைக் கொண்டு அகல்தல் தகவன்றென்றுரையீரே* என்றும் வடிவழகு பற்றாசாகத் தூதுவிடுகிற பதிகமிது என்று அறிவதற்கு இப்பாட்டு நிதானமா

யிருக்கும். ஆசார்யஹ்ருதயத்தில் (156.) *தம்பிழையும் சிறந்த செல்வமும்* என்ற சூர்ணையில் *தமரோட்டை வாஸம் மறப்பித்த ஸௌந்தர்யத்தை யுணர்த்தும் அர்ச்சை காலாந்தாதுக்கு விஷயம்* என்பது காட்டப்பட்டிருப்பது முணர்க.

த்க்கிலமே கேளீர்கள் என்றதற்கு நம்பிள்ளை யீடு;—“நாம் ஒன்றிலே துணியும்படி அறுதியாகக் கேட்டுப் போருங்கோள். அவர் இன்னும் இதுவேணுமென்றிருந்தாராகில் ப்ராணன்களை வருந்தி நோக்கிக்கொண்டு இட்க்கவும், வேண்டாவென்றிருந்தாராகில் நாமு மொன்றிலே துணியும்படி அறுதியாகக் கேட்டு விடுங்கோள்” என்று. அதாவது, இரண்டத் தொன்று கேட்டு வந்து சொல்லுங்கோள்; இத்தலையில் அவர்க்கு அபேக்ஷையுளதென்று தெரியவந்தால் வருந்தியாகிலும் பிராணனைப் பிடித்து வைத்துக்கொண்டிருக்கிறேன்; அவர்க்கு அபேக்ஷையில்லை, உபேக்ஷைதான் என்று தெரிய வந்தால் வேண்யுத்க்ரதனத்திலே துணிந்த பிராட்டியைப்போலே ஏதோவொரு வழியிலே துணிகிறேன் என்றவாறு.

கோக்கினங்காள் குருகினங்காள்—குருகு என்பது கொக்கிலே ஒரு ஜாதி பேதம். குருகு—சொய்யடிநாரை என்பர். [அக்கமலத்திலைபோலுந் திருமேனி] கீழ் எட்டாம் பத்தில் (5-1.) ‘சாயல் சாமத் திருமேனி தண்பாசடையா* என்றதையும் இங்கு நினைப்பது. *तं पद्मदलपत्राक्षम् —தம் பத்மதளபத்ராக்ஷம்* என்ற ஸ்ரீராமாயண ச்லோகத்தை நிர்வஹிக்குமிடத்து இப்பாசுரம் உதவியாகும். எங்ஙனேயென்னில்; பத்ரம் என்றாலும் தளம் என்றாலும் பர்யாயமாயிருக்க தளபத்ராக்ஷம் என்றது பொருந்துமோ வென்று சிலர் சங்கிப்பர்கள்; அதற்கு ஸமாதானமாவது, *அக்ஷமிந்த்ரியகாயயோ:* *अक्षमिन्द्रियकाययोः* என்ற நிகண்டின்படி அக்ஷசப்தமானது கண்ணையும் மேனியையும் சொல்லக் கடவதாகையாலே (இரட்டுற மொழிதலால்) அவ்விரண்டு பொருளையும் இங்குக் கொண்டு பத்மதளம் போன்ற அக்ஷத்தையுடையவர்—தாமரையிதழ் போன்று நீண்டழகிய திருக்கண்களை யுடையவர்; பத்மபத்ரம் போன்ற அக்ஷத்தையுடையவர்—தாமரையிலை போன்று பசுமையான திருமேனியை யுடையவர் என்று நிர்வஹிப்பதாம். எம்பெருமானது திருமேனிக்குத் தாமரையிலையை யொப்பாகச் சொல்லுவதற்கு இப்பாசுரம் ப்ரமாணமென்க. ... ... (3)

திருமேனியடிகளுக்குத் தீவினையேன்விடுதூதாய்*
திருமூழிக்களமேன்னும் செழுநகர்வாயணிமுகில்காள்*
திருமேனியவட்கருளீர் என்றக்கால்*உம்மைத்தம்
திருமேனியோளியகற்றித் தேளிவிசும்புகடியுமே. (4)

| | |
|---|---|
| அணிமுகில்காள் | அழகிய மேகங்களே! |
| திருமூழிக்களம் என்ன செழு நகா வாய் | திருமூழிக்களமென்கிற திவ்ய க்ஷேத்திரத்திலே வாப்பவராய் |
| திருமேனி அடிகளுக்கு | சிறந்த திருமேனியையுடையரான ஸ்வாமிக்கு |
| தீ வினையேன் | பாபியான நான் |
| விடு தூது ஆய் | தூதாய்ச்சென்று |
| அவட்கு திருமேனி அருளீர் என்றக்கால் | ‘பராங்குச நாயகிக்கு உமது திருமேனியைக் கொடுத்தருளீர்’ என்று ஒரு வார்த்தை சொன்னால் |
| உம்மை | ஙவ்வுபகாரம் செய்கிற உங்களை |
| தம் திருமேனி ஒளி அகற்றி | உங்கள் புகரை மாற்றி |
| தெளி விசும்பு கடியுமே | நிர்மலமான ஆகாசத்தில் நீங்கள் வர்த்திக்கமுடியாதபடி தண்டிப்பரோ? |

* * *—சில மேகங்களை நோக்கி ‘என் வார்த்தையை அவனுக்குச் சொன்னால் உங்களுக்கு ஏதேனும் தண்டனை நேருமோ?’ என்கிருள். எம்பெருமானுக்குத் திருமேனியடிகளென்ற ஒரு திருநாமஞ் சாத்துகிறாராயிற்று ஆழ்வார். வடிவழகையே நிரூபகமாகக் கொண்ட ஸர்வஸ்வாமி யென்று பொருள். ஸ்வரூபகுண சேஷ்டிதங்களினால் ஜகத்தையடையத் தோற்

பிக்குமது ஒருபுறமிருக்க, வடிவழகாலே தோற்பித்து அடிமை கொள்வது தலையாயிருக்கை யாலே திருமேனியடிகள் என்கிறார். "* அவசா: ப்ரதிபேதிரே என்கிறபடியே ப்ரதிகூலர்க்கும் ஆகர்ஷகமாயிறே வடிவிருப்பது" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. கண்ணபிரான பாண்டவ தூதனுய்த் துரியோதனனிட மெழுந்தருள, அக்கண்ணன் வருகையையறிந்த துரியோதனன் 'கண்ணனுக்கு ஒருவரு மெழுந்து மரியாதை செய்யலாகாது' என்று உறுதியாய் நியமித்துத் தானும் ஸபையிலே உறுதியுடனிருக்க, கண்ணபிரான் அங்கேற வெழுந்தருளினவளவிலே, ஸபையிலிருந்த அரசர்களனைவரும் ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவின் சோதியைக் கண்டு பரவசரா யெழுந்துவிட, துரியோதனன் தானும் தொடை நடுங்கி யெழுந்திருந்துவிட்டு, உடனே 'ஐயோ! நம் உறுதி தடுமாறி விட்டதே! ஒரு மரியாதையும் செய்யக்கூடாதென்றிருந்த வுறுதி குலைந்து மரியாதை செய்யும்படியாகச் செய்துவிட்டதே இந்தத் திருமேனி யழகு!' என்று கண்ணனையுற்று நோக்கினனும். இதனைப் பெரியாழ்வாரருளிச் செய்கிறார்- *சுழல் மன்னர் சூழக்கதிர்போல் விளங்கி யெழலுற்று மீண்டேயிருந்துன்னை நோக்கும் சுழலைப் பெரிதுடைத் துச்சோதனன்* என்று.

தீவினையேன் விடுதூதாய்="திருமேனியடிகள்" என்று என்னாலே பேரிடப்பெற்ற அவருடைய திருமேனி ஸர்வ ஸாதாரணமானது; எனக்கு அஸாதாரணமாயுமிருந்தது: அப்படிப்பட்ட திருமேனியை யிழந்து உங்கள் காலிலே விழவேண்டும்படியான பாபத்தைப் பண்ணினேனேயென்று தீவினையேன் என்கிறாள்; எதிர்மறையிலக்கணையால் நல்வினையேன் என்றபடி; பாகவதர்களின் திருவடிகளிலே விழப்பெறுகை நல்வினைப் பயனன்றோ. நான விட்ட தூதாய் நீங்கள் திருமூழிக்களத்தேறச் சென்று அத்திருமேனி யடிகளை நோக்கி 'திருப்புளியடியிலே கிடக்கிற வொருத்தி உம்முடைய திருமேனியிலே ஆசைவைத்து நைகின்றாள்; அவளுக்கு உமது திருமேனியைக் கொடுத்தருளீர்' என்று சொலுங்கோள்; இந்த வொருவாய்ச் சொல்லுக்கும் தூர்ப்பிக்ஷமுண்டோ? இப்படி வாக்குதவி புரிந்தால், உம்மைத் தம் திருமேனி யொளிகற்றித் தெளிவிசும்புகடியுமே?=உங்கள் வடிவிற் புகரையும் போக்கி நிர்மலமான ஆகாசத்தில் நின்றும் உங்களை யோட்டி விடுவரோ? உங்களுக்குப் பண்டில்லாத புகரையும் உண்டாக்குவரே யல்லது உள்ள புகரைக் கொள்ளை கொள்ள மாட்டார் என்கிறாள். . ... ... ... (4)

தெளிவிசும்புகடிதோடித் தீவளைத்துமின்னிலகும்*
ஒளிமுகில்காள் திருமூழிக்களத்துறையுமொண்சுடர்க்கு*
தெளிவிசும்புதிருநாடாத் தீவினையேன்மனத்துறையும்*
துளிவார்கட்குழலார்க்கு என்தூதுரைத்தல் செப்புமினே. (5)

| | | | |
|---|---|---|---|
| தெளிவிசும்பு கடிது ஓடி | நிர்மலமான ஆகாசத்திலே விரைந்து பறந்துசென்று | தெளிவிசும்பு திருநாடு ஆ உறையும் | தெளிவிசும்பான திருநாட்டிலே பண்ணும் வியாமோஹத்தை வர்த்திப்பவராயும் |
| தீவளைத்து மின் இலகும் | கொள்ளி வட்டம் போலே அழகிய மின் விளங்கப்பெற்ற | | |
| ஒளி முகில்காள் | அழகிய மேகங்களே! | வார் கள குழலார்க்கு | (முடியிலணிந்தமாலையினின்று) துளித்து ஒழுகுகின்ற மதுவையுடைய மயிர் முடியையுடையராயுமிருக்கிற பெரியவர்க்கு |
| திருமூழிக்களத்து உறையும் | திருமூழிக்களத்தில் நித்யவாஸஞ் செய்தருள்கின்ற | | |
| ஒண் சுடர்க்கு | அழகிய தேஜோராசியாயும், | | |
| தீவினையேன் மனத்து | பாபியான என்னுடைய மனத் | என் தூதுஉரைத்தல்செப்புமின் | எனது தூதுமொழியைச் சொல்லுங்கள். |

***—இப்பாட்டும் மேகவிடுதூது. பரமபதத்திற்பண்ணுமாதரத்தை என் பக்கலிலே பண்ணினவரன்றோ அவர்; உங்கள் வார்த்தை கேட்டவாறே பதறி யோடி வருவர்; எனக்காக

வொருவார்த்தை விண்ணப்பஞ்செய்யுங்கோளென்று பின்னையும் மேகங்களையிரக்கிறாள். ஆறுயிரப்படியருளிச்செயல் காண்மின்—"அவளுக்கருளீ ரென்னவமையுமோ? இன்னாருக் கருளீரென்ன வேண்டாவோ வென்னில், யாவளொருத்தியுடைய நெஞ்சை உமக்குத் திருநா டாகக்கொண்டு நீர் உறைகிறீர் அவளுக்கு அருளீரென்று சொல்லிகோளென்கிறாள்" என்று.

தெளிவிசும்புகடிதோடித் தீ வளைத்து மின்னிலகு மொளிமுகில்காள்!=ஆகாசத்திலே வேகமாக ஸஞ்சரிக்கையும், கொள்ளிவட்டம்போல மின்னல் விளங்கப்பெறுகையும் மேகங் களுக்கு இயல்பு. ஆசாரியர்களை மேகமாக விவக்ஷிக்கையாலே அவர்களிடத்தும் இந்த விசே ஷணம் பொருந்தும். ஆசாரியர்களுக்கு லீலாவிபூதி, நித்யவிபூதியென்று ஒரு வாசியின்றி உபயவிபூதியும் ஒரு நீராயிருந்து இங்குப்போல அங்கும் ஸஞ்சரிக்க வல்லமையுண்டாதலால் அதையிட்டுத் தெளிவிசும்புகடி தோடுகை சொல்லிற்று. மேகத்தில மின்மின்னுவது எப்போ தும் கிடையாது; நன்றாக மழை பெய்ய நிற்கும் ஸமயத்தில்தான் மின்மின்னும். தீ வளைத்து மின்னிலகுமென்றதனால் வர்ஷிக்கஸித்தமாயிருக்கிற மேகங்களென்று காட்டப்பட்டு, மஹார்த் தங்களை வர்ஷிக்க ஸஜ்ஜர்களாயிருக்கு மாசாரியர்கள் காட்டப்பட்டாராயினர். மேகங்களை விளிக்கிறபோது ஒளிமுகில்காள்! என்று விளித்து, எம்பெருமானையும் ஒண்சுடர் என்ற சொல்லால் இங்குச் சொல்லியிருக்கையாலே, ஆசாரியர்கள் எம்பெருமானிற் காட்டில் வேறு பட்டவர்களல்லர் என்பதும், அவனோடு பரமஸாம்யம் பெற்றவர்களே யென்பதும் தெரிவிக் கப்பட்டதாம்.

பரமபதத்திலே பண்ணும் வியாமோஹத்தை ஆழ்வாருடைய திருவுள்ளத்திலே பண்ணி எம்பெருமான் வர்த்திக்கிறானென்பது மூன்றாமடியின் கருத்து. இங்குத் தீவினையேன் என்றது—நெஞ்சிலே விளங்கா நிற்கவும் காணமாட்டாதபடி பாபத்தைப் பண்ணினேனே யென்று நொந்து சொல்லுகிறபடி. (துளிவார்கட்குழலார்க்கு என்தூதுரைத்தல் செப்புமினே) திருமுடியிலே மாலை சாத்தியிருப்பவர்க்கு என்கையாலே ரக்ஷண தீக்ஷிதர் என்பது காட்டப் பட்டது. ஆர்த்தரக்ஷணத்திற்கென்று தனிமாலையிட்டிருக்குமெம்பெருமானுக்கு என் விண்ணப்பத்தைத் தெரிவிக்கவேணுமென்றதாயிற்று. ... ... (5)

தூதுரைத்தல்செப்புமின்கள் தூமொழிவாய்வண்டினங்காள்*
போதிரைத்துமதுநுகரும் பொழில்மூழிக்களத்துறையும்*
மாதரைத்தம்மார்வகத்தே வைத்தார்க்கென்வாய்மாற்றம்*
தூதுரைத்தல்செப்புதிரேல் சுடர்வளையும்கலையுமே. (6)

| | | | |
|---|---|---|---|
| தூ மொழி வாய் வண்டினங்காள் | தூய மொழியை வாயிலே யுடைய வண்டினங்களே! | தம்மார்வகத்தே மாதரை வைத்தார்க்கு | தமது திருமார்பிலே பிராட்டியைத் தாங்கி நிற்பவரான பெரியவர்க்கு |
| | | என்வாய் மாற்றம | என் வாய்ப்பாசுரமான |
| போது இரைத்து மது நுகரும் பொழில் | பூக்களிலே இரைத்துக்கொண்டு மதுபானம் பண்ணும் பொழில்களையுடைய | உரைத்தல் செப்புதிர் எல் | தூது வாக்யத்தைச் சொல்லப் பார்த்தீர்களாகில் |
| | | சுடர் வளையும் கலையும் | (எனது) அழகிய கைவளைகளையும் சேலையையும்பற்றி |
| மூழிக்களத்து உறையும | திருமூழிக்களத்திலே வாழ்பவராய் | உரைத்தல் செப்புமின்கள் | தூதுக்குப் பாசுரமாகச் சொல்லுங்கோள். |

***—சில வண்டுகளைக் குறித்துச் சொல்லுகிறாள்—எம்பெருமான் பக்கலிலே சென்று விண்ணப்பஞ்செய்யுமிடத்து உங்கள் வார்த்தை விலைச் செல்லும்படி பிராட்டி ஸன்னிதியிலே வைத்துச் சொல்லுங்கோள் என்று. 'தூதுரைத்து மறுமாற்றம் கொண்டுவாருங்கள்' என்னாமல் "தூதுரைத்தல் செப்புமின்கள்" என்று இவ்வளவே சொல்லுகையாலே "என்

தூதவாக்யத்தையறிவித்தால் போதும், *ரக்ஷாபேக்ஷாம் ப்ரதீக்ஷதேயென்றிருப்பவர்க்கு இவ்வளவே போதும்" என்று காட்டப்பட்டதாம் தூமொழிவாய் வண்டினங்காள்! = இனிய பேச்சாலே எம்பெருமானையும் வசப்படுத்திக்கொள்ள வல்லவர்கள் ஆசார்யர்கள் என்பது காட்டப்பட்டது.

எம்பெருமானுறையும் திருமூழிக்களம் எப்படிப்பட்டதென்ன, போதிரைத்து மது நுகரும்பொழில்களை யுடையது என்கிறார்; புஷ்பவிகாஸதசையில் ஹர்ஷத்தாலே கோலாஹலம் பண்ணிக்கொண்டு உங்களுக்கு மதுபானம் பண்ணலாம்படியான சோலைகளையுடையது என்றபடி. என் காரியத்திற்காகவே நீங்கள் போகவேண்டா; போமிடத்தில் உங்கள் காரியமும் ஸித்திக்குமென்று காட்டுகிறவிதனால்—ஆசாரியர்களுக்கு சிஷ்யோஜ்ஜீவனக்ருத்யம் ஸ்வார்த்தமேயொழிய பரார்த்தமன்று என்பது காட்டப்பட்டதாம். மாதரைத் தம் மார்வகத்தே வைத்தார்க்கு = நீங்கள் சொல்லுமளவே வேண்டுவது; உங்கள் வார்த்தையைக் கேட்டுக்கொண்டிருக்கவும், கேட்டுக் கொண்டாடுகைக்கும் அருகே புருஷகாரஸம்பத்தில் குறையில்லையென்றபடி.

தூதுரைத்தல்செப்புதிரேல் சுடர்வளையும் கலையுமே = இதற்கு இரண்டு படியாகப் பொருள் நிர்வஹிப்பர்; நீங்கள் தூதுவிண்ணப்பம் செய்வதானால் எது விஷயமாகச் சொல்ல வேணும் தெரியுமோ? என்னுடைய கைவளையையும் சேலையையும் பற்றிச் சொல்லுங்கோள்—இவை சிதிலமானபடியைச் சொல்லுங்கோள் என்பதாக வொரு நிர்வாஹம். நீங்கள் தூது சொன்ன மாத்திரத்திலே எனக்குக் கைவளையும் சேலையும் ஆம்—நான் பேறு பெற்றேனாவேன் என்பதாக மற்றொரு நிர்வாஹம். ... ... ... (6)

சுடர்வளையுங்கலையுங்கொண்டு அருவினையேன்தோள்துறந்த*
படர்புகழான் திருமூழிக்களத்துறையும்பங்கயக்கண்*
சுடர்பவளவாயனைக்கண்டு ஒருநாளோர்தூய்மாற்றம்*
படர்பொழில்வாய்க்குருகினங்காள் எனக்கொன்றுபணியீரே. (7)

| | | | |
|---|---|---|---|
| படர் பொழில் வாய் குருகு இனங்காள் | பரந்த சோலையகத்தே வாழ்கிற !, | பங்கயம் கண் | செந்தாமரைக்கண்ணனும் |
| சுடர் வளையும் கலையும் கொண்டு | (எனது) அழகிய கைவளையையும் சேலையையும் கைக்கொண்டு | சுடர்பவளம் வாயனை கண்டு | அழகிய பவழம்போன்ற வாயையுடையவனுமான எம்பெருமானைக்கண்டு |
| அருவினையேன் தோள் துறந்த | போக்கவரிய பாவஞ்செய்த என்னை விட்டுப் பிரிந்த | எனக்கு | எனக்காக |
| படர் புகழான் | பரந்த புகழையுடையவனும் | ஒரு நாள் | ஒரு கால் |
| | | ஓர் தூய் மாற்றம் ஒன்று பணியீர் | ஒரு நல்வார்த்தை சொல்ல வேணும். |

***—சில குருகினங்களைக் குறித்துச் சொல்லுகிறாள் — எம்பெருமானைக்கண்டு, நீர் சிலரோடே சலந்து அவர்களைத் துறந்து அதுவே புகழாக வீற்றிருக்குமிவ்விருப்பு தகுமோவென்று சொல்லுங்கோள் என்கிறாள். சுடர்வளையுங்கலையுங்கொண்டு அருவினையேன் தோள்துறந்த படர்புகழான் என்கையாலே - அடியார்களை இப்பாடு படுத்துவதையே தனக்குப் பெரும்புகழாக நினைத்திருப்பவர் என்றதாகிறது. தன்பாலீடுபட்டவர்களை மற்றொன்றுக்கு ஆகாதபடியாக்கிக் கொள்ளுகைதானே எம்பெருமானுக்குப் படர்புகழ். இப்புகழோடே திருமூழிக்களத்திலுறையும் பெருமான் பங்கயக்கண்சுடர் பவளவாயன் — இவ்வழகையநுபவித்தவள் பிரிந்து ஆறியிருப்பளோவென்று சொல்ல வேணுமென்பது கருத்து. ... ... ... ... (7)

எனக்கொன்றுபணியீர்கள் இரும்பொழில்வாயிரைதேர்ந்து*
மனக்கின்பப்படமேவும் வண்டினங்காள்தும்பிகாள்*
கனக்கொள்திண்மதிள்புடைசூழ் திருமூழிக்களத்துறையும்*
புனக்கொள்காயாமேனிப் பூந்துழாய்முடியார்க்கே. (8)

| | | | |
|---|---|---|---|
| இரு பொழில் வாய் | பெரிய சோலையிலே | திருமூழிக்களத்து உறையும் | திருமூழிக்களத்திலே வாழ்பவராய் |
| இரை தேர்ந்து | இரையான மதுவைத் தேடிக் கொண்டு | புனம் கொள் காயா மேனி | தன்னிலத்தில் வளருகிற காயாம்பூப் போன்ற மேனி நிறத்தையுடையவராய் |
| மனக்கு இன்பம் பட மேவும் | மனதுக்கு இனிமையுண்டாம்படி கலந்துவர்த்திக்கிற | பூ துழாய் முடியார்க்கு | பூந்துழாயை முடியிலே அணிந்துள்ளவரான பெரியவர்க்கு |
| வண்டு இனங்காள் தும்பிகாள் | வண்டுகளே ! தும்பிகளே !, | எனக்கு ஒன்று பணியீர்கள் | எனக்காக வொரு வார்த்தை சொல்லவேணும். |
| கனம் கொள திண் மதிள் புடை சூழ் | கனத்துத திண்ணிய மதிளாலே சுற்றும் சூழப்பட்ட | | |

***—அவருடைய வடிவழகுக்கு என்ன அபாயம் நேருகிறதோவென்று அஞ்ச வேண்டாதபடி ஸுரக்ஷிதமாக வொரு திவ்ய தேசத்திலே யெழுந்தருளியிருந்தார்; இனி நம்முடைய ஆர்த்தி தீர்க்குமத்தனையே வேண்டுவது; ஆனபின்பு என்னுடைய ஆர்த்தியை அறிவியுங்கோளென்று சில வண்டுகளையும் தும்பிகளையுங்குறித்துச் சொல்லுகிறாள். ஆறாயிரப்படி காண்மின் :—"வண்டினங்காள் தும்பிகாள் !, உன்னழகைக் காணப்பெறாதே அவளிழந்துபோமித்தனையோவென்று சொல்லிகோளென்கிறாள்" என்று.

எனக்கு ஒன்றுபணியீர்கள் = அத்தலையில் சென்று எனக்காக வொருவார்த்தை சொல்லுங்கோள்; நீங்கள் ஒரு வார்த்தை சொல்லாவிடில் முடியும்படியான நிலைமையன்றோ என்னுடையது. [இரும்பொழில்வாய் இத்யாதி.] நீங்கள் மாத்திரம் இன்புற்றிருந்தால் போதுமோ? பிறரை வாழ்விப்பதன்றோ உங்களுடைய வாழ்ச்சி. மனக்கு—மனத்துக்கு; அத்துச்சாரியை பெறாதசொல்.

யாரிடத்திற்சென்று என்ன வார்த்தை சொல்லவேணு மென்ன; [கனக்கோள் இத்யாதி.] கனத்துத் திண்ணிய மதிள்சூழ்ந்த திருமூழிக்களத்திலே ரக்ஷணத்திற்குத் தனிமாலையிட்டிருக்கும் பெருமானுடைய புனக்கொள் காயாமேனியிலே [வடிவழகிலே] எனக்குள்ள விருப்பதைதைச் சொல்லுங்கோளென்றபடி. ... ... ... (8)

பூந்துழாய்முடியார்க்குப் பொன்னாழிக்கையாருக்கு*
ஏந்துநீரிளங்குருகே திருமூழிக்களத்தாருக்கு*
ஏந்துபூண்முலைபயந்து என்னிணைமலர்க்கண்ணீர்ததும்ப*
தாந்தம்மைக்கொண்டகல்தல் தகவன்றென்றுரையீரே. (9)

| | | | |
|---|---|---|---|
| நீர் ஏந்து இள குருகே | நீராலே யேந்தப்படுகிற இளங் குருகே ! | என் இணை மலர் கண் நீர் ததும்ப | மலர்போன்ற எனது கண்ணிணைகள் நீர்மல்கும்படி |
| பூ துழாய் முடியார்க்கு | திருத்துழாயைத் திருமுடியிலே அணிந்துள்ளவரும் | தாம் தம்மை கொண்டு அகல்தல் | அவர்தாம் தம்முடைய திருமேனியையுங் கொண்டு அகன்று போவதானது |
| பொன் ஆழி கையாருக்கு | அழகிய திருவாழியைக் கையிலே யுடையவரும் | தகவு அன்று என்று உரையீர் | தருமமன்று என்று சொல்லுங்கோள். |
| திருமூழிக்களத்தாருக்கு | திருமூழிக்களத்தில் வாழ்பவருமான பெரியவர்க்கு | | |
| பூண் ஏந்து முலை பயந்து | ஆபரணமணிந்த முலைகள் வைவர்ணியமடைந்து | | |

***—எம்பெருமானுடைய வடிவழகுதான் நினைக்க நினைக்க ஆழ்வாரை யுருக்குகின்றதென்னுமிடம் நன்கு தெரிவிக்கப்படுகிறது இப்பாட்டில். "தாம் தம்மைக் கொண்டகல்தல் தகவன்றென்றுரையீரே" என்கிற [ஈற்றடி] வார்த்தை மிகவியக்கத்தக்கது; எம்பெருமான்

என்னைவிட்டுப் பிரிந்து போம்போது தன்னுடைய திருமேனியை இங்கு வைத்திட்டன்றோ போயிருக்கவேண்டும்; அந்தத் திருமேனியையுங்கொண்டு அகன்று போனாரே, இது தகவோ வென்று கேளுங்கோளென்று குருகினங்களை நோக்கிக் கூறுகின்றாள். உலகில் விநோதமாகப் பேசுகிறவர்கள் "நடந்தால் உடலும் கூடக்கூட வருகிறது, இதுதான் எனக்குப் பெரிய வியாதி" என்று சொல்லுவதுண்டு; இது வொரு ஹாஸ்யவசனமாகக் கொள்ளப்படுகிறது; இந்த முறையில்தானுள்ளது இங்கு ஆழ்வாருடைய வாசகமும். 'தாம் போகவேணுமானால் தம்மை வைத்துவிட்டுப் போகவேண்டாவோ' என்கிற இவ்வார்த்தையின் கருத்து இவ்வளவே—அவர் இறைப்பொழுதும் பிரிந்துபோகவே தகாது என்பதாம். அவருடைய பிரிவு ஆற்றவொண்ணாதென்பதை முதலடியால் மூதலிக்கிறாள்; பூந்துழாய் முடியார்க்குப் பொன்னாழிக்கையாருக்கு=அவர் திருமுடியிலே திருத்துழாய் மாலை சாத்திக்கொண்டிருக்குமழகு ஒன்றுபோதுமே; அதற்குமேல் கையுந்திருவாழியுமானவழகு "சுடராழியும் பல்லாண்டு" என்று ஆலத்திவழிக்கவேண்டும்படியன்றோவுள்ளது; இவ்வழகுகளை நினைத்தன்றோ நான் வைவர்ணியமடைந்தும் கண்ணீர் சோர்ந்தும் நிற்பது; இந்நிலையைச் சென்று சொல்லவேணுமென்றாளாயிற்று. ... ... .... (9)

தகவன்றென்றுரையீர்கள் தடம்புனல்வாயிரைதேர்ந்து*
மிகவின்பம்படமேவும் மென்னடையவன்னங்காள்*
மிகமேனிமெலிவெய்தி மேகலையுமீடழிந்து*என்
அகமேனியொழியாமே திருமூழிக்களத்தார்க்கே. (10)

| | | | |
|---|---|---|---|
| தட புனல் வாய் | விசாலமான நீர்நிலங்களிலே | மேகலையும் ஈடு அழிந்து | மேகலையும் தங்காதபடியாகி (அதற்கு மேலே) |
| இரை தேர்ந்து | இரை தேடிக்கொண்டு | என் அகமேனி ஒழியாமே | என் அந்தரங்க ஸ்வரூபம் குலையாதபடிக்கு |
| மிக இன்பம் பட மேவும் | பேரானந்தமாகச் சேர்ந்து வாழ்கிற | திருமூழிக்களத்தார்க்கு | திருமூழிக்களத்துறையும் பெருமானுக்கு |
| மெல் நடைய அன்னங்காள் | மல்லிய நடையையுடைய | தகவு அன்று என்று உரையீர்கள் | இப்படியுபேக்ஷிப்பது நியாயமன்றென்று சொல்லுங்கோள். |
| மேனி மிக மெலிவு எய்தி | சரீரம் மிகவும் மெலிவடைந்து | | |

***—நான் முடிவதற்கு முன்னே என்னிலைமையைத் திருமூழிக்களத்தெம்பெருமானுக்கு உரையீரென்று சில அன்னங்களையிரக்கிறாள். தகவன்றென்று உரையீர்கள்—மருமத்தில் பொறுக்கும்படியான வார்த்தை இதுதானென்று ஆழ்வார் திருவுள்ளம். கருணையையே நிரூபகமாகக்கொண்டு அருளாளனென்றும் பேரருளாளனென்றும் விருதுசுமந்து திரிகிற அவர்க்குக் கருணையில்லை யென்னுங்கோளென்கிறாள். 'தகவு இல்லை' என்னாதே 'தகவு அன்று' என்கையாலே—அவரிடத்திலே கருணை இல்லை யென்னப்போகாது; கடலில் நீர் வற்றிற்று என்னவொண்ணாதாப்போலே அருட்கடலான அவரிடத்திலே கருணை வற்றிற்று என்னலாகாது; நீர் செய்வது கருணையின் காரியமன்று என்னுங்கோள்—என்கிறாளென்றுங் கொள்ளலாம். எந்த அன்னங்களைக் குறித்துச் சொல்லுகிறாளோ அந்த அன்னங்களை "தடம்புனல் வாயிரைதேர்ந்து மிகவின்பம்படமேவும் மென்னடைய" என்று விசேஷிக்கிறாள். இதனால் மஹாசாரியர்களே இங்கு அன்னமாக விளிக்கப்படுகிறார்களென்பது தெரியவரும். தங்களுக்குப் பரம போக்யமான அர்த்தங்களைத் தேடுவதிலேயே நோக்குடையவர்களும் அதுவே பேரின்பமாக விருப்பவர்களும் நல்ல நடத்தையை யுடையவர்களுமாயிருப்பவர்களை விளித்தபடி.

தன்னுடைய இருப்பைச் சொல்லுகிறாள் மூன்றாமடியில்; உடம்புமிக மெலிந்து அரையில் துணியும் தங்காதபடியன்றோ நானிருப்பது. என் அகமேனியொழியாமே—

இதற்கு 'உரையீர்கள்' என்பதனோடே அந்வயம். 'என் அகமேனியொழியாமே உரையீர்கள்'—அவனுக்கு அந்தரங்கசரீரமாயிருக்கிற நான் ஒழிவதற்கு முன்னே உரையீர்கள் என்றபடி. ஸகலாத்மாக்களும் எம்பெருமானுக்கு சரீரமாயிருக்கச் செய்தேயும் ஆழ்வார் விசேஷித்து அவனுக்கு அந்தரங்கசரீரமாகையாலே அகமேனி எனப்பட்டது. என் அகமேனியென்றது — அப்பெருமானுக்கு அந்தரங்கசரீரமாயிருக்கின்ற என்னுத்ம ஸ்வரூபம் என்றபடி. ... ... ... ... (10)

ஒழிவின்றித்திருமூழிக்களத்துறையு மோண்சுடரை*
ஒழிவில்லாவணிமழலைக் கிளிமொழியாளலற்றியசொல்*
வழுவில்லாவண்குருகூர்ச் சடகோபன்வாய்ந்துரைத்த*
அழிவில்லாவாயிரத்து இப்பத்தும்நோயறுக்குமே. (11)

| | | | |
|---|---|---|---|
| ஒழிவு இன்றி திருமூழிக்களத்து உறையும் | திருமூழிக்களத்திலே வாழ்கிற | வழு இல்லா வண் குருகூர் சடகோபன் வாய்ந்து உரைத்த | அன்பில் குறைவில்லாதவரான ஆழ்வார் ஆழ்ந்து அருளிச் செய்த |
| ஒண் சுடரை | தேஜோமூர்த்தியான எம்பெருமானை | அழிவு இல்லா | நித்யவேதமான இவ்வாயிரத்தினுள் |
| ஒழிவு இல்லா அணி மழலை கிளி மொழியாள் அலற்றிய சொல் | பிரிந்து தரிக்கமாட்டாதவொரு மென்கிளிமொழித் தலைவி சொன்ன சொல்லாகவைத்து | இப்பத்தும் | இப்பதிகம் |
| | | நோய் அறுக்கும் | ஸம்ஸார வியாதியைத் தீர்த்துக் கொடுக்கும். |

***—இத்திருவாய்மொழியானது தன்னைப்பயிலுமவர்கட்கு பகவத்விச்லேஷ ஹேதுவான ஸம்ஸார வியாதியையறுக்குமென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். திருமூழிக்களத்து ஒழிவின்றியுறையும் ஒண்சுடரை=எம்பெருமான் ராமகிருஷ்ணாத்யவதாரங்கள் பண்ணியிருந்து ஒரு காலவிசேஷத்திலே தன்னடிச் சோதிக்கு எழுந்தருளியாகிறது; அர்ச்சாவதாரம் அப்படியன்றே. 'ஸம்ஸாரம் கிழங்கெடுத்தாலல்லது பேரேன்' என்றிருக்குமிருப்பாகையாலே ஒழிவின்றியுறையு மென்கிறது. திருநாட்டில் விளங்கப்பெறாத திருக்குணங்களும் இருட்டறையில் விளக்குப்போலே பிரகாசிப்பது இங்கேயாதலால் ஒண்சுடரை என்றது.

இரண்டாமடியில் அணிமழலைக் கிளிமொழியாள் என்றது ஆழ்வார் தம்மையன்று; "எம்பெருமானைப் பிரியில் தரிக்கமாட்டாத ஸ்வபாவையாயிருப்பாளொரு பிராட்டி அவனைப் பிரிந்து அலற்றின பாசுரத்தாலே, தத்ஸத்ருசஸ்வபாவரான வண்குருகூர்ச்சடகோபன் எம்பெருமானைப் பிரிந்தலற்றின இப்பத்து" என்பது ஆறாயிரப்படியருளிச் செயல். ... (11)

## திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையுரையில்

ஒன்பதாம்பத்து ஏழாந் திருவாய்மொழி

முற்றிற்று.

நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# எட்டாந்திருவாய்மொழி—அறுக்கும்வினையாயின.

உரையவதாரிகை: — கீழ்த்திருவாய்மொழியில் திருமூழிக்களத் தெம்பெருமான் பக்கலில் தூதுவிட்டார். தூது சென்றவர்கள் மீண்டுவந்து செய்தி சொல்லுமளவும் ஆறியிருக்கவேணுமே; எங்ஙனே ஆறியிருப்பர். திருநாவாயிலே சென்று கிட்டுவோமென்று பார்த்தார். *காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்* என்ன வேண்டும் நிலைமையிலிருக்கு மிவர் தாம் எங்ஙனே திருநாவாய்க்குச் செல்வர்? இருந்தவிடத்திலேயிருந்து மநோரதிக்கக் குறையில்லையே. அந்த மநோரதமே இத்திருவாய்மொழியாகப் பரிணமிக்கிறதாயிற்று.

"திருவடிசென்று பிராட்டியைத் திருவடிதொழுது மீண்டவனந்தரம் பெருமாளைக் கிட்டுவதற்கு முன்பு பிராட்டிக்குப் பிறந்த மநோரதம்போலே, கீழ்விட்ட தூதர் அத்தலைப் பட்டு அவனைக் கொண்டு வருவதற்கு முன்னே நடுவு இவர்க்குப் பிறந்த மநோரதத்தைச் சொல்லுகிறது." என்பது ஈடு.

திருமூழிக்களம்போலே திருநாவாயும் மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றில் ஒன்று. அங்கே புகவல்லேனோ? புகும்நாள் என்றோ? அங்கே புக்கு என் கண்ணாரக்கண்டு அடிமை செய்யவல்லேனோ? என்றிப்படி பல மநோரதங்களைப் பண்ணுகிறாராய்ச் செல்லுகிறது இத்திருவாய்மொழி. ... ... ... *

அறுக்கும்வினையாயின ஆகத்தவனை*
நிறுத்தும்மனத்தொன்றிய சிந்தையினார்க்கு*
வெறித்தண்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய்*
குறுக்கும்வகையுண்டுகொலோ கொடியேற்கே. (1)

| | | | |
|---|---|---|---|
| அவனை | பரமபோக்யனான ஸர்வேச்வரனானவனை | வெறி தண் மலர் | நறுமணம்மிக்குக் குளிர்ந்த புஷ்பங்களைக்கொண்ட |
| ஆகத்து | தங்கள் உள்ளத்திலே | சோலைகள் சூழ் | சோலைகளாலே சூழப்பட்டதான |
| நிறுத்தும் மனத்து ஒன்றிய | நிலைநிறுத்தி வைத்துக்கொள்ள வேணுமென்கிற கருத்திலே ஒருமைப்பாடுடைய | திருநாவாய் | திருநாவாயென்னும் திருப்பதியானது |
| சிந்தையினார்க்கு | மநோரதத்தையுடைய பக்தர்களுக்கு | கொடியேற்கு | கொடியேனான வெனக்கு |
| வினை ஆயின அறுக்கும் | அநுபவ விரோதிகளையெல்லாம் போக்கக் கடவதாய் | குறுக்கும் வகை உண்டு கொல் ஓ | கிட்டும் வகையுண்டோ? |

***திருநாவாய்த்திருப்பதி எனக்கு ஸமீபஸ்தமாகைக்கு உபாயமுண்டோவென்கிறார். அறுக்கும் வினையாயின='வினை அறுக்கும்' என்னாமல் 'வினையாயின அறுக்கும்' என்றது—விரோதியென்று பேர்பெற்றவை யடங்கலும் போக்கும் என்றபடி. ஸ்வரூப விரோதியென்றும் உபாய விரோதியென்றும் உபேயவிரோதியென்றும் மூன்று விரோதிகள் திருமந்த்ரார்த்த நிர்வாஹத்தில் தெரிவதுண்டே. இவ்வளவேயுமன்றே விரோதிகள்; இப்போதுள்ள தேஹத்தளவிலே முடியாமல் ப்ராரப்தசேஷமாய்க் கொண்டு அப்பாலும் செல்லக்கூடிய விரோதிகளுமுண்டே; ஆக எல்லாவகை விரோதிகளையுமறுக்குமென்றபடி. இப்படி வினைகளை யறுப்பது ஆர்க்கு? என்னில்; அவனை ஆகத்து நிறுத்தும் மனத்துஒன்றிய சிந்தையினார்க்கு= ஹ்ருதயத்திலே அவனை நிலைநிறுத்தவேணுமென்னும் அத்யவஸாயத்திலே ஒருமைப்பட்ட மநோரதத்தையுடையவர்களுக்கு.

*விரோதிகளைப் போக்குவது மாத்திரமன்றிக்கே பரம போக்யமுமானது என்கிருர் மூன்ருமடியினல். வினையைப் போக்காதே வளரச் செய்தாலும் விடவொண்ணுதபடி போக்யதை மிகுந்த திவ்யதேசம் திருநாவாய். குறுக்கும் வகையுண்டு கொலோ=திருநாவாய்ப் பதியை ஸமீபஸ்தமாம்படி செய்யுமுபாயமுண்டோ? என்று பொருள் கொள்ளலாமாயினும், திருநாவாய்ப்பதியானது ஸமீபிக்கும்படியான உபாயமுண்டோ வென்று பொருள் கொள்வது பொருந்தும். குறுகும் வகையென்பது குறுக்கும் வகையென்று தேச பாஷைக்குச் சேரக் கிடக்கிறது. எம்பெருமானர் மலைநாட்டுத திருப்பதி யாத்திரையாக எழுந்தருளாநிற்கையில் திருநாவாய் ஸமீபத்திலே யெழுந்தருளும்போது எதிரே வந்து கொண்டிருந்த மலையாளர்களை நோக்கி 'திருநாவாய் எவ்வளவுதூரமுண்டு?' என்று கேட்க, அவர்கள் 'குறுக்கும்' என்ருர்களாம். [தமிழ்ப் பாஷையில் குறுகுமென்பது மலையாள பாஷையில் குறுக்குமென்று கிடக்கிறது, ஸமீபத்தில்தானுள்ளது—என்று பொருள்.] எம்பெருமானர் அதுகேட்டு 'இப் பாஷையாலே அருளிச் செய்வதே ஆழ்வார்!' என்று ஈடு பட்டாராம்.* ... ... (1)

கோடியேரிடைக் கோகனகத்தவள்கேள்வன்*
வடிவேல்தடங்கண் மடப்பின்னைமணுளன்*
நெடியானுறைசோலைகள்சூழ் திருநாவாய்*
அடியேனணுகப்பெறுநாள் எவைகோலோ. (2)

| | | | |
|---|---|---|---|
| *கொடி ஏர் இடை* | *கொடிபோலழகிய இடையை யுடையளாய்* | *நெடியான்* | *மஹா புருஷனுனவன்* |
| *கோகனகத்தவள்* | *தாமரையாளான பிராட்டிக்கு* | *உறை* | *நித்யவாஸம்பண்ணுகிற* |
| *கேள்வன்* | *வல்லபனுய்* | *சோலைகள் சூழ் திருநாவாய்* | *சோலைகளாலேசூழப்பட்ட திருநாவாயை* |
| *வடி வேல் தட கண் மட பின்னை மணுளன்* | *கூரிய வேல்போன்ற பெரிய கண்களையுடைய அழகிய நப்பின்னைப் பிராட்டிக்கு மணவாளனுய்* | *அடியேன் அணுகப்பெறும் நாள் எவை கொல் ஓ* | *அடியேன் கிட்டப்பெறுவது என்றைக்கோ?* |

****—பெரிய பிராட்டியாரோடும் நப்பின்னைப் பிராட்டியாரோடுங்கூட அவன் எழுந்தருளியிருக்கிற திருநாவாயிலே போய்ப்புகுவது என்றைக்கோ வென்கிருர். கொடி போன்றழகிய இடையை யுடையளாய், தாமரைப் பூவிற் பரிமளம் உபாதானமாகப் பிறந்தவளான பிராட்டிக்கு வல்லபன்; கூரிய வேல் போன்றழகிய கண்ணையுடையளான நப்பின்னைப் பிராட்டிக்கு மணவாளன். இவ்விரண்டு விசேஷணங்களின் கருத்து—புருஷகாரம் செய்து சேர்ப்பிக்கவல்லவர்கள் அருகேயிருக்கச் செய்தேயும் நான் இழக்கலாமோ என்பதாம்.* (2)

எவைகோலணுகப்பெறுநா ளென்றேப்போதும்*
கவையில்மனமின்றிக் கண்ணீர்கள்கலுழ்வன்*
நவையில்திருநாரணன்சேர் திருநாவாய்*
அவையுள்புகலாவதோர் நாளறியேனே. (3)

| | | | |
|---|---|---|---|
| *அணுக பெறு நாள் எவை கொல் என்று* | *கிட்டப்பெறும் நாள் எந்நாளோ வென்று* | *நவை இல் திரு நாரணன் சேர்* | *ஹேயப்ரத்யநீகனுன திருமால் வர்த்திக்கிற* |
| *எப்போதும்* | *எக்காலத்திலும்* | *திருநாவாய் அவையுள்* | *திருநாவாய்ப்பதியில் திருவோலக்கத்திலே* |
| *கவையில் மனம் இன்றி* | *இரட்டைப்பட்ட நெஞ்சின்றிகே ஏகாக்ரசித்தனுய்க் கொண்டு* | *புகல் ஆவது ஓர் நாள்* | *சென்று சேர்வதற்கீடானவொரு நாளை* |
| *கண் நீர்கள் கலுழ்வன்* | *கண்ணநீர் பெருவெள்ளமிடநிற்பேன்;* | *அறியேன்* | *அறிகின்றிலேன்.* |

***—திருநாவாயில் மஹா கோஷ்டியிலே சென்று சேர்ந்து அநுபவிக்கும் நாள் எதுவோ? அறிகிறிலேன் என்று அலமருகின்றார். நான் வந்து கிட்டப்பெறும் நாள் எதுவோ வென்று இதையே எப்போதுஞ் சொல்லிக் கண்ணீர் சோரவிருக்கின்றேன். துர்லபத்வம் முதலான தோஷங்களின்றிக்கே திருநாவாயிலே வந்து ஸுலபனான ஸ்ரீமந் நாராயணன் அங்குப் பெரிய திருவோலக்கமாக இருக்க அத்திரளிலேசென்று கூடப் பெறும விருக்க என்னலாகுமோ? *அடியார்கள் குழாங்களை யுடன் கூடுவதென்று கொலோ* என்று ஆசைப்பட்ட நான் அத்திரளிலே சென்று கூடப்பெறுதிருப்பது தகுமோ? என்றாராயிற்று.

[கவையில் மனமின்றி] கவையிலேயான மன மின்றிக்கே—இருதலைப்பட்ட நெஞ்சின்றிக்கே யென்றபடி. ஏகாக்ரசித்தனாய்க்கொண்டு என்பது தாற்பரியம். இரட்டைப்பட்டிருப்பதற்குக் கவை யென்று பெயர்; "கவைநாவரவினணைப் பள்ளியின்மேல்" என்றார் திருமங்கையாழ்வாரும். கலுழ்வன்—வெள்ளமிட நிற்பேன் என்றபடி. ... ... (3)

நாளேலறியேன் எனக்குள்ளனநானும்*
மீளாவடிமைப் பணிசெய்யப்புகுந்தேன்*
நீளார்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய்*
வாளேய்தடங்கண் மடப்பின்னைமணாளா. (4)

| | | | |
|---|---|---|---|
| நீள் ஆர் மலர் சோலைகள் சூழ் திருநாவாய் | ஓங்கி நிறைந்த பூக்களையுடைய சோலைகள் சூழ்ந்த திருநாவாயிலே (எழுந்தருளியிருக்கிற) | நானும் | அடியேனும் |
| | | மீளா அடிமை பணி செய்ய புகுந்தேன் | இடையறாத நித்ய கைங்கரியத்திலே நிரதனானேன்; |
| வாள ஏய் தட கண் | வாள்போன்று பெரிய கண்களை யுடையளாய் | எனக்கு உள்ளன நாள் அறியேன் | அதுக்கு எனக்கு நீ ஸங்கல்பித்துவைத்த நாள் அறிகின்றிலேன். |
| மட பின்னை மணாளா | நப்பின்னைப் பிராட்டிக்கு வல்லபனானவனே! | | |

***—ஆத்மாவுள்ளவரையில் கைங்கரியம் பண்ணும்படி விஷயீகரிக்கப்பெற்ற நான் திருநாவாயில் நம்பின்னைப் பிராட்டியோடே கூடவிருக்கிற இருப்பிலே அடிமை செய்யப் பெறும் நாள் என்றோ! அறிகிறிலேன் என்கிறார். நாளேலறியே னெனக்குள்ளன=நான் பிரிந்து துக்கப்பட வேண்டிய நாள் இன்னுமெத்தனை நாளுண்டென்று அறிகின்றிலேன் என்றும், அநுபவிக்கப் பெறும் நாள் என்றைக்கென்று அறிகின்றிலேன் என்றும் இரண்டு வகையும் பொருள் கொள்ளலாம். நானும் மீளாவடிமைப் பணி செய்யப் புகுந்தேன்=நித்ய ஸூரிகள் பண்ணும் யாவதாத்மபாவியான கைங்கரியத்திலேயன்றோ நானும் அந்வயித்திருப்பது. நீளார் மலர்ச்சோலைகள் சூழ் திருநாவாய்=கைங்கரியம் பண்ணுகைக்குப் புஷ்பம் முதலிய உபகரணங்களினால் குறையொன்று மின்றிக்கே யிருக்கிற திவ்ய தேசமென்றபடி. இத்திருவாய்மொழியில் பிராட்டி ஸம்பந்தம் அடிக்கடி அநுஸந்திக்கப் படுகிறது; அதற்குக் காரணமருளிச் செய்கிறார் நம்பிள்ளை—"தேசாந்தரம்போன ப்ரஜை ஊர் அணித்தானவாறே தாய்மாரைப் பலகால் நினைக்குமாபோலே, ப்ராப்யதேசம் அணித்தானவாறே திரளவும் தனித்தனியும் பிராட்டிமாரை யநுஸந்திக்கிறார்" என்று. ... (4)

மணாளன்மலர்மங்கைக்கும் மண்மடந்தைக்கும்*
கண்ணாளனுலகத்துயிர் தேவர்கட்கெல்லாம்*
விண்ணாளன்விரும்பியுறையும் திருநாவாய்*
கண்ணாரக்களிக்கின்றது இங்கென்றுகோல்கண்டே. (5)

| | | | |
|---|---|---|---|
| மலர்மங்கைக்கும் | பெரிய பிராட்டியாருக்கும் | விரும்பி உறையும் திருநாவாய் | ஆதாரத்தோடு வர்த்திக்கிற திருநாவாயை |
| மண் மடந்தைக்கும் | பூமிப்பிராட்டிக்கும் | | |
| மணாளன் | மணவாளனாய் | | |
| உலகத்து உயிர் தேவர்கட்கு எல்லாம் கண்ணாளன் | மண்ணுலகத்தவர்க்கும் விண்ணுலகத்தவர்க்கு மெல்லாம் நிர்வாஹகனாய் | கண் ஆர கண்டு | கண்கள் வயிறு நிறையும்படி கண்டு |
| விண் ஆளன் | பரமபதத்திலுள்ளாரையும் அடிமை கொள்ளுபவனான ஸர்வேச்வரன் | இங்கு களிக்கின்றது என்று கொல் | இங்கே ஆனந்திப்பது என்றைக்கோ ? |

***—என் கண்களின் விடாய்தீரத் திருநாவாயைக் கண்டு அநுபவிக்கப்பெறுவது என்றைக்கோ வென்கிறார். மலர் மங்கைக்கும் மண்மடந்தைக்கும் மணாளன்—பெரிய பிராட்டியார்க்கும் பூமிப் பிராட்டியாருக்கும் வல்லபனானவன். ஒருத்தி புருஷகாரத்திலே ஊன்றியிருப்பள்; மற்றொருத்தி பொறுமைதானே வடிவெடுத்தவளாயிருப்பள். இப்படிப் பட்ட இருவரும் அருகேயிருக்க, நான் இழக்கத்தகுமோ வென்றபடி. உலகத்துயிர் தேவர்கட்கேல்லாம் கண்ணாளன்—மண்ணுலகிலுள்ள மனிசர்களென்ன, விண்ணுலகிலுள்ள தேவர்களென்ன ஆகிய அனைவர்க்கும் நிர்வாஹகன். உபயவிபூதி நாதனானவனுக்கு நானொருவன் புறம்புபட்டேனோவென்பது கருத்து. விண்ணாளன் விரும்பியுறையும் திருநாவாய்=பிராட்டிமாரும் தானும் தனக்குத் தகுதியான பரமபதத்தில் திவ்ய பர்யங்கத்திலேயிருந்து நித்யஸூரிகளை நிர்வஹிக்கிறவன் பெருப்பேறாக ஆதரித்து வர்த்திக்கிற திவ்ய தேசமன்றோ திருநாவாய்; இதனைக் காண்கையிலே விடாய்ப்பட்ட கண்கள் வயிறு நிறையக் கண்டு களிப்பது என்நாளோ ? என்கிறார். (5)

கண்டேகளிக்கின்றது இங்கேன்றுகோல்கண்கள்*
தொண்டேயுனக்காயோழிந்தேன் துரிசின்றி*
வண்டார்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய்*
கோண்டே யுறைகின்ற எங்கோவலர்கோவே. (6)

| | | | |
|---|---|---|---|
| வண்டு ஆர் மலர் சோலைகள் சூழ் திருநாவாய் | வண்டுகள் நிறைந்த மலரை யுடைய சோலைகள் சூழ்ந்த திருநாவாயை | துரிசு இன்றி உனக்கே தொண்டு ஆய் ஒழிந்தேன் | க்ருத்ரிமமில்லாமல் உனக்கே தொண்டனாய்விட்டேன். |
| கொண்டு உறைகின்ற | உகந்தவிடமாகத் திருவுள்ளம் பற்றி வர்த்திக்கிற | கண்கள் | எனது கண்களானவை |
| எம் கோவலர் கோவே | எம் கோபாலக்ருஷ்ணனே ! | இங்கு கண்டே களிக்கின்றது என்று கொல் | இத் திருப்பதியிலே கண்டு ஆனந்திக்கப் பெறுவது என்றைக்கோ ? |

***—எனக்காகத் திருநாவாயைக் கோயிலாகக் கொண்டு உறைகின்ற கோவலர் கோவே! உன்பக்கலிலே அநந்ய ப்ரயோஜனமான அன்பையுடையேனான வென்னுடைய கண்களின் விடாய் சொல்லத்தரமன்று; என்பசி தீராவிட்டாலும் என் கண்களின் பசி தீர்ந்தால் போதுமேயென்கிறார்; உலகில் யாசிப்பவர்கள் 'என் பசி கிடக்கட்டும்; என் குழந்தை படுகிறபாடு பாருங்கள்; அதன் பசியை முன்னம் தீர்த்தால் போதும்' என்பர்களே; அது போலச் சொல்லுகிறபடி. [துரிசின்றி உனக்கே தோண்டா யோழிந்தேன்] உன்னை ஒரு எண்ணமும் வெளியே மற்றோரெண்ணமுமாக இருக்குமிருப்பு துரிசு எனட் ம; அதாவது க்ருத்ரிமம்; அஃதின்றிக்கே உனக்கே தொண்டா யொழிந்தேனென்கிறார். (6)

கோவாகிய மாவலியைநிலங்கொண்டாய்*
தேவாசுரம்செற்றவனே திருமாலே*
நாவாயுறைகின்ற என்னாரணநம்பீ*
ஆவாவடியானிவனென்றருளாயே. (7)

கோ ஆகிய மாவலியை — பிரபுவாகத் தன்னை யபிமானித்து மஹாபலியிடத்தினின்றும்
நிலம் கொண்டாய் — பூமியை இரந்து பெற்றவனே!
தேவாசுரம் செற்றவனே — தேவாஸுர யுத்தத்தில் ஒரு தலைக்குதவனே!
திருமாலே — திருமகள் கொழுநனே!
நாவாய் உறைகின்ற — திருநாவாயிலே வர்த்திக்கிற
என நாரணநம்பீ — எனது நாராயணமூர்த்தியே!
ஆவா — ஐயோ!
இவன் அடியான் என்று அருளாய் — இவன் நமக்கு அடியவனன்றோவென்று க்ருபை பண்ணியருளவேணும்.

* * *—திருநாவாயிலே நித்யவாஸம் பண்ணியருளாநின்ற தேவரீர் அடியேனுடைய அநந்யகதித்வத்தைக்கண்டு அருள் செய்தருளவேணுமென்கிறார். [கோவாகியமாவலியை நிலங்கொண்டாய்] ஸர்வேச்வரன் இந்திரனை த்ரிலோகாதிபதியாக்கி வைத்தான்; அவனைத் தள்ளி அந்தப் பதவியைத் தான் கொள்ளை கொண்டு 'நானே அரசு' என்றிருந்தானாயிற்று மாவலி. அவன்றன் ஔதார்யமென்று ஒரு மஹாகுணமுடையனாயிருந்தபடியாலே அதுவே பற்றாசாகத் தான் இரப்பாளனாய் நின்று வெகு சாதுரியமாகக் காரியத்தை முடித்தானாயிற்று எம்பெருமான். [தேவாசுரஞ் செற்றவனே.] தேவாஸுரயுத்தத்திலே பரஸ்பரவதமேயாய்ச் செல்லா நிற்க, அநுகூலரான தேவர்களுக்காக அஸுரரை யழியச்செய்தவனே! என்றபடி. [திருமாலே!] விரோதிகளை யழித்து அடியார்களைக் காத்தருள்வதற்கு ஹேது பிராட்டியோடுண்டான சேர்த்தியென்று தெரிவித்தவாறு. இப்படிப்பட்ட திருக்குணங்கள் திருநாவாயிலே ப்ரத்யக்ஷிக்கலாம்படி யிருக்கின்றமையைக் காட்டுகின்றது மூன்றாமடி. என்னுடைய அநந்யகதித்வத்தையே நோக்கி க்ருபை செய்தருளவேணுமென்கிறார் ஈற்றடியால். (7)

அருளாதொழிவாயருள்செய்து*அடியேனைப்
பொருளாக்கி உன்பொன்னடிக்கீழ்ப்புகவைப்பாய்*
மருளேயின்றி உன்னையென்னெஞ்சத்திருத்தும்*
தெருளேதரு தென்திருநாவாயென்தேவே. (8)

அருளாது ஒழிவாய் — என்பால் அருள் செய்யாதிலுமிரு;
அடியேனை — அடியேன் பக்கலில்
அருள் செய்து பொருள் ஆக்கி — ஒரு வஸ்து
உன்பொன் அடி கீழ் புக வைப்பாய் — உன் திருவடிகளின் கீழ் வைத்துக் கொண்டாலும் கொள்;
தென் திருநாவாய் என் தேவே — அழகிய திருநாவாயில் வர்த்திக்கிற எம்பெருமானே!
மருளே இன்றி — ஒருகாலும் அஜ்ஞான கந்தமில்லாதபடி
உன்னை என நெஞ்சத்து இருத்தும் தெருளே தரு. — என்னுடைய நெஞ்சிலிருத்தியநுபவிக்கும்படியான தந்தருள வேணும்.

* * *—கீழ்ப்பாட்டில் "ஆவாவடியானிவனென்றருளாயே" என்றவர், இப்பாட்டில், அருளினுமருள்க: அருளாதொழியினுமொழிக என்கிறார். இப்பாட்டின் ஈற்றடியை அந்வயிப்பதில் யோஜநாபேதமுண்டு; தெருளேதரு என்பதை திருநாவாய்த் தேவனுக்கு விசேஷணமாக்கி யுரைப்பர் (ஆறாயிரப்படியில்) பிள்ளான். தரு—தந்தருளவேணும் என்று வினை முற்றாகக் கொண்டு உரைத்தனர் மற்றையுரை

யாசிரியர்கள். தரு என்பதற்கு, தா என்பதன் பொருளைக் கொள்ளுமிடத்து, தருக வென்பதன் கடைக்குறையாகக் கொள்ள வடுக்கும்.

ஆறுயிரப்படியருளிச்செயல் — "அஜ்ஞாநகந்தமில்லாத தொருபடி உன்னுடைய ஸ்வரூபரூபகுணவிபூதி விஷய திவ்யஜ்ஞானத்தை உன் க்ருபையாலே எனக்குத் தந்தருளின நீ இன்னமும் உன் க்ருபையாலே 'நம்மடியானிவன்' என்று விஷயீகரித்தருளி அடியேனை உன் பொன்னடிக்கீழ்ப் புகவைத்தருளுவாய், வைத்தருளாதொழிவாய்; திருவுள்ளமானபடி செய்தருள் என்று கொண்டு எம்பெருமானை இன்னுதாகிறுர்." என்று. "அருளவுமாம், தவிரவுமாம்; அஜ்ஞாநகந்தமில்லாதபடி உன்னை என்னெஞ்சிலே யிருத்தும்படி தெளிவைத் தரவேணுமென்கிறுர்" என்று மற்றுள்ள வாசிரியர்கள் பணிக்கும்படி. தெருளைப் பெற்றவரான ஆழ்வார் அதைத் தந்தருள வேணுமென்று ப்ரார்த்திப்பது—பெற்றவதனுக்கு விச்சேதமில்லாதபடி அபிவிருத்தியைச் செய்தருளவேணுமென்று ப்ரார்த்திக்கின்றபடி. (8)

தேவர்முனிவர்க்கென்றும் காண்டற்கரியன்*
மூவர்முதல்வன் ஒருமூவுலகாளி*
தேவன்விரும்பி யுறையும் திருநாவாய்*
யாவரணுகப்பெறுவார் இனியந்தோ. (9)

| | | | |
|---|---|---|---|
| தேவர் முனிவர்க்கு | தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் | தேவன் | எம்பெருமான் |
| என்றும் காண்டற்கு அரியன் | (ஸ்வப்ரயத்நத்தினுல்) எப்போதும் காணமுடியாதவனுய் | விரும்பி உறையும் | ஆதரத்தோடு வர்த்திக்குமிடமான. |
| மூவர் முதல்வன் | பிரமன் சிவனிந்திரர்க்கும் ஸத்தாஹேதுபூதனுய் | திருநாவாய் | திருநாவாய்ப்பதியை |
| ஒரு மூவுலகு ஆளி | மூவுலகங்களையும் நிர்வஹிக்குமவனுன | இனி | நான் முடிந்தேனுன பின்பு |
| | | யாவர் அணுக பெறுவார். | கிட்டியநுபவிக்கப் பெறுவாரார் கொல்? |
| | | அந்தோ | ஐயோ !. |

***—தாம் இப்படிச் சொல்லச் செய்தேயும் ஒரு விசேஷ கடாக்ஷம் செய்தருளாமையாலே 'நான் இவ்வாசையோடே முடியாநின்றேன். என்னுடைய அபிமதத்தைப் பெற்றுக் களிக்கப்போகிற பாக்யவான்கள் யாரோ?' என்கிறுர். [தேவர் முனிவர்க்கு என்றும் காண்டற்கு அரியன்] பிரமன் முதலிய தேவர்களுக்கும், ஸநக ஸநந்தநாதிகளான யோகிகளுக்குங்கூட தாமாகக் காண நினைக்கில் காண வரியனுயிருக்குமவன். மூவர் முதல்வன்—அரி அயன் அரன் என்று சொல்லப்படுகிற மூவர்க்குள்ளே முதன்மை பெற்றிருப்பவன் என்றும், பிரமன் சிவனிந்திரன் என்னும் மூவர்க்கும் நிர்வாஹகன் என்று முரைப்பர். ஒரு மூவுலகாளி—மூவுலகங்களையும் தன் ஸங்கல்பத்தாலே நிர்வஹிக்குமவன். ஆக இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த தேவன் ஆச்ரித ரக்ஷணத்திற்குப் பாங்கான தேசமிதுவென்று விரும்பியுறையுமிடமான திருநாவாய்ப்பதியை நானணுகப்பெறுதே முடியாநின்றேன், இனிப் பெறுவார் ஆரோ?

திருநாவாயில் சென்று ஸேவிக்கவேணுமென்று ஆழ்வார்க்கு நினைவாகில் இதில் அருமையொன்றுமில்லையே; புறப்பட்டுச் சென்று ஸேவிக்கத் தட்டேன்? என்று சிலர் சங்கிக்கக்கூடும். திருநாவாயை அணுகப்பெறவேணுமென்பதே உத்தேச்யமன்று; அவ்விடத்துறையும் பெருமானுக்கு அஸாதாரணமான திருநாடுதான் இங்கு உத்தேச்யம். ... (9)

அந்தோவணுகப்பெறுநாள் என்றெப்போதும்*
சிந்தைகலங்கித் திருமாலென்றழைப்பன்*
கோந்தார்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய்*
வந்தேயுறைகின்ற எம்மாமணிவண்ணா. (10)

| | | | |
|---|---|---|---|
| கொந்து ஆர் மலர் சோலைகள் சூழ் | கொத்தாக நிறைந்துள்ள மலர்களையுடைய சோலைகளாலே சூழப்பட்ட | அந்தோ அணுக பெறும் நாள்! என்று | ஐயோ! உன்னைக்கிட்டிவாழப் பெறுவதுமுண்டோ |
| திரு நாவாய் | திருநாவாய்ப்பதியிலே | எப்போதும் | ஸர்வகாலமும் |
| வந்தே உறைகின்ற | (பரமபதம் முதலான விடங்களையும் விட்டு) வந்து நித்ய வாஸம் பண்ணுகிற | சிந்தை கலங்கி | நெஞ்சு தளும்பி |
| எம் மா மணி வண்ணா | எமக்குப் பரமபோக்யனான நீல மணிவண்ணனே! | திருமால் என்று அழைப்பன் | திருமாலே! யென்று கூப்பிடா நின்றேன். |

***—உன்னைக் காணப் பெறாமையாலே நெஞ்சழிந்து கூப்பிடா நின்றேன் காணென்கிறார். தொடங்கும்போதே அந்தோவென்கிறார்—சொல்லத் தொடங்கினது தலைக்கட்ட மாட்டாத பலஹானியாலே. "அணுகப் பெறுநாள் எவைகொல்" என்ன வேண்டியிருக்க அவ்வளவும் சொல்லமாட்டிற்றிலரன்றோ. [எப்போதும்] ஒருகால் சொல்லத்தொடங்கி இளைத்தால் பின்னைத் தவிரலாமே; ஆசை வாளாவிருக்க வொட்டுகிறதில்லை. எப்போதும் இதுவே யாத்திரையானபடி.

[சிந்தை கலங்கித் திருமாலென்றழைப்பன்]—அத்தலைக்குத் திருவுள்ள மில்லையாகில் நாம் அழைப்பதனால் என்னாகும்? என்கிற தெளிவின்றிக்கே சிந்தை கலங்கியிருக்கப் பெற்ற வனுகையாலே மேன்மேலு மழைக்கின்றேன். ஆர்த்திமிகுந்த ப்ரஜை மாதாபிதாக்களைக் கூப்பிடுமாபோலே திருமாலே யென்று கூப்பிடுகின்றேன். திருநாட்டிலே வந்து காணக் கடவதான வடிவை இங்கே காட்டுவதாகக் கொண்டு திருநாவாயிலே வந்து நித்யவாஸம் பண்ணுமவனே! ... ... .... (10)

வண்ணம்மணிமாட நன்னாவாயுள்ளானை*
திண்ணம்மதிள் தென்குருகூர்ச்சடகோபன்*
பண்ணார்தமிழ் ஆயிரத்திப்பத்தும்வல்லார்*
மண்ணாண்டு மணங்கமழ்வர்மல்லிகையே. (11)

| | | | |
|---|---|---|---|
| வண்ணம் மணி மாடம் | அழகிய மணி மாடங்களையுடைத்தான | பண் ஆர் தமிழ் ஆயிரத்து | பண்ணிறைந்த தமிழான ஆயிரத்தில் |
| நல் நாவாய் உள்ளானை | விலக்ஷணமான திருநாவாயிலெழுந்தருளியிருக்கும் பெருமானைக் குறித்து, | இப்பத்தும் வல்லார் | இப்பத்தையும் ஓதவல்லவர்கள் |
| | | மண் ஆண்டு | இவ்விபூதியை நெடுங்காலம் ஆண்டு |
| திண் அம் மதின் தென் குருகூர் சடகோபன் | திடமாயழகியமதிள்களையுடைத்தான திருநகரிக்குத் தலைவரான ஆழ்வாருடையதாய் | மல்லிகை மணம் கமழ்வர் | "ஸர்வகந்த:" என்னப்படுகிற எம்பெருமானோடே ஸாம்யாபத்தி பெறுவர்கள். |

***—இத்திருவாய்மொழி வல்லார் ஐஹிக ஆமுஷ்மிக ஸகலபோகங்களையும் புஜிக்கப் பெறுவர் என்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். மண்ணாண்டு என்பதனால் ஐஹிகபோகம்

புஜிக்கப்பெறுகை சொல்லிற்று. மல்லிகை மணங்கமழ்வர் என்பதனுல் ஆமுஷ்மிகபோகம் புஜிக்கப்பெறுகை எங்ஙனே சொல்லிற்றாகிறதென்னில்; மல்லிகை மணமென்று ஒரு பரிமளத்தை மாத்திரம் சொன்னபடியன்று; இது உபலக்ஷணமாய் ஸகல பரிமளங்களையும் சொன்னபடியாகி, வேதாந்தங்களிலே *ஸர்வ கந்தஃ* என்று ஸகல பரிமளங்களும் வடிவெடுத்தவனாகச் சொல்லப்படுகிற எம்பெருமானைப் பெறுவர்—எம்பெருமானோடு ஸாம்யாபந்நராவர் என்றபடியாம். *தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையே யொக்க அருள் செய்வர்* என்ற திருமங்கையாழ்வார் பாசுரம் இங்கே நினைக்கத் தக்கது. "மல்லிகை மணங்கமழ்வர்" என்பதற்குப் பன்னீராயிரவுரைகாரர் "மல்லிகைபோலே பரிசுத்தமான யசஸ் ஸௌரப்யவிகாஸத்தை யுடையவராவர்" என்றுரைத்தார். அவ்வுரை ஆறாயிரப்படி முதலிய வியாக்கியானங்களுக்குப் பொருந்தியதன்று. ... ... ... (11)

---

**திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையுரையில்**

ஒன்பதாம்பத்து எட்டாந் திருவாய்மொழி

முற்றிற்று.

---

நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஒன்பதாந்திருவாய்மொழி—மல்லிகை கமழ்.

---

உரையவதாரிகை:—நம்முடைய முதலிகள் இத்திருவாய் மொழியை 'மாலைப்பூசல்' என்று வழங்குவர். (இப்பதிகத்தின் முடிவு பாசுரங் காண்க.) மேல் பத்தாம் பத்தில் மூன்றும் பதிகமான *வேய்மருதோளிணை மெலியுமாலோ* என்கிற திருவாய்மொழிக்குக் 'காலைப்பூசல்' என்று ஸங்கேதம். கண்ணபிரான் விடியற்காலத்திலே பசு மேய்க்கப் போனானாக அதிசங்கை பண்ணி அவன் முகத்தைப்பார்த்து, நீ பசு மேய்க்கப்போனால் நலியக்கடவ பதார்த்தங்கள் நலியாநின்றனவென்று முறையிடுவது, காலைப்பூசலான அத்திருவாய் மொழியிலே. மாலைப்பூசலான இப்பதிகத்திலோவென்னில், *காடுகளூடுபோய்க் கன்றுகள் மேய்த்து மறியோடிக் கார்க்கோடல் பூச்சூடி வருகின்ற தாமோதரன் மாலைப் பொழுதிலே திருவாய்ப் பாடியேறத் திரும்பிவரும்போது சில நாட்களில் பசுக்களை யெல்லாம் பின்னே வரவிட்டுத் தான் முன்னே குழலூதிக்கொண்டு வருவன்; சில நாட்களில் பசுக்களை யெல்லாம் முன்னே போகவிட்டுத் தான் பின்னே வருவதுமுண்டு; அப்படி வருகின்ற நாளில் அப்பெருமானைப் பசுக்களின் முற்கொழுந்தில் காணாமல் திருவாய்ப்பாடியிற் பெண்கள் பட்ட பாட்டை ஆழ்வார் தாம் ஏறிட்டுக்கொண்டு பேசுகிறதாயிராநின்றது இத்திருவாய்மொழி.

நம்பிள்ளையீடு;—"படை வீட்டிலிருந்தால் மாமியார் மாமனாருக்குக் கூசிப் பெருமானுடன் நினைத்தபடி பரிமாறப் போகாதென்று காட்டிலே ஏகாந்தமாயநுபவிப்பதாக மனோரதித்துப் போந்த பிராட்டியை *காந்தாரமத்யே விஜநே விஸ்ருஷ்டா பாலேவ கந்யா விலலாப ஸீதா* என்கிறபடியே கூப்பிடப் பண்ணினாப்போலே, திருநாவாயிலே புக்கு அநுபவிப்பதாக மனோரதித்தவிவர்க்கு பாதகவர்க்கத்துக்கு அஞ்சிக் கூப்பிடும்படியாய் விளைந்தது." ... *

**மல்லிகைகமழ்தென்றலீருமாலோ வண்குறிஞ்சியிசைதவருமாலோ***
**செல்கதிர்மாலையும்மயக்குமாலோ செக்கர்நன்மேகங்கள்சிதைக்குமாலோ***
**அல்லியந்தாமரைக்கண்ணனெம்மான் ஆயர்களேறரியேறெம்மாயோன்***
**புல்லியமுலைகளும்தோளும்கொண்டு புகலிடமறிகிலம்தமியமாலோ.** (1)

மல்லிகை கமழ் தென்றல் { மல்லிகையின் பரிமளத்தோடு கூடின தென்றலானது
ஈரும் ஆல் ஓ { (வாளாலறுக்குமாபோலே) ஈர்கின்றது ஐயோ
வண் குறிஞ்சி இசை { செவிக்கினிய பண்ணிசையானது
தவரும் ஆல் ஓ துளைக்கின்றது ஐயோ;
செல் கதிர் மாலையும் { ...மளவிலே யுள்ள ஸூர்யனையுடைய மாலைப் பொழுதும்
மயக்கும் ஆல் ஓ { மோஹிக்கச் செய்யா நின்றது ஐயோ;
செக்கர் நல் மேகங்கள் { செந்நிறங்கொண்டு அழகிய மேகங்களானவை
...ல் ஓ { சரீரத்தைச் செதுக்கா நின்றது ஐயோ!;

அல்லி அம் தாமரை கண் { விகஸித்தழகிய தாமரை போன்ற திருக்கண்களையுடையனாய்
ஈர் எம்மான் ஸர்வஸ்வாமியாய்
ஆயர்கள் ஏறு { இடையர்களுள் செருக்கையுடையனாய்
அரி ஏறு { ஸிம்ஹச்ரேஷ்டம் போன்றவனாய்
எம் மாயோன் { எம்மோடு நீர்மைக் குணத்தைக் காட்டிக் கலந்து பரிமாறினவனான கண்ணபிரான்
புல்லிய முன்பு
முலைகளும் தோளும் கொண்டு } முலைகளையும் தோள்களையுங் கொண்டு
தமியம் புகல் இடம் அறிகிலம் ஆல் ஓ { பிரிந்து வருந்திக்கிடக்கிற நாம் ஒதுங்கி உய்யுமிடம் அறிகின்றிலோம் ஐயோ!

***—மாலைப் பொழுதில் தென்றல் முதலான பதார்த்தங்கள் ...ய தனக்கு நலிவை விளைக்கும்படியைச் சொல்லிக் கதறுகிறாள் ஒரு ஆய்ச்சி. [அவ... ...ய நிலைமையை ...யெய்திப் பேசுகிறார் ஆழ்வார்.] மல்லிகை கமழ் தேன்றல் ஈருமாலோ— ...கொரு துணை யின்றிக்கே யிருந்தாலும் தானே ஏகாகியாய் நின்று நலியக்கடவதான தென்றல் மல்லிகை மலரின் பரிமளத்தையும் துணை கொண்டால் நலியும் விதம் சொல்லலாகுமோ? கூடியிருக்குங் காலத்தில் பரமபோக்யமாயிருந்து பரமானந்தத்தை விளைக்கும் பதார்த்தங்களெல்லாம் பிரிவு காலத்தில் துயரத்தை விளைக்கு மென்னுமிடம் ப்ரஸித்தம். ஸ்ரீராமாயணத்தில் கிஷ்கிந்தா காண்டம் முதல் ஸர்க்கத்தில் பல ச்லோகங்கள். இத்திருவாய்மொழியிற் பாசுரங்களோ டொக்கும். சில ச்லோகங்கள் காணீர்;—*யாநி ஸ்ம ரமணீயாநி தயா ஸஹ பவந்தி மே. தாந்யே வாரமணீயாநி ஜீவதோ மே தயா விநா.* ஸதா ஸுகமஹம் மந்யே யம் புரா ஸஹ ஸீதயா, மாருதஸ் ஸ விநா ஸீதாம் சோகஸஞ்ஜநநோ மம.*

வண்குறிஞ்சியிசை தவரும்—குறிஞ்சி, மருள், காமரம், கந்தாரம் என்று பண்களுக்குப பெயர்; தோடி, ஸாவேரி, பைரவி, சங்கராபரணம் என்று ஸங்கீதப் புலவர்கள் ராகங் களுக்குப் பெயர் வழங்குமாபோலே வண்டு குயில் முதலானவற்றின் பண்கள் குறிஞ்சி மருள் காமரம் கந்தாரம் முதலான சொற்களால் வழங்கப்படுவதைத் திவ்யப் பிரபந்தங்களிற் காண்கிறோம். மல்லிகை கமழ் தென்றல் ஈர்ந்து போகட்ட புண்ணின் மேலே வண்குறிஞ்சி யிசை துளைத்துப் போகடா நின்ற தென்கை. தென்றல் மேலெழ நலியா நின்றது; இசை செவிவழியே உள்ளே புகுந்து நலியா நின்றது.

சேல்கதிர் மாலையும் மயக்கும் = பகற்போதாயிருந்தால் கண்ட வஸ்துக்களையும் பார்த்துக்கொண்டும் கண்டாரோடும் பேசிக் கொண்டும் ஒருவாறு போதைப் போக்க லாம்; அதற்கு அவகாசமில்லாதபடி ஸூரியன் மறையும்படியான மாலைப் பொழுது வந்து மயக்கா நின்றது. சேக்கர் நன் மேகங்கள் சிதைக்குமாலோ = ஸந்த்யாராகத்தை

யும் சாமமான நிறத்தையுமுடைய மேகங்கள் அவனுடைய அவயவ சோபைக்கும் வடிவுக்கும் ஸ்மாரகங்களாய்க் கொண்டு கொலைபுரியா நின்றன. இப்படிப்பட்ட நிலைமையில் பண்டு அவனோடு ஸம்ச்லேஷித்த அவயவங்களைக் கொண்டு எங்ஙனே யாறியிருக்கும்படி? (1)

புகலிடமறிகிலம்தமியமாலோ புலம்புறுமணிதென்றலாம்பலாலோ*
பகலடுமாலைவண்சாந்தமாலோ பஞ்சமம்முல்லைதண்வாடையாலோ*
அகலிடம்படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்து எங்குமளிக்கின்றவாயன்மாயோன்*
இகலிடத்தசுரர்கள்கூற்றம்வாரான் இனியிருந்தென்னுயிர்காக்குமாறென். (2)

| | |
|---|---|
| தமியம் புகலிடம் அறிகிலம் ஆல் ஓ | தனிப்பட்ட நாம் ஒதுங்கி யுய்யுமிடம் அறிகின்றிலோம் ஐயோ, |
| புலம்புறு மணி | (சேக்களின் கழுத்தில்) ஒலிக்கின்ற மணியும் |
| தென்றல் | தென்றற் காற்றும் |
| ஆம்பல் | இலைக்குழலும் |
| ஆல் ஓ | ஈர்கின்றவிதம் சொல்லத் தெரியவில்லையே; |
| பகல் அடு மாலை | பகற்போதை முடித்து வந்து தோற்றுகின்ற மாலைப் போதும் |
| வண் சாந்தம் | அழகிய சந்தனமும் |
| பஞ்சமம் | பஞ்சமராகமும் |
| முல்லை | முல்லை மாலையும் |
| வாடை | குளிர்ந்த வாடைக்காற்றும் |
| ஆல ஓ | நலிகின்றவிதம் சொல்லத் தெரியவில்லையே; |
| அகல் | பரந்த பூமண்டலத்தை |

| | |
|---|---|
| படைத்து | உண்டாக்கியும் |
| இடந்து உண்டு உமிழ்ந்து அளந்து | (ஸமய விசேஷங்களில்) இடத்தல் உண்ணுதல் உமிழ்தல் அளத்தல் ஆகிய காரியங்களைச் செய்தும் |
| எங்கும் அளிக்கின்ற | எல்லாப் படிகளாலும் ரக்ஷணத்தைச் செய்து போருகின்றவனாய் |
| இகல் இடத்து அசுரர்கள் கூற்றம் | யுத்த பூமியில் அசுரர்களுக்கு மிருத்யுவாய் |
| மாயோன ஆயன் | ஆச்சர்யபூதனான கோபால கிருஷ்ணன் |
| வாரான் | (இத்துன்பங்களைத் தொலைக்க) வருகின்றிலன்; |
| இனி | இப்படியான பின்பு |
| இருந்து | ஸத்தையோடேயிருந்து |
| என் உயிர் காக்கும் ஆறு என் | என்னுயிரை ரக்ஷித்துக்கொளும் விதம் என்னோ? |

***—பல படிகளாலும் ரக்ஷிக்குமெம்பெருமான் வருகின்றிலன்; பாதக பதார்த்தகள் தனித்தனியே யன்றியே திரள்திரளாகவும் தோன்றி நலிகின்றன; தப்பிப் பிழைக்கும் வழி தெரிய வில்லையே யென்கிறாள். “புகலிடமறிகிலம் தமியமாலோ” என்றது—கீழ்ப்பாட்டிற் சொன்ன கஷ்டங்களுக்காகவுமாம்; இப்பாட்டிற் சொல்லப்போகிற கஷ்டங்களுக்காகவுமாம். புலம்புறுமணி=நாகுகளைத் தொடருகின்ற சேக்களின் கழுத்தில் கட்டின மணியினோசை விரஹிகளுக்கு உத்தீபகமென்க.

ஆம்பல் என்று ஊதுகுழலுக்குப் பெயர்; அதன் ஓசையைச் சொன்னபடி யிங்கு. பகலடுமாலை—ஆச்வாஸகரமான பகற்போதை முடித்துக் கொண்டு வந்து தோற்றின மாலைப் போது. பஞ்சமம்—*பிக: கூஜதி பஞ்சமம்* என்னும்படியான பண். முல்லை யென்று யாழையுஞ் சொல்லும், முல்லைப் பூவையுஞ் சொல்லும்; விரஹிகளுக்கு இரண்டும் உத்தீபகமே. இவை இன்னது செய்கின்றன வென்று சொல்லாமல் விட்டது, ‘புலி புலி’ என்னுமாபோலே; இவற்றின் பேரைச் சொன்னதுதானே இவை செய்யுங் கொடுமையைச் சொன்னபடியாம். இவையெல்லாம் முன்பு அனுகூலங்களாயிருந்தவையே; இப்போது பிரதிகூலமாவதற்குக் காரணஞ் சொல்லுவன பின்னடிகள். படைத்தல் இடத்தல் உண்டுமிழ்தல் அளத்தல் முதலிய காரியங்களைச் செய்து பலபடியாலும் ரக்ஷிக்கையே தொழிலான ஸர்வேச்வரன் வருகின்றிலன்; இனி ப்ராணதாரணம்பண்ணும் வகையறியேன் எனகிறாளாயிற்று. ... (2)

இனியிருந்தென்னுயிர்காக்குமாறென் இணைமுலைநமுகநுண்ணிடைநுடங்க*
துனியிருங்கலவிசெய்தாகந்தோய்ந்து துறந்தெம்மையிட்டகல்கண்ணன்கள்வன்*
தனியிளஞ்சிங்கமெம்மாயன்வாரான் தாமரைக்கண்ணும்செவ்வாயும்*நீலப்
பனியிருங்குழல்களும்நான்குதோளும் பாவியேன்மனத்தேநின்றீருமாலோ. (3)

| | |
|---|---|
| இனி இருந்து என் உயிர் காக்கும் ஆறு என் | இனி என்னுயிரைக் காத்துக் கொள்ளும் வகை யில்லை ; |
| இணை முலை நமுக | முலைகள் குழையும்படியாகவும் |
| நுண் இடை நுடங்க | நுட்பமான இடை தளரும்படியாகவும் |
| துனி இரு கலவி செய்து | துக்ககரமான ஸம்ச்லேஷத்தைப் பண்ணி |
| ஆகம் தோய்ந்து | என் வடிவிலே கலந்து புஜித்து |
| எம்மை துறந்து இட்டு அகல் கள்வன் | எம்மைக் கைவிட்டுப் பொகட்டுப் பிரிந்துபோன கள்வனாய் |
| தனி இளசிங்கம் | ஒப்பற்ற சிங்கக்குட்டியாய் |

| | |
|---|---|
| எம்மாயன் கண்ணன் | விலக்ஷணமான ஆச்சர்ய சேஷ்டிதங்களை யுடையனான கண்ணபிரான் |
| வாரான் | வந்து சேர்கின்றிலன் ; |
| தாமரை கண்ணும் | (அப்பெருமானது) தாமரை போன்ற திருக்கண்களும் |
| செம் வாயும் | சிவந்த திருப்பவளமும் |
| நீலம் பனி இரு குழல்களும் | கறுத்துக் குளிர்ந்து பரந்த திருக்குழல்களும் |
| நான்கு தோளும் | நான்கு திருத்தோள்களும் |
| பாவியேன் மனத்தே நின்று ஈரும் ஆல் ஓ | பாவியேனுடைய மனத்திலே ஒருபடிப்பட நின்று நலியாநின்றன ஐயோ !. |

***—தென்றல் வாடை முதலான வெளிப்பட்ட பொருள்கள் பாதகமாகை மாத்திர
மன்றியே அவனுடைய திவ்யாவயங்களும் உள்ளே தோன்றி நலியாநின்றனவே யென்கிறாள்.
இனி யிருந்து என்னுயிர் காக்குமாறென்? = அவனுடைய வடிவழகுதானே உள்ளே நின்று
நலியாநின்றால் இனி உயிரைக் காக்க விரகுண்டோ? இப்போது வாராமல் உபேக்ஷிக்குமவன்
முன்பு அப்படியெல்லாம் ஸம்ச்லேஷிக்க வேணுமோ? எப்படி ஸம்ச்லேஷித்தானென்ன,
அது சொல்லுகிறது இணைமுலைநமுக வென்று தொடங்கி. முலைகள் இரண்டும் குழையவும்
நுண்ணிடை தளரவும் பஹுமுகமான ஸங்கத்தைப் பண்ணி என் வடிவிலே அவகாஹித்தநுப
வித்து, ஸம்ச்லேஷம் விச்லேஷாந்தமாயல்லதிராமையாலே உடனே பிரிந்து சென்ற கள்வன்
மீண்டுவருகின்றிலன். அன்னவனை நான் மறந்து பிழைக்கலாமே; அதற்கு மிடமில்லாதபடி
அவனது தாமரைத்தடங்கண்களும் செங்கனிவாயும் மைவண்ண நறுங்குஞ்சி குழல்பின்தாழ
மழகும் தோளழகும் என்னெஞ்சை விட்டகலாது நலிகின்றனவே! என்றாளாயிற்று. ... (3)

பாவியேன் மனத்தேநின்றீருமாலோ வாடைதண்வாடை வெவ்வாடையாலோ*
மேவுதண்மதியம் வெம்மதியமாலோ மென்மலர்ப்பள்ளிவெம்பள்ளியாலோ*
தூவியம் புள்ளுடைத்தெய்வவண்டுதுதைந்த எம்பெண்மையம்பூவிதாலோ*
ஆவியின் பரமல்லவகைகளாலோ யாமுடைநெஞ்சமும்துணையன்றாலோ. (4)

(கீழ்ச்சொன்ன வடிவழகானது)

| | |
|---|---|
| பாவியேன் மனத்தே நின்று ஈரும் ஆல் ஓ | பாவியேனுடைய நெஞ்சிலேயே நின்று நலியா நின்றதந்தோ !; |
| தண் வாடை வாடை | தண்வாடையென்றே பேர் பெற்றிருந்த வாடைக்காற்றனது |
| வெம் வாடை ஆல் ஓ | நெருப்பை யுமிழும் வாடையாயிராநின்ற தந்தோ !: |

| | |
|---|---|
| மேவு தண் மதியம் | விரும்பிப் பார்க்கப்படுகிற குளிர்ந்த சந்திரனும் |
| வெம் மதியம் ஆல் ஓ | உஷ்ணகிரணனான சந்திரனானந்தோ !; |
| மெல் மலர் பள்ளி | ம்ருதுவான புஷ்ப சயனமும் |
| வெம் பள்ளி ஆல் ஓ | நெருப்புப்படுக்கை யாயிற்றந்தோ !; |

| | | | |
|---|---|---|---|
| ஆவி அம் புள் உடை | சிறகுடைய பெரிய திருவடியை வாஹனமாகக் கொண்ட | அம் பூ ஆல் ஓ | அழகிய பூப்போலே பரிதாபத்தை ஸஹிக்க மாட்டாத தாயிராநின்றதந்தோ !; |
| தெய்வம் வண்டு | பரம புருஷனுகிற வண்டு | | |
| துதைந்த | அநுபவித்து ஸாரம் கவரப் பெற்ற | வகைகள் | இவ்வகைகளெல்லாம் |
| எம் பெண்மை இது | எனது பெண்மையானவிது | ஆவியின் பரம் அல்ல அந்தோ | இவ்வாத்மாவுக்குப் பொறுக்கலாவனவல்ல ; |

***—"பாவியேன் மனத்தே நின்று ஈருமாலோ!" என்று கீழ்ச் சொன்னது தன்னையே அநுபாஷிக்கிறபடி ; ஈரும் என்பதற்கு எழுவாய் எது வென்னில், கீழ்ச்சொன்ன வடிவழகேயாம். மேலுள்ள வாடை என்பதை எழுவாயாக்கி யுரைப்பர் பன்னீராயிர வுரைகாரர்.

வாடை தண்வாடை வெவ்வாடையாலோ = தண்வாடை வெவ்வாடையாலோ' என்றால் போதுமே ; 'வாடை தண்வாடை' என்னவேணுமோ வென்னில் ; மகள் 'வாடை!; என்று வெறுத்துச் சொன்னாள் ; தாய்மார் 'வெறுப்பானேன்? இது தண்வாடையன்றோ' என்றார்கள் ; ஐயோ ! வெவ்வாடையைத் தண்வாடை யென்பதே! என்கிறாள் மகள்.

மேவுதண்மதியம் வெம்மதியமாலோ = தாபதப்தர்கள் சந்திரனைத் தேடா நிற்பர்கள் ; அவன்தானே எனக்கு நெருப்பைச் சொரியா நின்றான். *சந்த்ரச் சண்டகராயதே* என்பர் வடநூலாரும்.

மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளியாலோ—தாபம் பொறுக்கமாட்டாமையாலே பூம் படுக்கையிலே படுத்தால் அது நெருப்புப் பள்ளியாய்ச் சுடாநின்றது. இருவராய்ப் படுக்க வேண்டிய படுக்கை ஒருவருக்கு நெருப்பாகச் சொல்லவேணுமோ?

நாண் மடமச்சம் முதலிய குணங்களோடு கூடியிருக்கவேண்டிய பெண்கள் இப்படியும் பேசத்தகுமோ? என்ன ; பெண்மை குடிவாங்கிப்போயிற்றென்கிறாள் மூன்றாமடியில். வண்டானது பூவினுள்ளே புகுந்து படிந்து அங்குள்ள ஸாரத்தைக் கொள்ளை கொள்ளுமாபோலே, கருடவாஹனனை எம்பெருமானுகிற வண்டு ஸாரத்தைக் கவர்ந்து போயிற்றே யென்கிறாள். எம்பெருமானிடத்தே யீடுபட்டவர்களும் பெண்மையைக் காக்க முடியுமோ வென்று கருத்து. *பறவை யேறு பரம்புருடன் வந்து கைக் கொண்டு என் பெண்மையை யழித்துப் போனு னென்கை. ஆவியின் பரமல்ல வகைகளாலோ = அவனுடைய ஸம்ச்லேஷ விச்லேஷ ப்ரகாரங்கள், பாதக பதார்த்தங்களின் பாரிப்பு ஆகிய எல்லாம் இங்கு வகைகள் என்ற சொல்லாற் சொல்லப்படுகின்றன. இவை என் ஆத்மா பொறுக்கக்கூடிய அளவிலே யில்லை யென்கை. யாமுடை நெஞ்சமும் துணையன்றுலோ—உசாத்துணையான நெஞ்சையு மிழக்கப்பெற்றே னென்கை. ... ... ... (4)

யாமுடை நெஞ்சமும்துணையன்றுலோ ஆபுகுமாலையுமாகின்றுலோ*
யாமுடைஆயன்றன்மனம் கல்லாலோ அவனுடைத்தீங்குழலீருமாலோ*
யாமுடைத்துணையென்னும் தோழிமாருமெம்மில் முன்னவனுக்கு மாய்வராலோ*
யாமுடையாருயிர்காக்குமாறென் அவனுடையருள் பெறும்போதரிதே. (5)

| | | | |
|---|---|---|---|
| யாமுடைநெஞ்சமும் துணை அன்று ஆல் ஓ | எம்முடைய நெஞ்சம் உசாத் துணையாகின்றதில்லையந்தோ ! | ஆ புகும் மாலையும் ஆகின்று ஆல் ஓ | பசுக்கள் வந்து புகும் மாலைப் பொழுது மாகின்றதந்தோ !; |

| | | | |
|---|---|---|---|
| யாமுடை ஆயன் தன் மனம் கல் ஆல் ஒ | எமது உடைய நெஞ்சு கல்லாய் விட்டதந்தோ !; | எம்மில் முன் மாயவர் ஆல ஒ | எனக்கு அவன் பொருட்டு நோவுபடா |
| அவனுடை | அப்பெருமானுடைய | | |
| தீம் குழல் ஈரும் ஆல் ஒ | இனிதான வேணுகானமும் நலியா நின்றதந்தோ !; | அவனுடை அருள் பெறும் போது அரிது | அவனது அருளைப் பெறுவது அரிதாயிரா நின்றது ; |
| (இப்படி ஈடுபடுகிறவளவில்) | | | |
| யாமுடை துணை என்னும் தோழிமாரும் | எமக்குத் துணைவரென்று பேர் பெற்றிருக்கின்ற தோழியரும் | யாமுடை ஆர் உயிர் காக்கும் ஆறு என் | எனது அருமையான வுயிரைக் காக்கும் விதம் என்னே !. |

***—அடியார்க்கெளியனென்று பேர் பெற்றவனுடைய இரக்கம் பெறுகை அரிதான பின்பு நம்முயிரைக் காக்கும் விரகுண்டோ வென்கிறாள். ஆபுகுமாலையுமாகின்றாலோ= பசுக்கள் வந்து புகும் மாலைப் பொழுது வந்துவிட்டதே! இம்மாலைப் பொழுது சிறிது தாம வந்தாலென்ன ? ஐயோ ! இப்போதே அணித்தாயிற்றே ! என்று நோகிறாள். மாலைப் பொழுது வந்தால் கண்ணபிரானும் வந்திடுவனென்று ஆறியிருக்கலாகாதோவென்ன; யாமுடை ஆயன்தன்மனம் கல்லாலோ என்கிறாள். அவனுடைய நெஞ்சு கல்லாயிற்றே! அவனோ வருவானென்கை. " சேவிக்க வாழ்விக்கு மெங்கோனரங்கன் திருக்கோயில் சூழ். காவிற் கலந்தாசை தந்தேகினார் நேஞ்சு கல்நேஞ்சமோ ?" (திருவரங்கக் கலம்பகம்) என்ற பிள்ளைப் பெருமாளையங்கார் பாசுரம் இங்கு நினைக்கத்தகும். அவனுடைய நெஞ்சு கல்லென்று தோன்றினால் கைவாங்கி நிற்க வேண்டாவோ வென்ன, அவனுடைய இனிய குழலோசை கைவாங்க வொட்டுகிறதில்லை யென்கிறாள் அவனுடைத் தீங்குழலீருமாலோ என்று. இங்கே ஈடு; "நான் பகலெல்லாம் பிரிந்தேன், வரவு தாழ்த்தேன், ஆற்றேன், பரதந்த்ரனாய்க் கெட்டேன் என்கிற புடைகளிலே சில பாசுரங்களை வைத்திறே குழலூதுவது; அது 'கல்லென்று கைவாங்காதே கிடாய், நீர்கிடாய்' என்னா நின்றது. இப்பாசுரங்களாலே அவனுடைய இனிய குழலோசையானது ஈராநின்றது."

நெஞ்சும் துணையன்றிக்கே அவனும் உதவாதபோது துணையான தோழிமாராகிலும் உதவவேண்டுமே; அந்தோ! அவர்களும் என் வ்யஸனத்தைக் கண்டு எனக்கு முன்னே நோவுபடாநின்றார்களென்கிறது மூன்றாமடி. இத்தனிமையில் ஆத்மா தரிக்கும் விரகு தெரி கில்லையே ; அவனுடைய க்ருபையைப் பெறுகை அரிதாயிருக்கின்றதே !. .... ... (5)

அவனுடையருள் பெறும்போதரிதால் அவ்வருளல்லனவருளுமல்ல*
அவனருள்பெறுமளவாவிநில்லாது அடுபகல்மாலையும் நேஞ்சுங்காணேன்*
சிவனொடுபிரமன்வண்டிருமடந்தை சேர்திருவாகமெம்மாவியீரும்*
எவமினிப்புகுமிடமேவம் செய்கேனோஆருக்கேன்சோல்லுகேனன்னைமீர்காள். (6)

| | | | |
|---|---|---|---|
| அவனுடை அருள் பெறும் போது அரிது | அவனோடு ஸம்ச்லேஷிப்பதாகிற அருளைப பெறுவது அரிதாயிருக்கின்றது : | அடு பகல் மாலையும் | பகலை முடிக்கும் மாலைப்பொழுதும் வந்து தோன்றிற்று |
| அவ் அருள் அல்லன அருளும் அல்ல | அவனுடைய அருள அருளே யல்லது மற்றவை அருளல்ல | நெஞ்சும் காணேன் | (தனிமைக்கு உதவுமதான) நெஞ்சையும் காண்கிலேன் ; |
| அவன் அருள பெறும் அளவு | அவனது அருளைப் பெறுமவரையில் | சிவனொடு பிரமன் வண் திருமடந்தை சேர் திருஆகம் | சிவனும் பிரமனும் பிராட்டியும ஒருங்கே சேர்ந்திருக்கப் பெற்ற திருமேனியானது |
| ஆவி நில்லாது | என் பிராணன் தரித்திருக்க மாட்டாது ; | | |

(அப்படிப்பட்ட சில குணத்தைக்காட்டி) எவம் செ கேனோ } யாது செய்வேன்
எம் ஆவி ஈரும் என்னுத்மாகவ நலிகின்றது; மீர்தாள் தாய்மார்களே
இனி புகும் இடம் எவம் { இனி எனக்கொதுங்குமிடம் ஏதுவோ! ஆருக்கு என் சொல்லுகேன் { ஆருக்கு என்ன பாசுரமிட்டுச் சொல்லுவேன்?

* * *—பிராட்டியோடும், அஹங்காரிகளான பிரமன் சிவன் முதலானுரோடும் வாசியற உடம்பு கொடுக்குமவனுடைய சில குணம் என்னுயிரை ஈராநின்றதே யென்று குணவிசேஷத்தி லீடுபட்டுச் சொல்லுகிருள். அவனுடையருள் பெறும்போது அரிதால்—'என்னருளைக்கொள் வாருண்டோ?' என்று தேடியிருந்து 'என்னருளைக் கொள்வாரில்லையே' என்று வருந்திக்கிடந்த அவனுடைய அருள் எனக்கு அரிதாயிற்றே யென்கிருள். அவ்வருள் அரிதாகில், அதுவே வேணுமென்று என்ன நிர்ப்பந்தம்? வேறேராருளை நோக்கலாகாதோவென்ன, அவ்வருளல்லன வருளுமல்ல=*முதலாய கல்லானருளல்லால் நாமநீர் வையகத்துப் பல்லாரருளும் பழுது* என்று பண்டே பொய்கையாழ்வார் ஸித்தாந்தம் செய்து வைத்தாரே. அவ்வருளே வேணு மென்று நிர்ப்பந்தமாகில் அது பெறுமளவும் பொறுத்திருக்க வேண்டியதன்றேவென்ன, அவனருள் பெறுமளவு ஆவி நில்லாது என்கிருள். அவன் ப்ரஸாதம் கிட்டுமளவும் பிராணன் தரிக்கிறதில்லை. க்ரமப்ராப்தியை ஸஹிப்பதொரு பிராணனைப் பெற்றாலன்றோ ஆறியிருக்க லாவது. "அடுபகல் மாலையும் நெஞ்சுங்காணேன்" என்றவிதற்கு இரண்டுபடியாக யோஜனை; 'அடுபகல் மாலையும்' என்று தனிவாக்யமாக்கி, மாலைப்பொழுதோ வந்து தோன்றுநின்றது, எல்லாக் காலத்திலும் தரிக்கைக்கு உறுப்பான நெஞ்சையோ காண்கின்றிலேன்—என்று ஒரு யோஜனை. மாலையும் காண்கிறிலேன், நெஞ்சையும் காண்கிறிலேன் என்பதாக மற்றொரு யோஜனை. மேல் வரவிருக்கிற இராப்பொழுதைக்காட்டிலும் மாலைப்பொழுதே ஒருவாறு நன்று—என்பது கருத்து. சிவனேடு பிரமன் வண்திருமடந்தை சேர் திருவாகம்=*பச்யைகாதச மே ருத்ராந் தக்ஷிணம் பார்ச்வமாச்ரிதாந்* என்று மோக்ஷதர்மத்திற் சொல்லப்பட்டது. அன்றியும் *தபஸா தோஷிதஸ் தேந விஷ்ணுநா ப்ரபவிஷ்ணுநா, ஸ்வபார்ச்வே தக்ஷிணே சம்போர் நிவாஸ: பரிகல்பித:* என்றொரு வசனமும் ஆசாரியர்கள் எடுத்துக் காட்டுவதுண்டு. (சிவன் பண்ணின தவத்தினுல் திருவுள்ளமுவந்த திருமால் அவனுக்குத தனது வலவருகிலே வாஸஸ் தானம் அமைத்துக் கொடுத்தருளினன் என்பது இதன் பொருள்.)

*ஏறாளுமிறையோனும் திசைமுகனும் திருமகளும் கூறாளுந்தனியுடம்பன்* என்னும் *அக்கும் புலியினதளுமுடையாரவரொருவர் பக்கம் நிற்க நின்ற பண்பர்* என்றும் ஆழ்வார்கள் அடிக்கடியருளிச் செய்கிறார்களே; சிவன் முதலானுர் எப்போதும் எம்பெருமானுடைய திரு மேனியைபபற்றியிருக்கிறார்களோ? என்றொரு சங்கை பிறக்கக்கூடும்; இந்த சங்கையும் இதற்குப் பரிஹாரமும் பூர்வர்களின் வ்யாக்கியானங்களிலேயே உள்ளன; எங்ஙனே யென்னில்;—"ஸர்வகாலமும் இவர்கள் எம்பெருமானுடைய திருமேனியிலே இருப்பர்களோ வென்னில்; ஆபத்துக்களிலே திருமேனியிலே இடங்கொடுத்தருளும்; அது மஹாகுணமாகை யாலே ஆழ்வார்கள் எப்போது மெடுக்க அருளிச் செய்துகொண்டு போருவர்கள். ஸாமந் தர்க்குப் புறம்பே நாடுகள் கனக்கவுண்டாகிலும் மாளிகைக்குள்ளே செம்பாலே நாழியரிசி யைத் தங்களுக்கு வரிசையாக நினைத்திருப்பர்களிறே; அப்படியே இவர்களும் திருமேனியில் பண்ணிவைக்கும ப்ராப்திவிடார்களிறே. ஒரோகலஹங்களிலே அடையவளைந்தானுச்குள்ளே குடிவாங்கியிருந்து கலஹம் தெளிந்தவாறே புறம்பே புறப்பட்டாலும் இவ்விடம் இன்னார் பற்று, இவ்விடம் இன்னார் பற்று என்று பின்னும் ப்ராப்தி சொல்லிவைக்குமாபோலே"—என்று.

காபாலி கந்தர்ப்பேளிதானது கிடீர் எனக்கரிதாய்த்து." என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்க. ... (6)

ஆருக்கேன் சொல்லுகேனன்னைமீர்காளாருயிரளவன்றிக் கூர்தண்வாடை*
காரோக்குமேனி நங்கண்ணன் கள்வம்கவர்ந்தவத்தனிநெஞ்சமவன்கணஃதே*
சீருற்றவகில்புகையாழ்நரம்பு பஞ்சமம்தண்பசும்சாந்தணைந்து*
போருற்றவாடைதண் மல்லிகைப்பூப்புதுமணமுகந்து கோண்டேறியுமாலோ. (7)

| | | | |
|---|---|---|---|
| கார் ஒக்கும் மேனி | காளமேகம் போன்ற திருவுருவத்தை யுடையனான | தண் பஞ் சாந்து | குளிர்ந்த சந்தனத்தையும் கூட்டிக்கொண்டு |
| நம் கண்ணன் | நமது கண்ணபிரான் | | |
| கள்வம் | தனது கள்ளச் செயல்களினால் | போர் உற்ற வாடை | போர் புரியத் தலைப்பட்ட வாடையானது |
| கவர்ந்த | அபஹரித்துக் கொண்டுபோன | | |
| அத் தனி நெஞ்சம் | நம்மை விட்டுத் தனியேயான நெஞ்சானது | தண் மல்லிகை | குளிர்ந்த மல்லிகைப்பூவினுடைய |
| அவன் கணஃது | அவன் பக்கலிலே யாயிற்று : | | |
| சீர் உற்ற அகில் புகை | பரிமளச் செல்வம் மிக்க புகையையும் | புது மணம் முகந்து கொண்டு | செவ்விப் பரிமளத்தை முகந்து கொண்டு |
| யாழ் நரம்பு | யாழின் நரம்பொலியையும் | | |
| பஞ்சமம் | பஞ்சமராகத்தையும் | எ | ழுந்தோ !. |

***—கீழ்ச்சொன்ன பதார்த்தங்களெல்லாம் திரளவந்து கண்பாராதே நலி படியைச் சொல்லுகிறாள். ஆருக்கு என் சொல்லுகேன் ?=என்னைப்போலே நீங்கள் நெஞ்சிழந்தவர்களுமல்லீர்; வாடை முதலான போக்ய பதார்த்தங்களைத் தேடிப்பிடித்து அவைகொண்டு உகப்பவர்களுமாயிருக்கின்றீர்கள்; இப்படிப்பட்டவுங்களுக்கா நான் என்னிலையைச் சொல்லுவது ? என்றபடி. இக்கூர்தண்வாடை ஆருயிரளவன்று=மிகைத்துக் குளிர்ந்து வீசுகின்ற வாடையானது நம்முயிரைக் கொண்டு போமளவன்று என்கிறவிதனால், சித்ரவதஞ்செய்யப் பார்க்கின்றதென்றபடி. சிரமமின்றி உயிரைக் கொண்டு போனால் நல்லதே; அப்படி கொண்டு போமதன்று; உயிரைக் கொள்ளை கொள்ளாது விட்டிட்டு ஹிம்ஸிக்க நினைத்திராநின்றது போலுமென்றவாறு. "ஆருக்கென் சொல்லுகேன்" என்றவிடத்து—"வடுகர்க்குத் தமிழர் வார்த்தை சொல்லுமாபோலே" என்பது ஈடு. நெஞ்சும் கண்ணபிரானுடைய கள்வப்பணிமொழிகளிலே யீடுபட்டொழிந்தது. பின்னடிகளில், மற்றுமுள்ள பாதகப்பொருள்கள் பேசப்பட்டன. ... ... (7)

புதுமணமுகந்துகொண்டேறியுமாலோ போங்கிளவாடைபுன்சேக்கராலோ*
அதுமணந்தகன்ற நங்கண்ணன்கள்வம் கண்ணனிற்கோடிதினியதனிலும்பர்*
மதுமணமல்லிகைமந்தக்கோவை வண்பசும்சாந்தினில்பஞ்சமம்வைத்து*
அதுமணந்தின்னருளாய்ச்சியர்க்கே யூதுமத்தீங்குழற்கேயுய்யேன் நான். (8)

| | | | |
|---|---|---|---|
| போங்கு ... ள வாடை | என்னை நலிய நலியக் கிளர்ந்து இளகிப் பதிக்கிற வாடைக் காற்றானது | நம் ...ன் கள்வம் | நமது க்ருஷ்ணனுடைய கள்ளச் செயல்கள் |
| | | கண்ணனில் கொடிது | அவனிற்காட்டிலும் கொடியதாயிராநின்றது ; |
| புது மணம் முகந்து கொண்டு எறியும் ஆல் ஓ | புதிய பரிமளத்தை முகந்து கொண்டு வீசாநின்றதந்தோ ! | இனி அதனில் உம்பர் | இன்னமும் அதுக்குமேலே |
| | | மது மணம் மல்லிகை | மதுவையும் மணத்தையுமுடைத்தான மல்லிகையினுடைய |
| புன் செக்கர் ஆல் ஓ | புல்லிய செக்கர் வானமும் வந்து நலியாநின்றது ; | மந்தம் கோவை | மெல்லிய ஸரமென்ன |
| அது மணந்து அகன்ற | அப்படி கலந்து பிரிந்த | வண் பசும் சாந்தில் | அழகிய குளிர்ந்த சந்தனமென்ன இவற்றிலுங்காட்டில் |

பஞ்சமம் வைத்து — விலக்ஷணமான ராகத்தை யிட்டு
அதத்தீம குழற்கே — அவ்வினிய குழலோசைக்கே
அது மணந்து இன் அருள் ஆய்ச்சியர்க்கே ஊதும் — வாசாமகோசரமான ஷத்தைப் ப லருள் செய்யப்பெற்ற
நலநான் உய்யேன் — நான் உயிரைப் பறிகொடுப் பவளாயிராநின்றேன்.

***—இங்ஙனே பொங்கிளவாடையானது புது மணத்தை முகந்துகொண்டு எறியா நிற்கச்செய்தே அதன்மேலே புன் செக்கர் வந்து நலியாநின்றது; அதன்மேலே, சொல்ல முடியாதபடியாக என்னுடனே கலந்து அகன்ற கண்ணனுடைய அக்கலவி நினைவுக்கு வந்து அவன்றன்னிலும் கொடிதாய் நின்று என்னை யீராநின்றது? இனி அதுக்குமேலே மதுமண மல்லிகை மாலையும் வண்பசுஞ்சாந்தும் வந்து பாதிக்கின்றன. அதன்மேலே, நம்மோடே அங்ஙனே குரவை கோத்துக் கலந்து பரிமாறுகைக்குத் தன் பக்கலிலே நான் வருகைக்காக ஆய்ச்சியரான நமக்கே கேட்கும்படி பஞ்சமராகத்தை வைத்து ஊதுகின்ற அத்தீங்குழ லோசை யொன்றே நின்று என்னை முடிக்கின்றது அந்தோ! என் செய்வேனென்கிறாள்.

இரண்டாமடியிலும் ஈற்றடியிலும் "அதுமணந்து" என்றது விலக்ஷணப்ரயோகம்; 'அது அது' என்னும்படியான கலவியைச் செய்து—வாசாமகோசரமாக ஸம்ச்லேஷித்து என்றபடி. ... ... ... (8)

ஊதுமத்தீங்குழற்கேயுய்யேன் நானதுமொழிந்திடையிடைத்தன்செய்கோலத்*
தூதுசெய்கண்கள் கொண்டொன்றுபேசித்தூமொழியிசைகள் கொண்டொன்றுநோக்கி*
பேதுறுமுகம்செய்துநொந்துநொந்து பேதைநெஞ்சறவறப்பாடும்பாட்டை*
யாதுமொன்றறிகிலமம்மவம்ம மாலையும்வந்ததுமாயன்வாரான். (9)

டை இடை மொழிந்து — இடையிடையே அபிப்ராய கர்ப்பங்களான பாசுரங்களையிட்டு
ஊதும் அத்தீம் குழற்கே நான் உய்யேன் — ற இனிய அக்குழலோசைக்கே நான் முடிந்து போகின்றேன்;
தன் செய் கோலம் — னக்குத்தானே செய்யப்பட்ட கோலத்தையுடைத்தாய்
தூது செய் கண்கள் கொண்டு — போகின்ற கண்களைக் கொண்டு
ஒன்று பே — தன் கருத்தை வெளியிட்டு
மொ ச கள் கொண்டு — இனிய பாசுரங்களையுடைய இசைகளைக் கொண்டு
ஒன்று நோக்கி — கடாக
பேதுறு முகம் செய்து — தன்னீடுபாடு தன் முகத்திலே தோன்றும்படி காட்டி
நொந்துநொந்து — அபலைகள் என்படுகிறார்களோ வென்று மிகவும் நொந்து
பேதை நெஞ்சு அறவு அற — பெண்களினுடைய வ அறும்படியாக
பாடும் பாட்டை — பாடுகிற பாட்டை
ஆதும் ஒன்று அறிகிலம் — சிறிதும் அறியகில்லோம்;
அம்ம அம்ம — ஐயோ !;
மாலையும் வந்தது — மாலைப்பொழுதும் வந்திட்டது;
மாயன் வாரான் — கண்ணன் வந்திலன்.

***—ந யெல்லாம் ஒருதட்டாயும் அவனுடைய வேணுகானம் மாத்திரம் ஒருதட்டாயுமிருத்தலால் "ஊதுமத்தீங்குழற்கே உய்யேன் நான்" என்று மீண்டுஞ் சொல்லுகிறது. அதிலும் ஸாதாரணமாகக் குழலூதுகையில்லையே; 'பிரிந்தேன், ஆற்றேன்' என்றுப்போலே சில ஸூசபாஷணங்களை இடையிடையே சொல்லியாயிற்றுப் பாடுவது. கண்ணாலே காண்பதும் இசைகளாலே பாடுவதும் லௌகிகர்படியாயிருக்க, இவனுடைய படி லோக விலக்ஷணமாயிராநின்றது!; கண்களைத் தூதுவிட்டு அவற்றாலே பேசுவதும், தூமொழியிசைகளைக் கொண்டு நோக்குவது மாயிற்று இவன்படி. பேச்சில் என்ன அபிப்ராயம் வெளிவருமோ அது கண்பார்வையிலேயே வெளிவருகின்றதென்றும், கண்ணாலே நோக்கி யீடுபடுத்துமது இசைப்பாட்டுக்களினாலேயே யாகின்றதென்றும் சொன்னவாறு. பேதுறுமுகஞ்செய்து=

முகத்தைக் கண்டவாறே பைத்தியம் பிடிக்கும்படியாகச் செய்து என்றபடி. நோந்து நோந்து='நம்மிடத்திலீடுபட்ட அபலைகள் என்ன பாடுபடுவர்களோ!' என்று தானும் நோவு படாமலிருக்க முடியாதே. சைதந்யமுள்ளவிடத்தே இந்த நோவுபாடு தவிரவொண்ணாதே. பேதை நெஞ்சறவு அற=பேதைகள் 'இனி அவனோடு கூடுவதில்லை' என்று ஊடல் கொண்டிருப் பர்களே, அவ்வூடலும் தீரும்படியாக வாயிற்று கண்ணன் பாடுவது. அது நலிகிற நலிவு சொல்லுந்தரமன்று. மாலைப்பொழுதிலே அவன் வந்திடுவனென்று ஒரு நசையிருந்தது; ஆனால், மாலையும் வந்தது மாயன் வாரான் என்றலற்றுகிறாள்.

இங்கு மாயன் என்றதன் கருத்தை நம்பிள்ளை விவரித்தருளுகிறார் காண்மின்;— "தன்னைப் பிரிந்தார் லஜ்ஜிக்கும்படி தானே இழவாளனாய் வந்து கால் பிடிக்கும் ஆச்சர்ய பூதன்." ... ... ... (9)

மாலையும்வந்ததுமாயன்வாரான் மாமணிபுலம்பவல்லேறணைந்த*
கோலநன்னாகுகளுகளுமாலோ கொடியனகுழல்களும்குழறுமாலோ*
வாலொளிவளர்முல்லை கருமுகைகள் மல்லிகையலம்பிவண்டாலுமாலோ*
வேலையும்விசும்பில்விண்டலறுமாலோ என்சொல்லியுய்வனிங்கவனைவிட்டே. (10)

| | | | |
|---|---|---|---|
| மாலையும் வந்தது மாயன் வாரான்—; | | வளர் முல்லை கருமுகைகள் மல்லிகை அலம்பி | வளர் முல்லை, கருமுகைப்பூ மல்லிகைப்பூ ஆகிய இவற்றிலே படிந்து |
| மா மணி புலம்ப | பெரிய மணிகள் ஒலிக்கும்படி | | |
| வல் ஏறு அணைந்த | வலிய ரிஷபங்களோடு சேர்ந்த | | |
| கோலம் நல் நாகுகள் உகளும் ஆல் ஓ | அழகிய பசுக்கள் களித்துத் திரிகின்றன வந்தோ !; | ஆலும் ஆலோ | முரல்கின்றன வந்தோ !; |
| | | வேலையும் | கடலோதமும் |
| குழல்களும் | புல்லாங்குழல்களும் | விசும்பில் விண்டு | ஆகாசத்திலே அளாவி |
| கொடியன | கொடுமை செய்வனவாகி | | |
| குழறும் | இனிய இசையைச் செய்கின்றன ; | அலறும் | கோஷிக்கின்றது ; |
| | | இங்கு | இந்நிலைமையில் |
| வண்டு | வண்டுகளானவை | அவனை விட்டு | அப்பெருமானைப் பிரிந்து |
| வால் ஒளி | வெளுத்த வொளியை யுடைத்தான | என் சொல்லி உய்வன் | எங்ஙனம் பிழைப்பேன் ? |

* * *—வருவதாகக் குறித்துப் போனகாலம் வந்தது, அவன்றான் வருகிறிலன் *மாலையாய்த் தன்னுடைய நாவொழியாதாடுந் தனிமணியின் இன்னிசை யோசையும் வந்தென் செவிதனக்கே, கொன்னவிலு மெஃகில் கொடிதாய் நெடிதாகும். என்னிதனைக் காக்குமா சொல்லீர்* (பெரிய திருமடல்) என்கிறபடியே மாட்டின் கழுத்து மணியோசையானது விரஹிகளுக்கு உத்தீபகமாகையாலே அதற்கு நோவுபடுகிறபடி சொல்லுகிறது. ஏறுகளும் நாகுகளும் கலந்து பரிமாறிக் கோலாஹலங்கள் செய்யுமதுவும் உத்தீபகமாம்.

கொடியன குழல்களும் குழறுமாலோ=கீழே 'அவனுடைத் தீங்குழல்' என்று ஒருமையாகச் சொல்லிற்று; இங்கே 'குழல்களும்' என்று பன்மையாகச் சொல்லுகிறது; இதன் கருத்தை ஆறாயிரப்படியில் பிள்ளான் விவரித்தருளுகிறார்—"வண்டுவரைப் பெருமானுடைய திருத்தோழன்மார் குழல்களை யூதிக்கொண்டு வந்து புகுராநின்றனர்" என்று. இதற்கு மேலே வண்டுகள் பலவகைப் பூக்களிலும் படிந்து முரல்கின்றதுவும் உத்தீபகம். கடலலையோசையும் கர்ணகடோரம். இப்படியான பாதகவர்க்கங்களினிடையே அவனுடைய பிரிவை எங்ஙனே யாற்றுவேனென்றாளாயிற்று. .... ... (10)

அவனைவிட்டகன்றுயிராற்றகில்லா அணியிழையாய்ச்சியர் மாலைப்பூசல்*
அவனைவிட்டகல்வதற்கேயிரங்கி யணிகுருகூர்ச்சடகோபன்மாறன்*
அவனியுண்டுமிழ்ந்தவன் மேலுரைத்தவாயிரத்துள்ளிவைபத்துங்கொண்டு*
அவனியுளலற்றிநின்றுய்மின்தொண்டீரச்சொன்ன மாலைநண்ணித்தொழுதே. (11)

| | | | |
|---|---|---|---|
| அவனை விட்டு அகன்று | கண்ண பிரானை விட்டுப் பிரிந்து | அவனி உண்டு உமிழ்ந்தவன் மேல்உரைத்த | பூமியை உண்டுமிழ்ந்த அப்பெருமான் விஷயமாக அருளிச்செய்த |
| உயிர் ஆற்ற இல்லா | உயிர் தரிக்கமாட்டாத | ஆயிரத்துள் இவை பத்தும் கொண்டு | ஆயிரத்தினுள் இப்பதிகங் கொண்டு |
| அணி இழை ஆய்ச்சியர் | அழகிய ஆபரணங்களணிந்த கோபமார்கள் | தொண்டீர் | தொண்டர்களே! |
| மாலை பூசல் | மாலைப் பொழுதிலே பட்ட பாட்டை | அவனியுள் அலற்றி நின்று | பூமிக்குள்ளே உகந்து அநுஸந்தித்து |
| அவனை விட்டு அகல்வதற்கே இரங்கி | அப்பெருமானை விட்டுப் பிரிந்திருக்கை காரணமாக நோவுபட்டு | அச் சொன்ன மாலை நண்ணி தொழுது | அங்குச்சொன்ன கண்ணனைக் கிட்டித்தொழுது |
| அணி குருகூர் சடகோபன் மாறன் | ஆழ்வார் | உய்மின் | உஜ்ஜீவியுங்கள். |

***—வண்துவரைப் பெருமானைப் பிரிந்து தரிக்கமாட்டாமல் அந்தியம் போதில் அணியிழையாய்ச்சியர்கள் திரளநின்று கூப்பிட்டாப்போலே ஆழ்வாரும் அவனைப் பிரிந்து தரிக்கமாட்டாமை கூப்பிட்டலற்றின இத்திருவாய்மொழி தொண்டர்களுக்கு உஜ்ஜீவனஸாதனமென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறது. "இப்பதிகம் தொண்டர்களுக்கு உஜ்ஜீவனத்தைத் தரும்" என்றிங்ஙனே பலச்ருதியாகச் சொல்லாமல் "தொண்டீர் உய்மின்" என்று சொல்லியிருந்தாலும் பயனுரைக்கும் வகைகளிலே இதுவுமொருவகையென்று கொள்க. இப்பாசுரத்தைக் கற்பார்க்கு என்னைப் போலே கூப்பிடவேண்டா; ஆசைப்பட்ட பேறுபெறுகையில் கண்ணழிவில்லை என்றவாறு. ... ... ... (11)

**திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையுரையில்**

ஒன்பதாம்பத்தில் ஒன்பதாந்திருவாய்மொழி

முற்றிற்று.

நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஒன்பதாம்பத்து—பத்தாந்திருவாய்மொழி—மாலைநண்ணி.

---

உரையவதாரிகை:—கீழ்*அறுக்கும் வினைப்பதிகத்திலே அவனைப் பெறவேணுமென்கிற மனோரதமாய்ச் சென்றது. அந்த மனோரதம் நிறைவேறாமையாலே மிகவும் க்லேசித்தபடி சொல்லிற்று கீழ்த் திருவாய்மொழியிலே. இப்படி நோவுபடுகிறவிவருடைய க்லேசத்தை யறிந்த எம்பெருமான் "ஆழ்வீர்! என்னைப் பெறாமையாலே நீர் நோவுபடுகிறது கிடக்கட்டும்; உம்மைப் பெறாமே இழவுபட்டுக்கிடப்போம் நாமன்றோ; உமக்கொரு குறையுண்டோ? திருநாட்டை விட்டுத் திருக்கண்ணபுரத்திலே நாம் ஸன்னிதி பண்ணியிருப்பது உமக்காகவன்றோ; இந்த சரீரத்தின் முடிவிலே உம்முடைய அபேக்ஷிதம் நிறைவேற்றக்கடவோம்" என்று சொல்லி ஸமாதானம் பண்ண, ஆழ்வாரும் ஸமாதானமடைந்து அதனைச் சொல்லி மகிழ்கிறார் இத்திருவாய்மொழியில். "மரணமானால் வைகுந்தம் கொடுக்கும்பிரான்" என்கிற பாசுரம் இப்பதிகத்திற்கு உயிராயிருக்கும்.

'ஸர்வேச்வரன் ஸர்வஜநஸமாச்ரயணீயனாய்க்கொண்டு திருக்கண்ணபுரத்திலே கோயில் கொண்டிராநின்றான்; எல்லீரும் அவனைச் சென்று ஆச்ரயியுங்கோள்; ஆச்ரயிக்குமிடத்தில் அவன் திருவடிகளிலே பக்தியைப் பண்ணுங்கோள்; பக்திக்கு உபகரணமில்லாதார் ப்ரபத்தியைப் பண்ணுங்கோள்; அதற்குரிய அத்யவஸாயமில்லாதார் உக்திமாத்ரத்தையாகிலும் சொல்லுங்கோள்; அவ்வளவே கொண்டு அவன்றான் கைவிடான்; ஆனபின்பு எல்லாருமொக்க அவனை ஆச்ரயியுங்கோள்' என்று பரோபதேச ரூபமாய் நிகழ்கின்றது இப்பதிகம். "மோஹித்துக்கிடந்தாராகில் கிடக்குமித்தனை போக்கி உணர்ந்தாராகில் பிறர்க்கு ஹிதஞ் சொல்லியல்லது நிற்கமாட்டார்" என்பர் நம்பிள்ளை. ... . .... *

மாலைநண்ணித் தொழுதெழுமினோவினைகெட*
காலைமாலை கமலமலரிட்டுநீர்*
வேலைமோதும்மதிள்சூழ் திருக்கண்ணபுரத்து*
ஆலின்மேலால்மர்ந்தான் அடியிணைகளே. (1)

| | | | |
|---|---|---|---|
| வேலை மோதும் மதிள் சூழ் | கடலலை மோதப் பெற்ற மதிளாலே சூழப்பட்ட | அடி இணைகள் | அவனது உபயபாதங்களையும் |
| திருக்கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்தி லெழுந்தருளியிருப்பவனும் | காலை மாலை | இரவும் பகலும் |
| ஆலின் மேல் | ஜலத்தின் மீது | கமலம் மலர் இட்டு | தாமரைப்பூக்களை ஸமர்ப்பித்து |
| ஆல் அமர்ந்தான் | ஆலிலையில் கண்வளர்ந்தவனுமான | நீர் | (அன்பர்களே!) நீங்கள் |
| மாலை | ஸர்வேச்வரனை | வினை கெட | (உங்களுடைய) பாவம் தொலையும்படி |
| நண்ணி | கிட்டி | தொழுது எழுமின் | வணங்கி உஜ்ஜீவியுங்கள். |

***—வடதளசயனனான மஹோபகாரகன் திருவடிகளிலே ப்ரேமத்தோடு பணிந்து அநவரத கைங்கரியம் பண்ணுங்கோளென்று, இத்திருவாய்மொழியிற் சொல்லுகிற ஆச்ரயணத்தைச் சுருக்கமாகவருளிச் செய்கிறார். மாலை நண்ணி யென்றதற்கு இரண்டுபடியாகப் பொருளருளிச் செய்வர்; மாலென்று திருமாலைச் சொன்னபடியாய் அப்பெருமானை கிட்டியாச்ரயித்து உஜ்ஜீவிக்கப் பாருங்கள் என்றும்; மால் என்று அன்புக்குப்பேராய், அன்பையுற்று—பக்தியுக்தராகி என்றும். வினைகெட என்றதற்கும் இருவகைப் பொருள்; பகவத்ப்ராப்தி விரோதி வர்க்கமெல்லாம் கெடும்படி யென்றும், கீழ் *மல்லிகைகமழ் தென்றலில் நான்பட்ட க்லேசம் உங்களுக்கும் நேராதபடி யென்றும். காலை மாலை கமலமலரிட்டுத் தொழுதெழுமின் = காலை யொருமுறையும் மாலையொரு முறையும் தொழுதெழுமின் என்கிறதன்று; பகலுமிரவும்

என்றபடி. ஆச்ரயணத்திற்குக் கால நியதியில்லை யென்கை. கமல மலரிட்டு என்று ஒரு புஷ்பவிசேஷத்தை நிர்ப்பந்திக்கிறபடியன்று; அவனுக்கு ஆகாத புஷ்பமில்லை. “கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும் முள்ளார் முளரியும் ஆம்பலுமுன் கண்டக்கால், புள்ளாயோ ரேனமாய்ப் புக்கிடந்தான் பொன்னடிக்கென்று, உள்ளாதாருள்ளத்தை உள்ளமாக் கொள்ளோமே” என்ற திருமங்கையார் பாசுரம் இங்கே அநுஸந்திக்கவுரியது. ‘‘எண்டிசையுமுள்ள பூக்கொண்டு’’ என்றாரே இவ்வாழ்வார்தாமே. ஆக, கமலமலரென்றவிது அல்லாத புஷ்பங்களுக்கும் உபலக்ஷண மென்றதாயிற்று.

வேலை மோதும் மதிள்சூழ் திருக்கண்ணபுரம்=திருக்கண்ணபுரத்துத் திருமதிளினை கடலலை மோதுவதாகச் சொல்லுகிறவிது இப்போது கண்டதில்லையாகிலும் முற்காலத்திலிருந்திருக்கக் கூடும்; நாளடைவில் ஸமுத்ரம் ஒதுங்கிப் போயிருக்கக்கூடும் என்பர் பெரியார். “ஸமுத்ரம் அணித்தாகையாலே திரைகள் வந்து மோதாநின்றுள்ள மதிளாலே சூழப்பட்டிருந்துள்ள திருக்கண்ணபுரத்திலே’’ என்பது ஈடு. “கலங்கல் முந்நீர்க்கண்ணபுரம்” என்றார் திருமங்கையாழ்வாரும். ... ... (1)

கள்ளவிழும்மலரிட்டு நீரிறைஞ்சமின்*
நள்ளிசேரும்வயல்சூழ் கிடங்கின்புடை*
வெள்ளியேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுர
முள்ளி* நாளுந்தொழுதெழுமினோதொண்டரே. (2)

| | | | |
|---|---|---|---|
| தொண்டரே | எம்பெருமானிடத்து ஆசையுள்ளவர்களே! | வெள்ளி ஏய்ந்த மதிள் சூழ் | சுக்கிரனைத் தொட்டுக் கொண்டிருக்கிற மதிள்களாலே சூழப்பட்டதுமான |
| நீர் | நீங்கள் | திரு கண்ணபுரம் | திருக்கண்ணபுரத்தை |
| கள் அவிழும் மலர் இட்டு | தேனொழுகுகின்ற புஷ்பங்களைப் பணிமாறி | உள்ளி | சிந்தனை செய்து கொண்டு |
| இறைஞ்சுமின் | வணங்குங்கள். | நாளும் | நாடோறும் |
| நள்ளி சேரும் | பெண் நண்டுகள் களித்து வாழப்பெற்ற கழனிகள் சூழ்ந்த | தொழுது எழுமின் | வணங்கி உஜ்ஜீவியுங்கள். |
| வயல் சூழ் கிடங்கின் புடை | அகழ்களைப் பக்கங்களிலே யுடையதும் | | |

*** “கள்ளவிழும் மலரிட்டு இறைஞ்சுமின்” என்று அருளிச் செய்கையாலே இன்ன மலரென்று ஒரு நிர்ப்பந்தமில்லையென்பது காட்டப்படும். கீழ்ப்பாட்டில் “கமல மலரிட்டு” என்றது—கமல மலரேயாக வேணுமென்றும் அதுபோன்ற சிறந்த மலரேயாக வேணுமென்றும் காட்டினபடியன்று என்பதை இப்பாட்டில் தெளியவைத்தாராயிற்று. வாடிவதங்கிப் போன மலரன்றிக்கே அப்போதலர்ந்த மலரென்கிறது கள்ளவிழும் என்ற அடைமொழியினால். “அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் புஷ்பமிந்த்ரிய நிக்ரஹ:, ஸர்வபூததயா புஷ்பம் க்ஷமா புஷ்பம் விசேஷத:, த்யாநம் புஷ்பம் தப: புஷ்பம் ஜ்ஞாநம் புஷ்பம் ததைவ ச, ஸத்யமஷ்டவிதம் புஷ்பம் விஷ்ணோ: ப்ரீதிகரம் பவேத்.” என்று பகவச்சாஸ்த்ரங்களிற் சொல்லப்பட்ட அஷ்டவித புஷ்பங்களைச் சொன்னபடியாகவுமாம். [வெள்ளியேய்ந்த மதிள்சூழ்] இதற்குப் பலவகையாகப் பொருள் கூறுவர்; (1) வெள்ளியென்று சுக்ரனுக்குப் பேராகையாலே சுக்ரனைச் சொன்னது நக்ஷத்ரஸாமான்யத்தைச் சொன்னபடியாய் நக்ஷத்ரமண்டலத்தளவும் ஓங்கின மதிளையுடைத்தான திருக்கண்ணபுரம். (2) வெள்ளியாலே [ரஜத்தாலே] சமைந்த மதிள் என்றுமாம். (3) வெள்ளிபோலே சுப்ரமாயிருக்கின்ற மதிள் என்றுமாம். நக்ஷத்ரபதத்தளவுமோங்கின மதிளென்றோ, வெள்ளியாலே சமைக்கப்பட்ட மதிளென்றோ சொல்லும் பக்ஷத்தில் இது பொய்யுரையாகாதோவென்று சிலர் சங்கிக்கக்கூடும். இத்தகைய ப்ராகாரஸம்ருத்தியுண்டாக வேணுமென்று ஆசம்ஸித்தருளிச் செய்கிறதாகையாலே குறையொன்றுமில்லை யென்க. (2)

தொண்டர்நுந்தம் துயர்போகநீரேகமாய்*
விண்டுவாடாமலரிட்டு நீரிறைஞ்சுமின்*
வண்டுபாடும்பொழில்சூழ் திருக்கண்ணபுரத்
தண்டவாணன்* அமரர்பெருமானையே. (3)

| | | | |
|---|---|---|---|
| தொண்டர் | தொண்டர்களே! | நும் தம துயர் போக | உங்களுடைய துக்கம் தொலையும்படி |
| வண்டு பாடும் பொழில் சூழ் | வண்டுகள் பாடுமிடமான சோலைகளாலே சூழப்பட்ட | நீர் ஏகம் ஆய் | நீங்கள் அநந்ய ப்ரயோஜநர்களாய் |
| திரு கண்ண புரத்து | திரு[illegible] | விண்டு வாடா மலர் இட்டு | மலர்ந்து வாடாத [அப்போதலர்ந்த] பூக்களைப் பணிமாறி |
| அண்டம் வாணன் அமரர் பெருமானை | அகிலாண்ட கோடி ப்ரஹ்மாண்டநாயகனான எம்பெருமானை | நீர் [இறைஞ்சு]மின் | நீங்களே தொழுங்கள். |

***—திருக்கண்ணபுரத்திலே நின்றருளினவன் உபயவிபூதி நாதனுயிற்று; தொண்டர்களே! உங்கள் துக்கங்கெட அநந்யப்ரயோஜநராய்க் கொண்டு ஆச்ரயியுங்கோளென்கிறார். தொண்டர=இது அண்மைவிளி; தொண்டர்களே! என்றபடி. இளைய பெருமாளைப்போலே ஸகலவித கைங்கர்யங்களையுஞ் செய்யப் பாரித்திருக்குமவர்களே யென்கை. நுந்தம் துயர்போக= துயர் எல்லார்க்கும் ஒரே வகையாயிராது; "ஸம்ஸாரிகளுக்கு விரோதி சத்ருபீடாதிகள்; முமுக்ஷுக்களுக்கு விரோதி தேஹஸம்பந்தம்; முக்தர்க்கும் நித்யர்க்கும் விரோதி கைங்கர்ய ஹானி" என்று முமுக்ஷுப்படியிலருளிச் செய்த கட்டளையிலே தந்தாமுடைய விரோதிகள் தொலையும்படியாக வென்கை.

நீர் ஏகமாய்=நீங்களெல்லாரும் ஏகீபவித்தவர்களாய்க் கொண்டு; (அல்லது) நீங்கள் பலவகைப் பலன்களைக் கணிசியாதே பகவத்கைங்கரியமொன்றையே கணிசித்தவர்களாய்க் கொண்டு என்றுமாம். விண்டுவாடாமலரிட்டு இறைஞ்சுமின்=செவ்விப் பூவைக் கொண்டு ஆச்ரயியுங்கோள். நீர் என்பது முதலடியிலும் இரண்டாமடியிலுமுள்ளது; இரட்டிப்பு—உங்கள் ஸ்வரூபத்தை நோக்க வேணுமென்று ஞாபகம் செய்கிறபடி.

வண்டுபாடும் பொழில்சூழ்=வண்டுகளைப்போலே ஸாரக்ராஹிகளானார் வர்த்திக்கிற தேசமென்றபடி. அண்டவாணன் அமரர்பெருமான்=உபயவிபூதிநாதனென்கிறது. அண்டவாணன் என்பதனால் லீலாவிபூதி நிர்வாஹகத்வம் சொல்லுகிறது. ... (3)

மானைநோக்கி மடப்பின்னைதன்கேள்வனை*
தேனைவாடாமலரிட்டு நீரிறைஞ்சுமின்*
வானையுந்துமதிள்சூழ் திருக்கண்ணபுரம்*
தானயந்தபெருமான் சரணாகுமே. (4)

| | | | |
|---|---|---|---|
| மானை நோக்கி மடம் பின்னை தன் கேள்வனை | மானை யொத்த கண்பார்வையை யுடையளான நப்பின்னைப் பிராட்டிக்கு நாதனும் | வானை உந்தும் மதிள் சூழ் | ஆகாசத்தை யளாவியிருக்கின்ற மதிளாலே சூழப்பட்ட |
| தேனை | தன்போல் இனியனுமான எம்பெருமானை | [தி]ரு கண்ண புரம் | திருக்கண்ணபுரத்தை |
| வாடா மலர் இட்டு நீர் இறைஞ்சுமின் | அப்போதலர்ந்த செவ்விப் பூக்களை யிட்டு நீங்கள் தொழுங்கள்; | நயந்த பெருமான் தான் சரண் ஆகும் | விரும்பியிருக்கின்ற சௌரிப் பெருமானே ரக்ஷகராவர். |

***—ஆச்ரயிக்குமளவில் நப்பின்னைப்பிராட்டி புருஷகாரமாக ஆச்ரயியுங்கோள்; அவளுடைய புருஷகாரபலத்தாலே பேறு தப்பாதென்கிறார். மானைநோக்கி=மானை நோக்கி என்று பதம் பிரித்து மானுனது நையும்படியான [தோற்கும்படியான] நோக்கையுடைய நப்பின்னைப்பிராட்டியென்று பொருளுரைப்பர். தேனைவாடாமலரிட்டு=தேனை என்று தனியே பிரித்தெடுத்து, தேன் போன்ற [பரமபோக்யனான] எம்பெருமானை என்று பொருளுரைப்பர்கள். ஆசார்ய ஹ்ருதயத்தில்

(4—9). "அதில் துர்ப்பல புத்திகளுக்கு மாலைநண்ணி காலை மாலை விண்டு தேனை வாடா மலரிட்டு அன்பராம் ஸாங்கபக்தி" என்றருளிச் செய்திருக்கையாலே தேனை வாடா மலரென்று ஒரு சொல்லாகக் கொள்ளுகிற யோஜனையும் உண்டென்று தெரிய வருகின்றது. தேனையுடைத்தாய் வாடாத மலரையிட்டு என்று கொள்க.

வானையுந்து மதிள்சூழ் திருக்கண்ணபுரம் = ஆகாசத்தோடே ஸ்பர்சித்து பண்ணி அத்தைத்தள்ளுமா போலேயிருக்கிற மதிளாலே சூழப்பட்ட ஊர் என்றது—ஆஸுரப்ரக்ருதிகளுக்குக் கிட்டவொண்ணாதபடி ஸுரக்ஷிதமான ஊர் என்கை. தான் நயந்த பெருமான்—அடியார்களோடே ஸம்ச்லேஷிப்பதற்குப் பாங்கானவிடமென்று ஸர்வேச்வரன் விரும்பி வர்த்திக்கிறானாயிற்று. ... ... ... (4)

சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்*
மரணமானால் வைகுந்தம்கொடுக்கும்பிரான்*
அரணமைந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தரணியாளன்* தனதன்பர்க்கன்பாகுமே. (5)

தன தாள் அடைந்தார்க்கு { தனது யடைந்தவர்களுக்கு
சரணம் எல்லாம் } ஸகலவித ரக்ஷகனுமாய்
மரணம் ஆனால் { இந்த தேஹம் விட்டு நீங்கின
வைகுந்தம் கொடுக்கும் பிரான் } பரமபதமளிக்கும் பெருமானுமாய்
அரண் அமைந்த மதிள் சூழ் { காப்பாக அமைந்த மதிள் சூழப்பட்ட
(திருக்கண்)ணபுரம் திருக்கண்ணபுரமாகிற ... ஆள்பவனுமான எம்பெருமான்
அன்பர்க்கு { தன்னிடத்தில் அன்பு வாய்ந்தவர்களுக்கு
அன்பு ஆகும் { அன்புதானே வடிவெடுத்தவனாயிருப்பன்.

***—கீழ்ச்சொன்னபடி பக்தி யோகத்தால் அவனை யாச்ரயிக்க அதிகாரிகளல்லாமல் தன் திருவடிகளையே உபாயமாகப் பற்றினவர்களுக்கு எம்பெருமான் எல்லாப்படியாலும் ரக்ஷகனாய் தேஹாவஸானத்திலே அவர்களை இந்த ப்ரக்ருதியில் நின்றும் விடுவித்துத் திருநாட்டிலே கொண்டுபோய் வைத்தருள்வனென்கிறார்.

இப்பதிகத்திற்கு இப்பாட்டே உயிராயிருக்கும்: "ஆழ்வீர்! உமக்கு மரணமானால் வைகுந்தம் கொடுக்கக்கடவேன்" என்று எம்பெருமானருளிச் செய்ததையே "மரணமானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான்" என்கிற சொல்நயத்தாலே வெளியிட்டருளுகிறார். இவ்வுடல் முடியுந்தனையும் பொறுத்திரும்; முடிந்தவுடனே ப்ராரப்த கருமங்கள் முடிந்தனவாகக் கொண்டு, ஸஞ்சித கருமங்களை க்ஷமைக்கு விஷயமாக்கி இவ்வளவோடே ஜன்ம பரம்பரையை முடித்திட்டு *பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்குமழுக்குடம்பும் இந்நின்ற நீர்மை இனியாமுறாமை* என்று நீர் முதலடியிலே பிரார்த்தித்தபடியே செய்து தலைக்கட்டுவேன்" என்று ஆழ்வாரை நோக்கி எம்பெருமானருளிச் செய்தது இங்கு அநுபாஷிக்கப்பட்டதாயிற்று.

"மரணமாக்கி வைகுந்தங் கொடுக்கும் பிரான்" என்று ஆழ்வாரருளிச் செய்திருந்தாரென்றும், அது அச்லீலமாயிருக்கிறதென்று கருதிய ஸ்ரீமந்நாதமுனிகள் போல்வார் அப்பாடத்தைமாற்றி "மரணமானால்" என்று ப்ரவசனம் செய்தருளினரென்றும் சிலர் சொல்லிவருவது ஆதாரமற்ற அஸம்பத்தமான ஐதிஹ்யம். வியாக்கியான ரீதிக்கு அது நெஞ்சாலும் நினைக்கத்தக்கதன்று. "மரணமாக்கி" என்று பாடமிருந்திருந்தால் அது "அருளுடையவன்தாளணைவிக்கும் முடித்தே" என்ற பாசுரத்தோடொக்குமாதலால் அதை மாற்றவேண்டிய அவச்யமேயில்லையாமென்று தெளிக.

"அரண் அமைந்த மதிள்சூழ்" என்ற விசேஷணத்தினால் ஆழ்வார் தம்முடைய அச்சத்தைத் தீர்த்துக் கொள்ளுகிறார்; நித்யஸூரிகள் பரியவிருக்கிறவன் இங்கே நின்றானே! இவனுக்கு என் வருகிறதோவென்று அஞ்சவேண்டாதிருக்கை. தரணியாளன்—தரணியென்று பூமிக்குப்பெயராய், பூமியிலுள்ள ஸம்ஸாரிகளை ஆட்கொள்ளுமவன் என்றதாம். தனதன்பர்க்குஅன்பாகும் = 'தம்மையுகப்பாரைத் தாமுகப்பர்' என்றபடி. 'அன்பர்க்கு அன்பனாகும்' என்ன வேண்டுமிடத்துஅன்பாகும் என்

கையாலே எம்பெருமான் அன்பையிட்டே நிரூபிக்க வேண்டும்படி யாவன என்பது பெறப்படும். (5)

அன்பனாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்*
செம்பொனாகத்து அவுணனுடல்கீண்டவன்*
நன்பொனேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தன்பன்* நாளும்தனமெய்யர்க்குமெய்யனே. (6)

தன தாள் அடைந்தார்க்கு எல்லாம் { திருவடிகளைப்பற்றினரெல்லார்க்கும்
அன்பனாம் — அன்பு செய்பவனாய்
செம்பொன் ஆகத்து அவுணனை உடல கீண்டவன் — பொன்போன்ற வுடம்பையுடைய இரணியாசுரனது உடலைக் கீண்டவனாய்
நன் பொன் ஏய்ந்த மதிள் சூழ் } நல்ல பொன்னாலே யமைத்த மதிளாலே சூழப்பட்ட
திரு கண்ண புரத்து அன்பன் { திருக்கண்ணபுரத்திலே விருப்பமுடையவனான எம்பெருமான்
தன மெய்யர்க்கு { தன் திறத்திலே உண்மையாக ஸ்நேஹிக்குமவர்களுக்கு
நாளும் மெய்யன் { எப்போதும உண்மையான ஸ்நேஹமுடையவன்.

***—தன தாளடைந்தார்க்கெல்லாம் அன்பனாகும்="அநாலோசித விசேஷாசேஷ லோகசரண்ய!" என்று எம்பெருமானாருளிச்செய்வதை இங்கு அநுஸந்திப்பது. தனது திருவடிகளையடைந்தாரில் இன்னாரினையாரென்று வாசி பாராதே வஸிஷ்ட சண்டாள விபாகமற எல்லார்க்குமொக்க ஸ்நேஹிக்குமவன் எம்பெருமான். ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில் *யஃ கச்சிதேவ யதி கிஞ்சந ஹந்த ஜந்துஃ பவ்யோ பஜேத பகவந்தமநந்யசேதாஃ, தம் ஸோயமீத்ருச இயாநிதி வாப்யஜாநந் ஹை வைநதேயஸமமபி உரரீகரோஷி* என்று ஆழ்வானருளிச் செய்தது இங்கே அநுஸந்தேயம்.

செம்பொனாகத்தவுணனுடல் கீண்டவன்=ப்ரஹ்லாதாழ்வான் அஸுரயோனியிலே பிறந்திருக்கச் செய்தேயும் அவனது அன்பையே கணிசித்து அவனை விரோதி நிரஸந பூர்வகமாக அநுக்ரஹித்தவன்; அவ்வண்ணமாக எல்லாரையும் அநுக்ரஹிக்க வல்லவன் என்று காட்டினபடி. அப்படிப்பட்ட மஹாகுணம் விளங்கத் திருக்கண்ண புரத்திலே வர்த்திக்கின்ற பெருமான், தன மெய்யர்க்கு நாளும் மெய்யன்=தன் பக்கலில் பாரமார்த்திக ப்ரயோஜந புத்தியுடையார்க்குத் தானும் அவர்கள் பக்கலிலே பாரமார்த்திக ப்ரயோஜந புத்தியையுடையனாயிருப்பன். ஆகவே அப்பெருமான் பக்கலில் பாரமார்த்திக ப்ரயோஜந புத்தியைப்பண்ணி ஆச்ரயியுங்கோளென்றாராயிற்று. ... ... (6)

மெய்யனாகும் விரும்பித்தொழுவார்க்கெல்லாம்*
பொய்யனாகும் புறமேதொழுவார்க்கெல்லாம்*
செய்யில்வாளையுகளும் திருக்கண்ணபுரத்
தையன்* ஆகத்தணைப்பார்கட்கணியனே. (7)

விரும்பி தொழுவார்க்கு எல்லாம { தன்னையே புருஷார்த்தமாக ஆசைப்பட்டுத தொழுமவர்களெல்லார்க்கும்
மெய்யன் ஆகும் — மெய்யன்பனாய்,
புறமே தொழுவார்க்கு எல்லாம் { பிரயோஜநாந்தரங்களுக்காக மேலெழத் தொழுமவர்களுக்கெல்லாம்
பொய்யன் ஆகும் { தன்னை உள்ளபடி காட்டமாட்டாதவனாய்,
செய்யில் வாளை உகளும் திரு கண்ணபுரத்து ஐயன் { கழனிகளில் வாளைமீன்கள் விளையாடப் பெற்ற புரத்திலே யெழுந்தருளி யிருப்பவனான எம்பெருமான்
ஆகத்து அணைப்பார்கட்கு { தங்கள் மனதில் ஊன்றவைத்துக் கொள்பவர்களுக்கு
[அணி]யன — ஸமீபத்திலுள்ளவன்.

***—விரும்பித் தொழுவார்க்கு மெய்யனாகும்=ப்ரயோஜநாந்தரங்களான க்ஷுத்ர பலன்களைக் கணிசியாதே தன்னையே பரமப்ரயோஜநமாகப் பற்றினார் ஆரேனுமாகிலுமாம்; அவர்களெல்லார்க்கும் [மெய்யனாகும்] தன்னுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை உள்ளது உள்ளபடியே காட்டிக் கொடுப்பன் என்றபடி. புறமே தொழுவார்க்கெல்லாம்

பொய்யனாகும்=புறம்பே சில க்ஷுத்ரப்ரயோஜனங்களைக் கணிசித்து அதற்காக ஆச்ரயிப்பார்க்கு அந்த அற்பபலன்களைக் கொடுத்துத் தன்னை மறையாநிற்பனென்கை. இப்படி மெய்யர்க்கே மெய்யனும் பொய்யர்க்கே பொய்யனுமிருக்குமிருப்பைத் திருக்கண்ணபுரத்திலே காட்டிக்கொண்டு வர்த்திக்கும் பெருமான், ஆகத்து அணைப்பார்கட்கு அணியன்—தன்னை ஹ்ருதயத்திலே வைப்பார்க்குக் கையாளாயிருப்பன். *இமௌஸ்ம முநிசார்தூல கிங்கரௌ ஸமுபஸ்திதௌ, ஆஜ்ஞாபய யதேஷ்டம் வை சாஸநம் கரவாவ கிம்* என்று விச்வாமித்ரமுனிவனை நோக்கிச் சொன்னதை அநுஷ்டாந பர்யந்தமாக்குவனென்கை. (7)

அணியனாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்*
பிணியும்சாரா பிறவிகெடுத்தாளும்*
மணிபொனேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
பணிமின்* நாளும்பரமேட்டிதன்பாதமே. (8)

| | | | |
|---|---|---|---|
| தன தாள் அடைந்தார்க்கு எல்லாம் | தன் திருவடிகளைப் பணிந்தவர்களெல்லார்க்கும் | மணி பொன் ஏய்ந்த மதிள் சூழ் | ரத்னங்களும் பொன்களும் பொருந்தின மதிளாலே சூழப்பட்ட |
| அணியனாகும் | அந்தரங்கனா யிருப்பன்; | திரு கண்ண புரம் | திருக்கண்ணபுரத்தி லெழுந்தருளியிருக்கிற |
| பிணியும் சாரா | வியாதி முதலானவைகளும் அணுகமாட்டா; | பரமேட்டி தன் | பரம புருஷனுடைய |
| பிறவி கெடுத்து ஆளும் | ஸம்ஸார ஸங்கத்தை யறுத்து அடிமை கொள்வன் | பாதம் | களை |
| | | நாளும் பணிமின் | எப்போதும் ஆச்ரயிப்பீர்களாக. |

***- தனதாளடைந்தார்கு எல்லாம் அணியனும்=எம்பெருமான் திருவடிகளையடைவது இரண்டுவிதம்; வேறொரு பலனை யுத்தேசித்து அதற்கு ஸாதனமாக இவன் திருவடிகளை யாச்ரயித்தல் ஒருவிதம்; அப்படியன்றிக்கே, 'பலனும் இதுவே, அதற்கு உபாயமும் இதுவே என்று கொண்டு ஆச்ரயித்தல் மற்றொருவிதம். இவ்விதமாக ஆச்ரயிப்பவர்களை இங்குத் தனதாளடைந்தார் என்பதனால் விவக்ஷிக்கப்படுகிறார்கள். "தன் திருவடிகளையே ப்ராப்யம் என்று பற்றினரெல்லாருடையவும்" என்பது ஆறாயிரப்படியருளிச்செயல். அன்னவர்கட்கு [அணியனாகும்] ஸுலபனாவன் என்றபடி. ஸுலபனாகிச்செய்வது என்னவெனில்; பிணியும்சாரா பிறவிகெடுத்தாளும்=துக்கங்களையும் துக்கஹேதுவான ஸம்ஸாரத்தையும் போக்கி அடிமைகொள்வன். ஆகவே, மணியும் பொன்னுமிழைக்கப்பெற்ற மதிளாலே சூழப்பட்ட திருக்கண்ணபுரத்திலே, திருநாட்டிலிருக்கும்படியில் ஒன்றுங்குறையாதே யெழுந்தருளியிருக்கும் சௌரிப் பெருமாளுடைய திருவடிகளையே உபாயமும் உபேயமுமாகப் பற்றுங்கள் என்றாராயிற்று. .... ... ... (8)

பாதநாளும்பணியத் தணியும்பிணி* ஏதம்சாரா எனக்கேலினியென்குறை*
வேதநாவர்விரும்பும் திருக்கண்ணபுரத் தாதியானை* அடைந்தார்க்கல்லலில்லையே. (9)

| | | | |
|---|---|---|---|
| வேதம் நாவர் விரும்பும் | வைதிகர்கள் விரும்பி வர்த்திக்குமிடமான | நாளும் பாதம் பணிய | (அப்பெருமானுடைய) திருவடிகளை எப்போதும் ஸேவிக்க |
| திரு கண்ண புரத்து | திருக்கண்ணபுரத்தி லெழுந்தருளி யிருக்கிற | பிணி | நோய்கள் அறும்; |
| | | ஏதம் சாரா | பாவங்கள் சேரமாட்டா |
| ஆதியானை | முழுமுதற்கடவுளான எம்பெருமானை | | இப்படியான பின்பு |
| அடைந்தார்க்கு | ஆச்ரயித்தவர்களுக்கு | எனக்கு | இப்பெருமானிடத்து ஈடுபட்டிருக்கு மெனக்கு |
| அல்லல் இல்லை | துக்கமொன்று மில்லையாகும். | என் குறை | என்ன குறையுண்டு? (ஒரு குறையுமில்லை.) |

***- பிறர்க்கு உபதேசஞ்செய்வது கிடக்க, தாம் முன்னம் அவனையாச்ரயித்துக் குறைதீர்ந்தபடியைப் பேசிக்களிக்கிறார். அவனது திருவடிகளை யாச்ரயிக்கவே அநாதி காலமாகத் திரட்டின பாவங்களெல்லாம் தொலையும்; இனிமேல் பாவம் வந்து புகாது. இது என்னுடைய அநுபவத்தாலே; நான் குறை தீர்ந்தேனாகையாலே நீங்களும் குறைதீரப்பெற வேணுமென்று சொல்லுகிறேன். வேதமறிந்த வைதிகர்கள்

விரும்பி வர்த்திக்கிற திருக்கண்ணபுரத்திலே ஸந்நிதி பண்ணியிருக்கிற ஜகத்காரண பூதனையடைந்தார்க்கு அல்லல் இருக்குமோ? தாய்மடியிலே சாய்ந்தார்க்கு கிலேசமில்லையென்னுமிடம் சொல்லவேணுமோ? ... ... ... (9)

இல்லையல்லல் எனக்கேலினியென்குறை* அல்லிமாதரமரும் திருமார்பினன்*
கல்லிலேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம் சொல்ல* நாளும்துயர் பாடுசாராவே. (10)

| | | | |
|---|---|---|---|
| அல்லல் இல்லை | துக்கங்கள் தொலையும் | கல்லில் ஏய்ந்த மதிள் சூழ் | கற்பணிமிக்க மதிளாலே சூழப்பட்ட |
| | எனக்கு இனி என் குறை—, | திரு கண்ண புரம் சொல்ல | திருக்கண்ணபுரம் என்று சொன்ன வளவிலே |
| அல்லி மாதர் அமரும ... | தாமரையாளான பெரிய பிராட்டியாருறையும் திரு ... | நாளும் | ஒருநாளும் |
| | ... | துயர் பாடு சாரா | துக்கம் அணுகாது |

***—பக்தியையோ ப்ரபத்தியையோ அனுஷ்டிக்க சக்தரல்லாதவர்கள் திருக்கண்ணபுரமென்று சொன்னவளவிலே ஸமஸ்ததுக்கங்களும் போமென்கிறார். "எனக்கேலினியென்குறை" என்று கீழ்ப்பாட்டிலருளிச் செய்திருக்கச்செய்தேயும் உகப்பின் மிகுதியாலே மீண்டுமருளிச்செய்கிறார். எம்பெருமானை யநுபவிப்பதற்கு இடையூறுனவையெல்லாம் தொலைந்தபின்பு இனியொரு தேசவிசேஷம் தேடிப்போக வேண்டியிருந்ததோவென்கை. பெரியபிராட்டியார் நித்யவாஸம் பண்ணுகிற திருமார்பையுடையவனுகையாலே ஆச்ரயிக்கைக்கு ருசியே வேண்டுவது, காலம் பார்க்க வேண்டா. அப்படிப்பட்டவன் வர்த்திக்கிற திருக்கண்ணபுரமென்று வாயாலே சொல்லவே துக்கங்களென்று பேர்பெற்றவையெல்லாம் காதவழி யகலும். .... ... ... (10)

பாடுசாராவினை பற்றறவேண்டுவீர்* மாடநீடு குருகூர்ச்சடகோபன்* சொல்
பாடலானதமிழ் ஆயிரத்துளிப்பத்தும பாடியாடி* பணிமினவன் தாள்களே. (11)

| | | | |
|---|---|---|---|
| வினை பற் | துக்க ஸம்பந்தம | சொல | அருளிச்செய்த |
| பாடு சாரா | அருகில் கிட்டாதபடி | தமிழ் பாடல் ஆன ... | இப் பத்தும்— |
| அற வேண்டுவீர் | அது தொலையவேணுமென்று இருப்பவர்களே! | பாடி | வாயாரப்பாடி |
| | | ஆடி | அதற்குச் சேர நர்த்தனம் பண்ணி |
| மாடம் நீடு குருகூர் | மாடமாளிகைகள் உயர்ந்த திருநகரியிலே அவதரித்த | அவன் தாள் | அப்பெருமானுடைய |
| சடகோபன் | ஆழ்வார் | களே பணிமின் | களையே தொழுங்கள் |

***—பலனுரைத்துத் தலைக்கட்டவேண்டிய இப்பாசுரத்தில் "இப்பத்தும் பாடியாடிப் பணிமினவன்தாள்களே" என்று உபதேசரூபமாகவே யருளிச்செய்தாரேனினும் இதுவும் பயனுரைப்பதாகவே தலைக்கட்டும். இப்பத்தும் பாடியாடுவார்க்கு அவன் தாள்களையே பணிதலாகிற பேறு ஸித்திக்குமென்பதே பரமதாற்பரியம்.

வினைகள் உங்களருகிலும் வந்து கிட்டாதபடி அவற்றை வேர்ப்பற்றோடே போக்க வேண்டியிருந்திகோளாகில், குருகூர்ச்சடகோபன் இசையோடேகூடப் பாடின தமிழாயிரத்துள் சௌரிப்பெருமாள் விஷயமான இப்பதிகத்தை ப்ரீதியோடே பாடி இருந்த விடத்தில் நிராதேயாடி அவன் திருவடிகளிலே விழுங்கோள் என்றுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று. (11)

ஒன்பதாம்பத்து—பத்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியரியற்றிய

**திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையுரையில்**

ஒன்பதாம்பத்து முற்றுப்பெற்றது.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்